# பனித்திரை

சிந்தர்க்கர்



## ஆசிரியர்

பிரபல பம்பாய்த் தினசரி ஒன்றில் உதவி ஆசிரியராகப் பணியாற்றும் சிந்தர்க்கர், சிறந்த மராட்டி எழுத்தாளர்களில் ஒருவர். கொங்கணப் பிரதேச மக்களின் பழக்க வழக்கங்களை நன்கு உணர்ந்தவர். தாம் கண்டு கேட்டு உணர்ந்த அநுபவங்களைப் படம் பிடித்ததுபோலத் தெளிவாகச் சித்திரிக்கும் ஆற்றல் பெற்றிருக்கிறார். அருமையான பாத்திரங்களைப் படைத்து நம் கண்முன்னே நடமாடச் செய்கிறார்.

பிற நாட்டு நல்லறிஞர் நூல்களைத் தமிழாக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் பம்பாய்த் தமிழ் அன்பர்களில் 'நாகு' ஒருவர். மிகவும் எளிய நடையிலே தெள்ளிய நீரோட்டம் போல இந்த நாவலைத் தமிழாக்கியிருக்கிறார்.

# பனித்திரை

மராட்டி: சிந்தர்க்கர்

தமிழ்: 'நாகு'






கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் : : சென்னை-4.

# இரண்டு வார்த்தைகள்

எனது நண்பரும், சிறந்த மராட்டி எழுத்தாளருமான ஸ்ரீ விட்டல் தாத்திரேய சிந்தர்க்கர் எழுதிய 'பனி' என்னும் மராட்டி நாவலை நான் சென்ற வருஷம் படித்தபோது எனக்கு ஒரு பேராவல் எழுந்தது. அந்த அருமையான கதையைச் சிறிதும் சுவை கெடாமல் தமிழாக்கித் தமிழ்ப் பெரு மக்களுக்குச் சமர்ப்பிக்க வேண்டும் என்பதுதான் அது. அந்த எண்ணம் உதித்த இரண்டொரு நாட்களில் நான் தற்செயலாக ஸ்ரீ சிந்தர்க்கரைச் சந்திக்க நேர்ந்தது. அப்பொழுது நான் அவரிடம் என் விருப்பத்தைத் தெரிவித்தேன். கதையைத் தமிழாக்க அவர் அந்தக் கணமே எனக்கு அநுமதியும் ஆதரவும் அளித்தார். அத்துடன் ஒரு 'நிபந்தனை'யும் விதித்தார். பத்திரிகைக்காரரான சிந்தர்க்கருக்குக் 'கலைமகளைப்' பற்றி ஏற்கனவே தெரிந்திருந்தது. ஆகையால், ''கதையைக் கலைமகள் பத்திரிகைக்கே அனுப்புங்கள்'' என்று உரிமையுடன் உத்தரவிட்டார் அந்தப் 'பொல்லாத' நண்பர். ஆகவே 'கலைமகள்' பத்திரிகையில் பிரசுரிப்பதற்கென்றே தமிழாக்கப்பட்டது ''பனித்திரை' நாவல்.

'பனித்திரை'யை முதலில் தொடர் கதையாகக் 'கலைமக'ளில் வெளியிட்டு, பின்னர் உடனுக்குடனே அதைப் புத்தக வடிவிலும் கொண்டுவந்த 'கலைமகள்' ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். கலைமகள் அதிபர் ஸ்ரீ ந. ராமரத்னம் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகும். தொடர் கதை வெளியானபோது எனக்குக் கடிதங்கள் மூலமும் நேரிலும் பேருக்கமளித்த எண்ணற்ற வாசகர்களுக்கு வந்தனம்.

இத்துடன், நீண்டுகொண்டே செல்லும் என் 'இரண்டு வார்த்தைக'ளுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறேன்.

ஜெயபாலா குஞ்ஜ், ஆரே ரோட்,<br>கோரேகாம், பம்பாய்,<br>செப்டம்பர், 1957.

'நாகு'

# பொருளடக்கம்




# பனித்திரை

## 1

## சண்டை

யசோதை ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். பட்டறையிலிருந்த உலை நன்ருகச் சுடர்விட்டுப் பிரகாசித்துக்கொண் டிருக்க ஆனந்தன் துருத்தியின் கயிற்றைப்பற்றி இழுத்துக்கொண் டிருந்தான். உலையின் செக்கச் செவேலென்ற அந்த ஒளியில் அவனுடைய முகம் யசோதைக்குத் தெளிவாகத் தெரிந்தது. வழக்கம் போலவே அந்த முகம் அவளுக்கு அழகாகத் தோன்றியது. எப்பொழுதுமே உழைப்பதுதான் அவன் வேலை. அதனுல் அவன் ஆனந்தம் அடைவதோ அல்லல் அடைவதோ இல்லை.

யசோதை ஒரு முறை ஆனந்தனைப் பரிவுடன் நோக்கினுள். அவளுக்குச் சிறிது கோபம் வரத்தான் வந்தது. 'இது என்ன விசித்திர இயல்போ, கடவுளுக்குத்தான் தெரியும்!' என்று ஏதேதோ முணுமுணுத்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள் யசோதை.

அவள் கதவைத் திறந்துகொண்டு வெளியில் வந்தாள். ஜிலுஜிலு என்று குளிர்ந்த காற்று வீசிற்று. அப்பொழுதுதான் பொழுது விடிந்திருந்தது. எங்குமே மூடுபனி திரையிட்டிருந்தது. அது மட்டும் இல்லாதிருந்தால், கிழக்குத் திசையில் தங்கத் தகடு போன்ற கதிரவன் உதயமாகி இருந்ததைக் கண்டிருக்க முடிந்

திருக்கும். அவ்வாறு தெரியாவண்ணம் மூடுபனி அகில உலகத்தையே போர்வையிட்டு மூடியிருந்தது. அதனல் அருகிலிருந்த பொருள்கள்கூடக் கண்களுக்குத் தென் படவில்லே. அச்சமயம் பறவைகளின் கீச்சுமூச்சென் னும் கூச்சல்கள் செவிகளில் ஓயாமல் விழுந்துகொண் டிருந்தன. ஆனல் அவை, குளிர் காரணமாகத் தங்கள் கூடுகளை விட்டு வெளிக்கிளம்பவே இல்லே. நடு நடுவே காகங்கள் 'கா கா' என்று கரையும் ஒலியும் கேட்டுக் கொண்டிருந்தது.

மரங்களில் இலைகளிலிருந்து பூமியிலே சொட்டும் முத்துமுத்தான பனித் துளிகளின் ஒலிகூடத் தெளி வாக ஒலித்துக்கொண் டிருந்தது.

யசோதை பட்டறைக்குள் நுழைந்தாள். ஆனந்த னுக்கு எதிரில் , உலைக்கு அருகில் போய் அவள் குளிர் காய உட்கார்ந்தாள்.

ஆனந்தன், தன் வேலையில் ஈடுபட்டிருந்தான். வெளி யில் பல் கிட்டும் குளிராக இருந்தாலும், இடுப்பில் ஒரு வேட்டியைத் தவிர அவன் வேறென்றுமே அணிந்திருக்க வில்லை.

யசோதை தன் மனத்திலேயே, 'இவருடைய போக்கே தனி. வெளியிலே குளிர் கடுமையாக இருக் கிறது ; ஆனபோதிலும் இவர் ஒரு சட்டையைக்கூட அணியவில்லை' என்று எண்ணினள்.

உலையை ஒட்டினற்போல் அவர்கள் வீட்டுப் பூனை உட்கார்ந்து, கண்களை மூடிக்கொண்டு குளிர் காய்ந்துகொண் டிருந்தது. அது நடு நடுவே 'குர் குர்' என்று உறுமிக்கொண் டிருந்தது, யசோதையின் கவ னத்தைக் கவர்ந்தது. உடனே அவள் அதை அன்பு டன் கவனித்தாள். இந்த அன்பையும் இரக்கத்தையுந் தான் அந்தப் பூனை இதுவரையில் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. ஆகவே யசோதை அதைப் பார்த்த வுடனேயே அது 'மியாவ்' என்று இரங்கும் குரலில்

கத்திவிட்டு, வாலைத் தூக்கி யசோதையின் மடிமேல் மெதுவாகத் தாவி ஏறிற்று.

யசோதை, அதைத் தட்டிக் கொடுத்தாள்; தடவிக் கொடுத்தாள். அதனுடன் கொஞ்சினாள்; பிறகு அதைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டாள்.

பூனை 'குர் குர்' என்று கத்திக்கொண்டே இருந்தது. யசோதையின் உள்ளத்தில் எண்ணங்கள் அலைமோதின. இந்தப் பூனையைப்போலவே தாங்கள் இருவரும் ஆலிங்கனம் செய்துகொண்டு உலையின் அருகில் குளிர்காய உட்கார்ந்தால்? ஆனால் ஆனந்தனின் மனத்தில் இம்மாதிரியான கற்பனைகள் எங்கே எழப் போகின்றன? வீட்டுக்கு வெளியிலோ வெட வெடக்கும் குளிர், வீட்டுக்குள்ளோ ஒரு புறம் மனைவி, மறுபுறம் எரிகின்ற உலை. 'இவைகளை விட்டு, உயிரற்ற மரக் கட்டைகளும் இரும்புக் கருவிகளுமே அவருக்கு அதிகம் பிடித்திருக்கின்றன. ஜடப்பொருளான மரக்கட்டையிலிருந்து அழகான பொம்மைகளை மிக்க ஊக்கத்தோடு உருவாக்குவார். ஆனால், அந்தப் பொம்மைகளுக்கும் மேலான என்னுடன் இன்பமாகப் பேசுவாரா? அல்லது பேசிச் சிரிப்பாரா? அந்தப் பேச்சு அவருடைய மனத்துக்கு இன்பம் ஊட்டுமா? இவற்றையெல்லாம் அவருக்கு யாரால் எடுத்துச் சொல்ல முடியும்? மனிதர்களுக்கு வேலையில் அக்கறை இருக்க வேண்டியது உண்மைதான். ஆனால் இப்படியா இராப்பகலாக உழைப்பது? இவர் வாழத் தெரியாதவர். எங்காவது சந்தையிலோ திருவிழாவிலோ சீமைப் பொம்மை ஒன்றைப் பார்த்துவிட்டு வருவது; உடனே அதைப் போலவே அமைப்பதில் தீவிரமாக ஈடுபடுவது; இதைத் தவிர அவருக்கு வேறு வேலையே இல்லை.'

அவள் அதிருப்தியுடன் தன் பார்வையை அவனிடம் செலுத்தினாள், பின்னர், ''ஆனந்த்'' என்று கூப்பிட்டாள்.

''ஆனந்தா? சபாஷ். கணவரைப் பெயரைச் சொல்லியா அழைப்பது! இந்தக் கிராமவாசிகள் இதைக் கேட்டால் வாய்விட்டுச் சிரிப்பார்கள். இது பம்பாய்ப் பட்டணம் அல்ல, யசோதா; இது கொங்கணத்துக் கிராமம். இங்கு மட்டு, மரியாதை எல்லாம் உண்டு''. ஆனந்தன் அவளைப் பாராமல் தன் வேலையைச் செய்துகொண்டே பதில் அளித்தான்.

யசோதைக்கு வெட்கம் வந்துவிட்டது. ஆனால் மறுகணமே அது மாறி, கோபத்தால் நெற்றியில் சுருக்கங்கள் விழுந்தன. அவள் சொன்னாள்: ''இஷ்ஷ்! இந்த விடியற்கால வேளையில் இது யார் காதில் விழப் போகிறது? நாம் இருவரும் ஏகாந்தமாக இருக்கும் போதுகூட நான் உங்களைப் பெயர் சொல்லி அழைக்கக் கூடாதா?...ம்...என்ன? ஏன் பேசமாட்டேன் என்கிறீர்கள்? என்மேல் கோபமா?''

அவளுடைய அந்தக் கொஞ்சும் மொழிகளில் பொதிந்து கிடந்த பொருளைப் புரிந்துகொள்ளாதபடி அவன் அத்தனை முட்டாள் அல்ல. ஆனந்தன் அவளை அன்புடன் பார்த்தான்.

''உங்களுக்குக் குளிரவில்லையா?'' என்று அவள் கேட்டாள்.

''இல்லையடி, இந்தப் பட்டறையில் குளிராவது, மண்ணாங்கட்டியாவது! இங்கு இருபத்துநான்கு மணி நேரமும் வெப்பம் வாட்டி எடுக்கிறது. பார்த்தாயா, என் உடம்பிலிருந்து வேர்வை கொட்டுகிறது?''

உண்மையிலேயே ஆனந்தனின் உடம்பிலிருந்து வேர்வை வற்றாத ஊற்றாக ஊறிக்கொண்டிருந்தது. உடலெல்லாம் நனைந்து தெப்பமாகி இருந்தது.

இப்பொழுது ஆனந்தன இழைப்புளியால் ஒரு மரத்தை இழைக்கத் தொடங்கினான். யசோதை, ''நானும் உங்களுக்கு உதவி செய்யட்டுமா? இந்த உலையை நன்றாக எரிய விடட்டுமா?'' என்று கேட்டாள்.

ஆனந்தன் சிரித்தான். ''பட்டுப்போன்ற உன் மெத்தென்ற கையாலா எரியவிடப் போகிறாய்?''

''ஆமாம். மெல்லிய கைகள் முரட்டுக் கைகள் ஆவதற்குத்தான்.''

இவ்வாறு கூறிவிட்டு, யசோதை, துருத்தியின் கயிற்றைப் பிடித்து இழுக்க ஆரம்பிக்கவே நீறு பூத்துக் கிடந்த கனல் தகதகவென்று எரியத் தொடங்கியது.

''ச்ச்ச்...எதற்காகக் கரியை வீணாக எரிய விடுகிறாய்?'' என்று கேட்டான் ஆனந்தன.

''வீணாக எரிந்தால் என்ன? நஷ்ட ஈடு கொடுப்பேன்!'' என்றாள் அவள் சிரித்துக்கொண்டே.

''என்ன கொடுப்பாய்? எத்தனை கொடுப்பாய்?''

இதைக் கேள்வியுற்ற யசோதை, துருத்தியின் கயிற்றைத் தன் பிடியிலிருந்து நழுவவிட்டாள். ஆனந்தனுக்கு மிகவும் அருகில் வந்து நின்றாள். அவன்மீது இன்பங் கனிந்த பார்வையை வீசினாள். மையிட்ட கண்கள் தொடுத்த மையல் கணைகள் அவனுடைய உள்ளத்தை ஊடுருவிச் சென்றன. ஆனந்தன் அவளுடைய உள்ளங்கவர் உருவத்தைக் கண்டு மயங்கி நின்றான்.

அவளுடைய பார்வையில் இருந்த பாவம் அவனுடைய நெஞ்சை நெகிழச் செய்தது. குளிர் காலம் என்ற காரணத்துக்காக அல்ல, அந்த மோகனப் பார்வையில் என்னதான் வசியம் இருந்ததோ! அவனுடைய ரோமங்கள் குத்திட்டு நின்றன. அவன் உடலில் மின்சாரம் பாய்ந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. உடனே அவன் சட்டென்று அவளைக் கட்டியணைத்துச் செவ்விதழ்களின் தெவிட்டாத இன்பத்தை நுகர்ந்தான்.

''கிடைத்துவிட்டதல்லவா நஷ்ட ஈடு?'' குறும்பாகக் கேட்டாள் யசோதை.

''அம்...அம்...நீ ஒரு பெரிய வாயாடி! பம்பாய்ப் பெண்களே இப்படித்தான் இருப்பார்களோ?''

என்று கிண்டலாகக் கேட்டான் ஆனந்தன். யசோதா பதிலொன்றும் பேசாமல் புன்னகை பூத்தாள்.

வெளியில், மூடியிருந்த பனித்திரை விலகி இருந்தது. அருகிலிருந்த மரமொன்றின் கிளையில் உட்கார்ந்து, பறவைகள் கூச்சலிட்டுக்கொண் டிருந்தன. அவ்வழியே போவோர் வருவோரின் பேச்சுக் குரல்கள் நடுநடுவே காதுகளில் விழுந்துகொண் டிருந்தன. இப்பொழுது நன்ருகப் பொழுது விடிந்திருந்தது.

யசோதை தன் வேலைகளைக் கவனிக்க வீட்டுக்குள்ளே சென்ருள். ஆனந்தன் மட்டும் பட்டறையில் தன் வேலையில் ஈடுபட்டிருந்தான். இதற்குள் அவனை யாரோ கூப்பிடும் குரல் கேட்டது. ''ஆனந்தா... ஆனந்தா...!''

''ஓ யாரது? ராவ்ஜியா?''

''ஆமாம். விடியற்காலையிலே என்னப்பா செய்துகொண்டிருக்கிருய்?'' என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தான் ராவ்ஜி.

''விசேஷமாக ஒன்றும் இல்லை. அது சரி; நீ எங்கே புறப்பட்டாய்?'' என்று ஆனந்தன் ராவ்ஜியைக் கேட்டான்.

''ஒரு வேலையாகப் பக்கத்து ஊருக்குக் கிளம்பினேன். போகிற வழியிலே உன்னையும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்'' என்று கூறிக்கொண்டே, தன் தோளின்மேல் இருந்த கம்பளியைக் கீழே போட்டு, அதன்மீது உட்கார்ந்தான் ராவ்ஜி.

''அப்படியா? மெத்த மகிழ்ச்சி. நீ வந்ததும் நல்லதாகப் போயிற்று. துருத்தியின் கயிற்றைப் பிடித்துச் சிறிது நேரம் இழு அப்பா'' என்று ஆனந்தன் அவனைக் கேட்டுக்கொண்டான். ராவ்ஜி, துருத்தியின் கயிற்றைப் பற்றி இழுக்கத் தொடங்கினுன். ஆனந்தன் உலையில் கரியை நிரப்பி, அது எரிய ஆரம்பித்ததும் அதில் ஓர் இரும்புத் துண்டைக் காய வைத்தான்.

பிறகு அவர்களிடையே பல விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சி நடந்தது. இந்த ஆண்டு, மாம்பழம் அதிகமாகக் காய்க்குமா, காய்க்காதா? ஏரி குளங்களிலுள்ள தண்ணீர் போதுமா, போதாதா? பக்கத்து வீட்டுக்காரன் பசு, கன்றை ஈன்றதா இல்லையா, என்பவை போன்ற பல செய்திகள் அடிபட்டன.

நெருப்பில் வைத்திருந்த இரும்புத் துண்டம் நன்றாகப் பழுக்கப் பழுக்கக் காய்ந்தது. அனந்தன் அதை ஓர் இடுக்கியால் எடுத்து, பட்டறைக் கல்லின்மேல் வைத்தான். பிறகு அதை வாட்டமாகப் பிடித்துக் கொண்டு, ராவ்ஜியை அருகிலிருந்த சம்மட்டியை எடுத்து அடிக்கச் சொன்னான்.

உடனே ராவ்ஜி தன் பலம் கொண்ட மட்டும் பட்டடைக் கல்லின்மீது இருந்த சூடான இரும்புத் துண்டத்தைச் சம்மட்டியால் தாக்கத் தொடங்கினான். அப்படி அவன் ஒவ்வொரு தடவை அடித்த போதும் அத் துண்டத்திலிருந்து தீப்பொறிகள் பறந்தன. ஆனந்தன் அதை இடுக்கியால் புரட்டிக் கொண்டே வந்து, தனக்கு வேண்டிய உருவத்தை அதற்கு அளித்து வந்தான். நெருப்புப் பொறிகள் ஆனந்தனின உடம்புமீதும் தெறித்துக்கொண் டிருந்தன. ஆனால் தீப் பட்டுப் பட்டு, அவனுடைய உடல் எற்கனவே காய்ந்து போயிருந்தது. துருத்திக்கு அருகில் தவங் கிடந்த பூனையின் மேலும் இரண்டொரு தீப்பொறிகள் பறந்தன. உடனே அது தன் கோபத்தை, 'குர், மியாவ்' என்ற உறுமல்களின் மூலம் வெளிப்படுத்திவிட்டு அங்கிருந்து ஓட்டம் பிடித்தது.

ஆனந்தன் அந்தத் துண்டத்தை மீண்டும் உலையில் போட்டான். ராவ்ஜி கயிற்றைப் பிடித்து இழுத்துக் கொண்டே இருந்தான்.

''அடேடே, மறந்து போய்விட்டேனே!'' என்றான் ராவ்ஜி திடீரென்று.

''என்னடா? என்னடா மறந்துவிட்டாய்?'' என்று கேட்டான் ஆனந்தன் அலட்சியமாக.

''டேய், எந்திரத்தின் அச்சு முறிந்துவிட்டது என்று நான் சொல்லி எத்தனை நாள் ஆகிவிட்டது? இன்னும் நீ தருகிருய்; இல்லையா?'' இந்தக் கேள்வியில் சிறிது கோபம் தொனித்தது.

''என்னடா அவசரம்? தருகிறேனே!'' என்று கூறிச் சமாதானப்படுத்த முயன்முன் ஆனந்தன்.

''என்றைக்குத் தரப் போகிருய்? என் பாட்டி இதற்காக என்னை வைதுகொண்டே இருக்கிருள்.''

''ராவ்ஜி, நான் உள்ளதைச் சொல்லட்டுமா? இந்தச் சில்லறை வேலைகளைச் செய்ய யாருக்கப்பா நேரம் இருக்கிறது? பார்க்கப் போனுல் இம்மாதிரி வேலைகளையெல்லாம் நீங்களே வீட்டில் செய்துகொள்ள வேண்டும். கை நகம் வெட்டக் கோடாரிக்காரன் எதற்கு?''

''வெகு அழகாகத்தான் இருக்கிறது போ, நீ பேசுகிறது!'' என்று ஏளனமாகவும் உரிமையுடனும் பேசினுன் ராவ்ஜி. ''கைநகம் வெட்டுவதும் கோடாரிக் காம்பு பொருத்துவதும் உன்போன்ற பட்டறைத் தொழிலாளியின் வேலை. ஆண்டுக்கு நாலு கலம் நெல் வாங்குகிருயே! அதை என்ன தண்டத்துக்கா கொடுக்கிருேம்? பறையன், நாவிதன், பிராமணன், கொல்லன் ஆகிய எல்லோரும் அவரவர்கள் தொழிலைச் செய்யத் தான் வேண்டும். அது அவர்கள் கடமை.

''இதோ பார், ராவ்ஜி! உரிமை கடமை என்று எல்லாம் என்னிடம் சட்டம் பேசாதே! தகராறு பண்ணுதே. நான் மிகவும் பொல்லாதவன். நீ கொடுக்கும் அந்தப் பிச்சைக்கார நாலு கலம் நெல் என் பூனையின் வயிற்றுக்குக்கூடப் போதவில்லை. இனிமேல் எனக்கு உன்னுடைய வேலையும் வேண்டாம்; நாலு கலம் நெல்லும் வேண்டாம்.''

''நீ வேண்டாம் என்று சொல்லிவிட்டால் நான் கேட்பேனு என்ன? நான் இந்தக் கிராமத்து நாட்டாண்மைக்காரர் பரம்பரை; உன் எஜமானன். தொன்று தொட்டு உன் குலத்தார் எங்களுக்காக உழைத்து வருகிறுர்கள். ஆகையால் நீயும் எனக்குப் பணியாற்றக் கடமைப்பட்டவன். நெல் அளக்காவிட்டாலும் நான் இட்ட வேலைகளை நீ செய்துதான் ஆக வேண்டும்.''

''இல்லை, ஒருகாலும் இல்லை. இனி உன் வேலைகளை நான் கையால்கூடத் தொடமாட்டேன்!'' என்று வெறுப்புடன் கத்தினுன் ஆனந்தன்.

''டேய், உன் வீறுப்பும் வறட்டுச் செருக்கும் என்னிடம் வேண்டாம். எந்திரத்தின் அச்சைப் பொருத்துவது கௌரவக் குறைச்சல் என்று நினைக்கிறுய்; அந்தப் பிச்சைக்காரப் பொம்மைகளைச் செய்கிறுயே, அது என்னடா! அதைச் செய்ய உனக்கு வெட்கமாயில்லை?''

''ராவ்ஜி, நாவை அடக்கிப் பேசு; ஜாக்கிரதை!''

''என்னடா பயமுறுத்துகிறுய்? நான் உன் எஜமான் என்பதைக்கூட மறந்துவிட்டாயா? உன்னைச் சொல்லிக் குற்றமில்லை அப்பா. உன் குலம் என்ன, உன் யோக்கியதை என்ன? இல்லாவிட்டால் இன்னும் ஏன் இந்தக் குடிசையில் குடியிருக்கப் போகிறுய்? மட்கிப்போன கூரை போய், மங்களூர் ஓடு ஏறி இருக்காதா?

இதைக் கேட்டதும் ஆனந்தனின் உடல் நடுங்கியது. அவனுடைய கை அவனை அறியாமலே சம்மட்டியை எடுத்தது.

''அடே அப்பா, உனக்கு இருக்கிற செருக்கும் தோரணையும்! வேலை செய்யத் தெரியாவிட்டாலும் வீறுப்புக்குக் குறைச்சல் இல்லை. நீ இருக்கிற பவிசுக்கு உனக்கு ஒரு பட்டறை, உனக்கு ஒரு பெண்சாதி!...'' என்று அடுக்கிக்கொண்டே போனுன் ராவ்ஜி.

தன் பெண்சாதியின் பெயரை இழுத்ததும் ஆனந்தனால் அவமானத்தைப் பொறுக்கவே முடியவில்லை. உடனே அவன் சம்மட்டியைத் தூக்கி, ராவ்ஜியின் மண்டையைப் பிளக்க ஓங்கிவிட்டான். ஆனால் ஓங்கின கை மண்டையைப் பிளக்கவில்லை. அதை யாரோ பிடித்து நிறுத்தினார்கள்.

ஆனந்தனின் கையைப் பிடித்து நிறுத்தியது வேறு யாரும் இல்லை. யாசோதைதான் அவன் கையைப் பிடித்து நிறுத்தினாள். ஜன்னலின் அருகே நின்று, அவர்களுடைய தர்க்கத்தை ஆரம்பமுதல் கவனித்துக் கொண்டே வந்த அவளுக்கு, இந்த வாய்ச் சண்டை முற்றி, ஆபத்தில் வந்து முடியும் என்பது நன்றாகத் தெரிந்திருந்தது. ஏனென்றால் தன் கணவனுக்கு முன் கோபம் மிகுதி என்பதை அவள் அறிந்திருந்தாள். ஆகவே, ஆனந்தன் முதலில் சம்மட்டியைக் கையில் எடுத்ததும் எங்கே கொலை விழுந்துவிடுமோ என்று பயந்தவளாய், ஜன்னலை விட்டுப் பட்டறைக்குள் நுழைந்து, ஆனந்தனுக்குப் பின்னால் நின்றுகொண்டாள். அவள் எதிர்பார்த்தபடியே ஆனந்தன் ராவ்ஜியின் மண்டையைப் பிளக்கச் சம்மட்டியை ஓங்கியதும் அவள் சட்டென்று பாய்ந்து, கையைப் பிடித்து நிறுத்தினாள். அவளுக்கு ஆனந்தனின்மேல் சொல்ல முடியாத கோபம் வந்தது.

''இது என்ன வீண் சண்டை!'' என்று அவள் ஆனந்தனைக் கேட்டாள், வெறுப்புடன்.

அதற்கு அவன், ''இதில் நீ குறுக்கிடாதே. இது என் கௌரவத்தைப்பற்றிய விஷயம்'' என்று யசோதையிடம் கூறிவிட்டு, ராவ்ஜியின் பக்கம் மீண்டும் திரும்பினான். ஆனால் யசோதை அவன் கையிலிருந்த சம்மட்டியைப் பிடுங்கிக்கொண்டாள். ஆகவே அவன் ராவ்ஜிமேல் வெறும் கையுடன் பாய்ந்தான். ராவ்ஜியின் முகத்தில் இரண்டு மூன்று குத்துகள் விட்

டான். வாயிலிருந்து ரத்தம் கொட்டிற்று. அடுத்த கணமே ராவ்ஜி மூர்ச்சையாகிக் கீழே விழுந்தான்.

''அடேடே! என்ன காரியம் செய்துவிட்டீர்கள்?'' என்று பதறிக் கேட்டாள் யசோதை.

''பொழுது விடிந்ததும் என் பட்டறைக்கு வந்து என் கோபத்தைப் பதம் பார்த்தான். நான் அந்தக் கழுதைக்கு சரியான புத்தி புகட்டினேன்!'' என்றான் ஆனந்தன். யசோதை ஒன்றுமே தோன்றாமல் கல் சிலையைப்போல் நின்றுகொண் டிருந்தாள்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு ராவ்ஜி மெதுவாக எழுந்திருந்தான். உடம்பில் ஒட்டியிருந்த தூசியைத் தட்டிக்கொண்டு, ஆனந்தனை வைதுகொண்டே அவன் வழியே. போய்ச் சேர்ந்தான்.

ராவ்ஜி போனபிறகு யசோதை வீட்டுக்குள் வந்தாள். ஆனந்தனும் அவளைத் தொடர்ந்து சென்றான். அப்பொழுது அவள் ஆனந்தனை நோக்கி, ''உங்கள் கோபத்துக்கும் ஓர் எல்லை இருக்க வேண்டாமா? இன்று நான் மட்டும் இல்லாதிருந்தால் கொலையல்லவா நடந் திருக்கும்?'' என்று வருத்தத்துடன் கூறினாள்.

''அவன் பேசியதை நீ கேட்டாயா?''

''கேட்டேன். ஆனால் அதற்காக நீங்கள் இவ்வளவு கோபப்பட்டால் எப்படி?''

''நாட்டாண்மைக்காரன் பரம்பரையில் பிறந்து விட்டான் என்பதற்காக அவன் வாய்க்கு வந்தபடி பேசலாமா? நான் என்ன, அவன் வீட்டு வேலைக் காரனா? மேஸ்திரி என்றால் மானம் இல்லாதவனா? மட்டு மரியாதை கெட்டவனா? அல்லது ஊராருக்கெல் லாம் ஊழியம் செய்பவனா? கண்டவன் எல்லாம் வந்து, கண்டபடி பேசிவிட்டுப் போக நான் என்ன கண்ணியம் குறைந்தவனா? நீயே சொல்? நான் ஒன்றும் இந்தப் பட்டிக்காட்டு மேஸ்திரி அல்ல. நான் பட்டணக் கரைச் சீமானுக்கும்! தெரியுமா?''

''எல்லாம் தெரிந்துதான் கிடக்கிறது!'' என்று கூறி, யசோதை அழகு காட்டினுன்; ''அதனுல்தான் நமக்கு இந்தக் கதி, வீட்டில் உப்புக்கல்லுக்கு வழி யில்லை; ஆனுல் வாய்வீச்சு மாத்திரம் பிரமாதம்!''

''ஏண்டி இருக்காது? என் வீட்டில் சாப் பாட்டுக்கு வழியில்லைதான், நாதியில்லைதான். அதற் காக ஒருவனிடமும் நான் தலைகுனிந்து நிற்கப் போவ தில்லை!'' என்று மார்தட்டிக் கூறினுன் ஆனந்தன்.

''ஊரார் இடும் வேலைகளை ஒழுங்காகச் செய்து, பணம் சம்பாதிக்காமல் உங்களுக்கு ஏன் இந்தக் குதர்க்க புத்தி? மனிதனுக்குச் சுய மரியாதை இருக்க வேண்டியதுதான். ஆனுல் வேலை விஷயத்தில் வாய்த் துடுக்கும் விதண்டாவாதமும் இருக்கக்கூடாது. நீங்கள் உங்களுக்குத் தோன்றியதைச் செய்யுங்கள். சீமைப் பொம்மைகள், விளையாட்டுச் சாமான்கள் எது வேண்டு மானுலும் செய்யுங்கள். ஆனுல் உங்களையும் உங்கள் மனைவியையும் இந்தக் கேவலமான நிலையில் வைக்காதீர் கள். ஊரார் வேலைகளைச் செய்தால்தான் நாலு காசு கிடைக்கும்; மதிப்புடன் வாழலாம்; என் விருப்பங் களையும் பூர்த்தி செய்யலாம். நான் இருக்கும் இந்தக் கோலத்தைப் பார்த்தீர்களா? கல்யாணமான நாள் முதலாக ஒரு நல்ல புடைவை, நகை, நட்டு என்று எதற்காவது வழியுண்டா? ஒரு நாளாவது இன்பமாகக் கழித்தோம் என்ற ஆறுதல் உண்டா? தாறு தாருகக் கிழிந்திருக்கும் இந்தக் கந்தலைக் கட்டிக்கொண் டிருக் கிறேனே என்று உங்களுக்கு ஏதாவது வெட்கம் இருக்கிறதா? எனக்கல்லவா மானம் போகிறது!''

''யசோதை விம்மினுள். அவளுடைய வருத்தம் எல்லை கடந்து போயிற்று. கண்களிலிருந்து நீர் பெருக் கெடுத்து ஓடிற்று.

இதைக் கண்ட ஆனந்தன் வாயடைத்துப் போனுன். இன்றுவரை யசோதை அவனை எதிர்த்துப் பேசினதே

இல்லை. சோறுண்டு, பாலுண்டு, நமது மடியில் சிவனே யென்று கிடக்கும் பூனை, சில சமயம் நம்மீதே சீறுவதைப் போல இருந்தது, யசோதையின் நடத்தை அவனுக்கு.

ஆகையால் அவன் உயிரற்ற சிலைபோல அவளுடைய முகத்தையே நோக்கிக்கொண் டிருந்தான். அவள் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் அவனுடைய உள்ளத்தை ஊடுருவிச் சென்று, சம்மட்டி கொண்டு அடிப்பதுபோல இருந்தது. அவளுடைய இந்த விபரீத நடத்தை அவனுடைய மதிப்பையே சுக்கு நூறாக அடித்துவிட்டதுபோலத் தோன்றியது அவனுக்கு. ஆனால் அதே சமயம் யசோதையைத் திருப்பித் தாக்க அவனது மனம் இடம் தரவில்லை. ஏனென்றால் அவள் சொன்னதெல்லாம் பொய்யல்லவே? அவ்வளவும் உண்மைதானே? அதை அவன் ஒப்புக்கொள்ளத்தானே வேண்டும். ஆனால் தன்னுடைய நடத்தையில் தவறு இருப்பதாக ஆனந்தனுக்குத் தோன்ற வில்லை. பம்பாய் போன்ற நாகரிக நகரத்தில் பிறந்து, வளர்ந்த, படித்த பெண்ணான யசோதை, கிராமத் தொழிலாளியான தன்னை மணந்து, மன அமைதி குலைந்து வாழ்கிறாள் என்பது அவனுக்கு நன்றாகத் தெரிந்துதான் இருந்தது. ஆனால், அதிலும் தன் குற்றம் ஒன்றுமே இல்லை என்றுதான் அவனது மனம் எடுத்துச் சொல்லிற்று. அவளது மனப்படி, அவளது இச்சைப்படி, அவளைத் தான் சுகமாக வைக்க முடியவில்லை என்பதை ஆனந்தன் உணர்ந்துவிட்டான். அவனுடைய சிந்தனை விரியத் தொடங்கியது.

'யசோதை என்னை ஏன் எதிர்த்துப் பேச வேண்டும்? என்னுடைய பழக்க வழக்கங்களைப்பற்றி ஊரார்தாம் வம்பளக்கிறார்கள் என்றால், என் மனைவியும் அவர்களைப்போல் இடித்துக் கூற வேண்டுமா? நான் என்ன பைத்தியக்காரனா? என்னைப்போன்ற திறமை

மிக்க மேஸ்திரியை இந்த மாவட்டம் முழுவதும் தேடினலும் கண்டு பிடிக்க முடியுமா? எனக்குள்ள துணிச்சல்தான் இங்கே யாருக்காவது இருக்கிறதா? என்ன பைத்தியக்காரப் பேச்சு! நான் வேலையே செய்யவில்லையாம்! ஆம், நான் வேலை செய்யவில்லை தான்; இனி ஒருகாலும் செய்யப் போவதில்லை. சில்லறை வேலைகளைக் கையாலும் தீண்டப்போவதில்லை. என்னுடைய திறமைக்கு ஏற்ற வேலை கிடைத்தால் தான் நான் செய்யப்போகிறேன். இந்த மனப்பாங்கு காரணமாக நான் பட்டினி கிடந்தாலும் குறை இல்லை. சோறு இல்லாமல் செத்தாலும் பாதகம் இல்லை. ஆனல் ஒருவர் வீட்டு வாசற்படியிலும், வேலைக்காக, நான் நாய் போலக் காத்துக் கிடக்கப் போவதில்லை. கிராமத்துப் பெரியவர்கள் சீமான்களாக இருக்கலாம்; நான் மட்டும் என்ன தாழ்ந்தவனு? அவர்களை எல்லோரும் மதிப்பது அவர்களுடைய மூதாதையரின் பெயருக்காக; ஆனல் என்னை எல்லோரும் மதிப்பது என்னுடைய கைத்திறனுக்காக! என்னுடைய மூளைக்காக! இந்த விஷயங்களெல்லாம் யசோதைக்குத் தெரியவேண்டியவை. அவள் படிப்பற்ற பட்டிக்காட்டுப் பெண் அல்ல. பட்டணத்தில் வாழ்ந்த புத்திசாலிப் பெண். ஆகையால்தான் அவளுக்கு அதிகமாகத் தெரியவேண்டி இருந்தது. ஆனல் அதற்கு மாருக, அவளும் ஊராருடன் சேர்ந்து, மனைவி என்பதையும் மறந்து, என்னை அவமானப்படுத்த வேண்டுமா? சீசீ, யசோதா! என்ன தவருன காரியம் செய்து விட்டாய்? நீயுமா என்னை ஏச வேண்டும்? கண்டபடி பேசவேண்டும்? நீயே என்னைக் கேவலப்படுத்திஞல் இந்த வீட்டில் என்னை மதிப்பவர் யார் இருக்கிருர்கள்? இனி இங்கே நான் தங்குவதே தப்பு. எந்த இடத்தில் எனக்குக் கௌரவம் கிடைக்குமோ எந்த இடத்தில் உழைப்புக்கு மதிப்பு இருக்குமோ எந்த இடத்தில் என் மனத்துக்கு நிம்மதி ஏற்படுமோ, அந்த இடத்துக்குத்

தான் நான் செல்ல வேண்டும். இனி இந்த வீடும் வேண்டாம்; இந்தப் பிச்சைக்கார ஊரும் வேண்டாம்! ஆனந்தா, ஒரு கணமும் தாமதிக்காதே, ஓடிவிடு, ஓடிவிடு, வேகமாக ஓடிவிடு..'

ஆனந்தனின் கால்கள் அசைந்தன. அவை வெளியே வாசற்பக்கம் அவனைக் கொண்டு சென்றன. அப்பொழுது அவனுடைய சிரம், சினத்தால் சூடேறி இருந்தது. கண்களில் தீப்பொறிகள் பறந்தன. உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. அவன் ஒரு முறை யசோதையைப் பார்த்தான். உடனே வீட்டைவிட்டு வேகமாக வெளியேறினான்.

யசோதையின் மனச்சுமை இப்பொழுது குறைந்திருந்தது. ஆனந்தன் வீட்டை விட்டுச் செல்வதை அவள் நன்றாகப் பார்த்தாள். 'அவர் எங்கே போகப் போகிறார்? கோபம் தணிந்ததும் தாமாகவே திரும்பி விடுவார்' என்று அவள் நினைத்தாள். ஆனால் மறு விநாடியே, 'அவர் என்மேல் கோபமாகச் செல்லவில்லையல்லவா? என்னுடைய வார்த்தை அவருடைய உள்ளத்தைப் புண்படுத்தி இருக்காதே?' என்று பலவித எண்ணங்கள் தோன்றின.

யசோதை மன நிம்மதியை இழந்தாள். உடனே புடைவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்டு, அவள் பரபரப்புடன் வெளியே வந்தாள். அங்கே ஆனந்தனைக் காணவில்லை. ஆகவே அவள் வெளிமதில் வாசலண்டை ஓடோடிச் சென்றாள். அவளைத் தொடர்ந்து பூனையும் நாலு கால் பாய்ச்சலில் ஓடி வந்தது.

மேல்மூச்சு வாங்க ஓடிவந்த யசோதை தன் பார்வையைச் சுற்று மதிலுக்கு வெளியே செலுத்தினாள். அதோ, வெகு தூரத்தில் ஆனந்தன் சென்றுகொண்டிருந்தான். இப்பொழுது அவளால் உணர்ச்சியை அடக்க முடியவில்லை. ஆனந்தனை வாய்விட்டுக் கதறிக் கூப்பிட வேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று.

உடனே அவள், ''ஆனந்தா, ஆனந்தா!'' என்று உரக்கக் கத்தினாள். ஆனால் அவளுடைய தொண்டை வறண்டு போயிருந்தது. வார்த்தைகள் ஒன்றும் வெளிப்படவே இல்லை.

இப்பொழுது ஆனந்தனின் உருவம் வெகு தொலைவில் மறையும் தறுவாயில் இருந்தது. அதைக் கண்டதும் அவளுடைய வாய் லோசாக முணுமுணுத்துக்கொண்டே இருந்தது.

'ஆனந்தா ஆனந்தா என் ஆருயிர் ஆனந்தா..!'

அவளைச் சுற்றிச் சுற்றி வந்துகொண் டிருந்த பூனையும் அவளுடைய துயரத்தில் பங்கு கொள்ளுவதைப் போல், 'மியாவ், மியாவ்' என்று விடாமல் கத்திக் கொண்டே இருந்தது.

''என்ன விசேஷம்? ஏன் கத்துகிறாய்? என்று கேட்பதுபோல, அவர்கள் வீட்டுத் தோட்டத்துக்கு வழக்கமாக வரும் சிட்டுக் குருவி ஒன்று, அருகில் இருந்த மரக்கிளையில் உட்கார்ந்து, கீச்சுக் கீச்சென்று கூவிக்கொண்டே இருந்தது.

# 2
# குழம்பிய மனம்

அன்று முழுவதும் ஆனந்தன் திரும்பி வரவே இல்லை. 'எங்காவது போயிருப்பார், மாலைக்குள் திரும்பி வந்துவிடுவார்' என்று யசோதை கருதி இருந்தாள். அந்த எண்ணத்தில் அவள் அன்று காலை முதல் வாசற் படியிலேயே உட்கார்ந்து அவனை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள். அன்ன ஆகாரம் ஏதுமே இன்றி, கண்ணீரால் நிரம்பியிருந்த அவளுடைய விழிமலர்கள், 'அவர் எப்போது வருவாரோ?' என்று ஏங்கிக் கிடந்தன. சில சமயம் வெகு தூரத்தில் ஆனந்தனைப்போல் யாரோ ஒருவர் வருவது தெரியும். உடனே அவளுடைய முகம் மலர்ச்சி அடையும். ஆனால் மறு கணமே அம் மனிதன் யாரோ வேற்றவன் என்று தெரிந்ததும் அவளுடைய மனம் வருத்தம் அடையும்.

அன்று முழுவதும் அழுது அழுது அவளுடைய கண்கள் வீங்கிவிட்டன. அவ்வீட்டில் பூனையைத் தவிர அவளுக்குச் சமாதானம் கூறுவோர் யாருமே இருக்க வில்லை. அந்த வாயில்லாப் பிராணி அவளுடைய தோள்மேலும் மடிமேலும் தாவிக் குதித்து. 'மியாவ், மியாவ்' என்று கத்தி, அடிக்கடி தன் அநுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டே இருந்தது.

இரவு கவிந்துகொண்டது. கும்மிருட்டு அதிகரிக்க அதிகரிக்க, யசோதையின் மனத்திலும் பீதி பெருகிக் கொண்டே வந்தது. 'யாரிடமாவது சொல்லி அவரைத் தேடச் சொல்லலாமா?' என்று அவளுடைய உள்ளம் தவித்தது. 'ஆனால் யாரிடம் சொல்வது? எப்படிச் சொல்வது? என்ன சொல்வது? மனைவியிடம் கோபித்துக்

கொண்டு வீட்டை விட்டுச் சென்றுவிட்டார் என்று சொல்லவா? அப்படிச் சொன்னால் ஊர் மக்கள் என்னைத் தானே, ''சீ, தூ'' என்று காறித் துப்புவார்கள்?'

ஆனந்தன் அன்றிரவு நிச்சயமாகத் திரும்பிவந்தால், பட்டினியாகத்தான் வருவான் என்று நினைத்து, அவனுக்கு மிகவும் பிடித்தமான சமையலைச் செய்து வைத்தாள் யசோதை.

யசோதை, வீட்டில் தனியாகவே இருந்ததால் வெளிக்கதவுக்குத் தாழ்ப்பாள் போட்டிருந்தாள். அடிக்கடி வெளியில் சத்தம் கேட்ட போதெல்லாம் அவள் ஓடிச் சென்று, தன் கணவன் வந்துவிட்டானா என்று கதவிடுக்கின் வழியாக நோக்குவாள். மறுகணமே ஆசாபங்கத்துடன் திரும்புவாள். அவளுடைய குழம்பிய மனத்தில் பல எண்ணங்கள் தோன்றின. நெஞ்சின் அலைகள் குமுறிக் கிளம்பின. பழைய நினைவுகள் மீண்டும் மீண்டும் தோன்றின.

இப்பொழுது யசோதைக்குத் தன் இளம் பருவ நினைவுகள் வந்தன. அந்த நாட்களை அவள் பம்பாயில் எத்தனை சுகமாகக் கழித்திருக்கிறாள்? இந்தப் பட்டிக்காட்டில் வந்து பரிதவிக்கப் போகிறோம் என்று அவள் கனவிலும் கருதியிருக்கவில்லை. அப்போது அவள் பள்ளிக்குப் போவாள்; வகைவகையான உணவுகளை அருந்துவாள்; நேர்த்தியான உடைகளை அணிவாள்; நாகரிகமாகப் பின்னல் அலங்காரம் செய்து கொள்வாள். உயர் வகுப்புப் பெண்களான தன் தோழிகளுடன் மாலையில் சௌபாட்டிக் கடற்கரைக்கும் மலபார் ஹில் பூங்காக்களுக்கும் உல்லாசமாக உலாவப் போவாள். இரவு, வீடு திரும்பியதும் பள்ளிப் பாடங்களைச் சிறிது நேரம் படிப்பாள். பிறகு ஹார்மோனியம் வாசித்து இனிமையாகப் பாடுவாள். பின்பு உணவருந்திவிட்டு, அமைதியாக உறங்குவாள்.

அப்போது அவளுக்கு ஒருவிதக் கவலையும் இருக்க

வில்லை. பணக்காரக் குடும்பங்களுடன் பழகி வந்ததால் அவளுடைய விருப்பங்களும் பெருகிக்கொண்டே வந்தன.

யசோதையின் தந்தை, தாமாப்புர் கிராமத்தைச் சேர்ந்தவர். ஆனால் அவர் தமது வாழ்நாள் முழுவதையும் பம்பாய்த் துறைமுகத்தில் பணியாற்றுவதிலேயே கழித்துவிட்டார். கொங்கணத்திலிருந்து சிறுவயசிலேயே பம்பாய்க்கு வந்த அவர், துறைமுகத்திலுள்ள பட்டறையில் வேலைக்கு அமர்ந்தார். அவ்வேலையில் அவர் படிப்படியாக உயர்ந்து, கடைசியில் அந்த இலாகாவின் மேஸ்திரி ஆனார். அத்துடன் பணவசதியும் பெருகிற்று. அப்போதுதான் யசோதை பிறந்தாள். அந்தப் பெண் மணி பிறந்த நல்ல வேளையோ என்னவோ அவருக்கு ஒருவிதக் கவலையும் குறைவும் இருக்கவில்லை. பண வசதி பெருகினால் இட வசதியும் பெருக வேண்டாமா? ஆகையால், நள பஜாரிலிருந்த ஒற்றை அறையைக் காலி செய்துவிட்டு, டாக்கூர் த்வாரிலுள்ள ஒரு பெரிய இடத்துக்கு இருப்பிடத்தை மாற்றினார். அங்கு அக்கம் பக்கத்தில் பணக்காரர்கள் குடியிருந்ததால், குழந்தை யசோதைக்கு உயர் வகுப்பினரின் பழக்க வழக்கங்கள் படிந்தன. அவள் பள்ளிக்குச் சென்றாள். மூன்றாவது படிவம் வரையில் ஆங்கிலமும் கற்றாள்.

உடை அலங்காரத்திலும் அவள் தன் தோழிகளைப் பின்பற்றினாள். அவள் முன்பே பேசும் பொற்சித்திரம். ஆகவே அவள் புனைந்து வந்த நாகரிக ஆடையணிகள் அவளுடைய எழிலுக்கு மெருகூட்டின. இந்த அழகுப் பதுமையைக் கண்டு, அவளுடைய பெற்றோர்களுக்கு மிகுந்த பெருமை. ஆனால் அதே சமயம் அவர்களுக்கு ஒரு கவலையும் ஏற்பட்டது. சௌந்தரியச் சிற்பமான தங்கள் அருந்தவப் புதல்வியின் மனத்துக்கேற்ற மணாளன், தரித்திரம் பிடித்த கொங்கண தேசத்தில் கிடைப்பானா என்பதுதான் அந்தக் கவலை.

யசோதையும் தனக்கு எப்படிப்பட்ட கணவன்

வாய்க்க வேண்டும் என்று கனவு கண்டு வந்தாள். "உயர்குலத்தைச் சேர்ந்தவனுக இருத்தல் வேண்டும்; உன்னத குணம் படைத்தவனுகவும் இருத்தல் வேண்டும்; அழகும் அன்பும் அறிவும் ஒருங்கே சேர்ந்த ஆணழகன் வேண்டும். என் கனவுகளையும் இச்சைகளையும் பூர்த்தி செய்பவனுகவும் இருக்க வேண்டும்' என்பதே அவ ளுடைய விருப்பம்.

யசோதைக்குத் தம்பியோ தங்கையோ பிறக்க வில்லை. ஆகவே அவளேதான் பெற்ருேர்களின் ஏகபோக அன்பைப் பெற்றுவிட்டாள். வீட்டில் அவள் வைத்ததே சட்டம். அவளுடைய விருப்பத்தை யாருமே புறக் கணிக்க முடியாது. இந்த நிலையில் அவளிடம் சிறிது பிடிவாத குணம் குடி கொண்டதில் என்ன ஆச்சரியம்?

ஆனல் பதினைருவது வயசில் அவளுக்கு ஒரு பேரிடி காத்துக் கிடந்தது. அவளுடைய தந்தையும் தாயும் விஷ ஜுரம் காரணமாக ஒருவர் பின் ஒருவராக விண்ணுலகு எய்தினர். பேதை யசோதை இந்தப் பரந்த உலகில் அநாதையாகத் தனித்து விடப்பட்டாள். ஆகவே அவள் தன் ஒரே உறவினனுன சிற்றப்பனுடன் நாகரிகப் பம்பாய்ப் பட்டணத்தை விட்டுக் கொங்கணத்துப் பட் டிக்காடு ஒன்றுக்குச் செல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டது. சிறிது நாட்களில் அந்தச் சிற்றப்பாவேதான் யசோதையை ஆனந்தனுக்கு மணமுடித்து வைத்தான்.

யசோதை தனக்குப் பிடித்த கணவன் வேண்டும்; படித்த கணவன் வேண்டும் என்று தன் சிற்றப்பனிடம் எத்தனையோ மன்ருடிஞள். ஆனல் அதற்கு அவன் செவி சாய்க்கவே இல்லை. ஆகையால் அவள் அடம் பிடித் தாள்; அழுதாள்; அலறிஞள்; அட்டகாசம் செய்தாள்; ஆனல் அவனே அதட்டினன்; அடித்தான்; அழிந்துபோ என்ருன். இறுதியில் அவள் வேறு கதியின்றி விதியே என்று ஆனந்தனை மணக்க உடன்பட்டாள்.

மணம் நடந்த அன்று, கண்ணீரும் கம்பலையுமாக

நின்ற யசோதை, தன் விருப்பங்கள் சுக்கு நூறுகச் சிதறிப்போனதை நினைத்துப் புலம்பினுள். ஆனந்தன் அழகாகத்தான் இருந்தான்; ஆனுல் எழுதப் படிக்கத் தெரியாதவன். 'ஹரி விஜயம், 'ராம விஜயம், 'சனி மகாத்மியம்' முதலிய பெரிய எழுத்துப் புத்தகங்களைத் தான் அவன் எழுத்துக்கூட்டிப் படிப்பான். அவைகளைத் தவிர வேறு எந்தப் புத்தகத்தையும் கையால்கூடத் தொட்டதில்லை.

ஆனந்தனின் வீட்டில் யசோதை கல்யாணமாகி முதல் முதலாக வந்த நாளன்று,அங்கிருந்த நிலைமையைக் கண்டு, அவளுக்கு வயிற்றைக் குமட்டிற்று. ஆனந்தனின் கருமை கலந்த சிவப்பான மேனி, வாட்டசாட்டமான உடல், களை பொருந்திய முகம் இவை யெல்லாம் அவளைக் கவரத்தான் கவர்ந்தன. ஆனுல் அவன் இடுப்பில் கட்டியிருந்த அழுக்குப் படிந்த வேட்டி, நாற்றமடிக்கும் பூணூல், சிக்குப் படிந்த பரட்டைத் தலை-இவை மட்டும் அவளுக்குப் பிடிக்கவே இல்லை. 'இவர் மட்டும் தலையைக் கிராப் செய்துகொண்டு, நல்ல உடைகள் அணிந்தால் எத்தனை அழகாகத் தோற்றமளிப்பார்!' என்று அவளுடைய மனம் எண்ணமிடத் தொடங்கியது.

ஆகவே முதல் காரியமாக இரண்டொரு நாட்களில் வீட்டை நன்றுகச் சுத்தம் செய்து, அதன் உருவத்தையே மாற்றிவிட்டாள் யசோதை. அதைக் கண்ட ஆனந்தன், வியப்பில் மூழ்கினுன். 'சபாஷ் யசோதா! என்னுடைய கருத்தே வேறு விதமாகத்தான் இருந்தது; பம்பாயில் பிறந்து வளர்ந்த நாகரிகப் பெண்ணுடன் நான் எப்படி வாழ்க்கை நடத்தப்போகிறேன் என்று அஞ்சி இருந்தேன். ஆனுல் நான் நினைத்ததற்கு மாறுக இருக்கிறுய் நீ.''

''அப்படியா! அதெப்படி?'' என்று யசோதை கேட்டாள்.

''பம்பாய்ப் பெண்கள் என்றுல் சோம்பேறிகள்,

கர்வம் கொண்டவர்கள், மந்தபுத்தி உடையவர்கள் என்றுதான் நான் கேள்விப் பட்டிருந்தேன். ஆனால் என் அநுபவம் மட்டும் அதற்கு விலக்காகவே இருக்கிறது.''

ஆனந்தனின் இந்தப் பாராட்டுப் பேச்சுக்கள் யசோதைக்குச் சிறிது ஆறுதல் அளித்தன.

ஆனந்தன் தொடர்ந்து சொன்னான்: ''நீ பலே கைகாரி. இந்த ஏழையின் குடிசையை ராஜபவனம் ஆக்கிவிட்டாயே.''

''ஏழையையும் ராஜாவாக்கி விடுகிறேன்'' என்று கூறி, அவள் கண்ணைச் சிமிட்டினாள்.

இதைக் கேட்ட ஆனந்தன், ஆனந்த வாரிதியில் மிதந்தான். 'நாம் எத்தனை அதிருஷ்டசாலி! இத்தனை எழிலும் பண்பும் உடைய மனைவி நமக்குக் கிடைத்தது நாம் செய்த பாக்கியம்!' என்று உடல் பூரித்தான்.

மறுநாள் முதல் ஆனந்தனின் வாழ்க்கையில் மாறுதல்கள் ஏற்படத் தொடங்கின. அவன் சலவை செய்த துணிகளை அணிய ஆரம்பித்தான். பூணூலின் நிறம் மாறியது. இதுகாறும் எண்ணெயே பார்க்காமல் வறண்டு போயிருந்த அவனுடைய பரட்டைத் தலை மறைந்து, அழகாக வகிடு எடுத்த கிராப்புத் தலை காட்சியளித்தது. இதைக் கண்ணுற்ற அக்கம் பக்கத்து அக்கப்போர்க்காரர்கள், 'மனைவியால் மாறிய மணாளன்' என்று அவனைப் பரிகாசம் செய்தனர்.

ஆனந்தனின் வீட்டில் யசோதைக்கு முழுச் சுதந்தரம் இருந்தது. அங்கே அவளைக் கேள்வி கேட்பார் யாரும் இல்லை. ஆயினும், அவளுக்கு என்னவோ அங்கு ஒரு குறை இருக்கத்தான் இருந்தது. இளம் பிராயத்தில் அவள் நடத்தி வந்த உல்லாச வாழ்க்கையின் சித்திரம் அவளுடைய கண்ணெதிரில் அடிக்கடி தோன்றிக் கொண்டே இருந்தது. பம்பாயிலேயே வேலையில் இருக்கும் படித்த பையன் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தால் எத்தனை இன்பமாக இருக்கும் என்று எண்ணி, அவள்

எப்பொழுதும் வருத்தப்பட்டுக்கொண்டே இருப்பாள். அந்த வருத்தம் அவளை அல்லும் பகலும் விடாமல் வாட்டிக்கொண்டே இருந்தது.

நகை நட்டுகளை அணிந்து, சிறந்த உடைகளை உடுத்துக் கவலையின்றி ஊர் சுற்றிக்கொண்டிருந்த நாட்கள் எங்கே? இப்பொழுது இருக்கும் தரித்திர நிலைமை எங்கே? இன்று அவள் கழுத்திலே தாலியைத் தவிர வேறு நகைகளே இல்லை. பம்பாயில் பெற்ருேர் வீட்டில் அவளுக்கு வேண்டிய மட்டும் சாப்பாடு கிடைத்துக்கொண்டிருந்தது. ஆனல் இங்கேயோ இரண்டு வேளைச் சாப்பாட்டுக்கே லாட்டரி. பம்பாயில் விலை உயர்ந்த சேலைகளை உடுத்து வந்தாள். ஆனல் இங்கே கிழிந்த புடைவைகளைக் கட்டிக்கொண்டிருக்கிருள். இந்தக் கேவலமான நிலையை நினைத்ததும் யசோதைக்கு அழுகை பீரிட்டுக் கொண்டு வந்தது.

இந்த வீட்டில் நான் என் ஆயுள் முழுவதையும் எப்படிக் கழிக்கப்போகிறேன்? ஆனந்தன் மிக்க அன்புடன்தான் நடந்துகொள்கிருர். ஆயினும் அவருக்குச் சுகபோக வாழ்க்கையில் அக்கறையே இல்லையே. என்னுடைய ஆவல்களை அவரால் நிறைவேற்ற முடியுமா? பம்பாயில் ஒரு வேலையைத் தேடிக்கொள்ளுங்கள் என்று நான் எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்; ஆனல் அதை இவர் லட்சியம் செய்தால் தானே?'

யசோதை நிம்மதியை இழந்தாள். நிம்மதி குலைந்ததில் அவள் எப்பொழுது தூங்கினுள் என்பதுகூட அவளுக்குத் தெரியவில்லை.

அதிகாலை. அவள் திடுக்கிட்டு எழுந்தாள். வெளிக் கதவை யாரோ தட்டுவதுபோல் இருந்தது. அது தன் கணவராக இருக்கலாம் என்று அவளுக்குப் பட்டது. உடனே அவள் எழுந்து, மண்ணெண்ணெய் விளக்கை ஏற்றினுள். அந்தச் சிம்னி விளக்கைக் கையில் பிடித்துக்

கொண்டு கதவருகே வந்தாள். யாராவது கதவைத் தட்டுகிறார்களா என்று உன்னிப்பாகக் கவனித்தாள். மீண்டும் யாரோ கதவைத் தட்டுவதுபோல் இருந்தது.

உற்சாகம் பொங்க யசோதை தாழ்ப்பாளை நீக்கிக் கதவைத் திறந்தாள். கதவைத் திறந்ததும் ஜில்லென்று குளிர்ந்த காற்று வீசிற்று. ஆனால் அங்கே யாருமே இருக்கவில்லை. பூனை மட்டும் வாசற்படியில் நின்று, 'மியாவ் மியாவ்' என்று கத்திற்று. ஆசாபங்கமும் கோபமும் ஆத்திரமும் பொங்க அவள் பலங்கொண்ட மட்டும் பூனையைத் தன் காலால் எட்டி உதைத்தாள். ஆனால் அந்தத் தந்திரக்காரப் பூனை சிறிது விலகிக்கொண்டது. ஆகவே அவளுடைய கால்விரல்கள் வாசற்படியில் வேகமாக மோதின. கட்டை விரலில் ரத்தம் பீரிட்டுக்கொண்டு வந்தது. வலி பொறுக்க முடியவில்லை. ''ஐயையோ! அம்மாடி!' என்று யசோதை வாய்விட்டுக் கதறி அழுதாள்.

# 3
# புறப்பாடு

அன்று பகல் முழுவதும் யசோதை ஒரு காலை நொண்டி நொண்டி நடந்தாள். அதைக் கண்ட அயல் வீட்டுக்காரி, ''என்னடி யசோதா? காலுக்கு என்னடி?'' என்று விசாரித்தாள்.

''அடிபட்டது, மாமி.''

''எங்கேயடி? ரொம்ப வலிக்கிறதா?''

''வாசற்படி இடித்துவிட்டது, மாமி: இப்போது அவ்வளவு வலி இல்லை. ஆனால் கட்டை விரல் மட்டும் விண் விண் என்று கடுக்கிறது.''

''ஏதாவது மருந்து தடவுகிறது தானேடீ: அவன் எங்கே ஆனந்தன்? நேற்று முதல் காணுமே? நேற்று அவன் ராவ்ஜியை அடித்து நொறுக்கிவிட்டானமே; அது உண்மைதானே?''

யசோதை பதிலே பேசவில்லை.

அதைக் கண்ட அந்த அம்மாள், ''ஊர்க்காரர்கள் எல்லாம் வெகுண்டிருக்கிறார்களாம். ஆனந்தனைப் பஞ்சாயத்தாரின் முன்னிலையில் நிறுத்தப் போகிறார்களாம். நம் துகாராம் நேற்று ராத்திரி சொல்லிக்கொண்டிருந்தான்.''

யசோதை ஒன்று விடாமல் கேட்டுக்கொண்டே இருந்தாள். பஞ்சாயத்து என்றதும் அவள் திடுக்கிட்டு, ''என்ன? பஞ்சாயத்தார் முன்பா? அவர்கள் என்ன செய்வார்கள்?'' என்று கவலையுடன் கேட்டாள்.

''என்ன செய்வார்களா? தண்டனை விதிப்பார்கள்; அல்லது ஊரை விட்டே ஓட்டிவிடுவார்கள். அவர்கள் நாட்டாண்மைக்காரர்கள் அல்லவா? கிராமமே அவர்

களுக்குத்தானே சொந்தம்? அவர்களுடைய நிலத்தில் தானே நாம் எல்லாரும் குடியிருக்கிறோம்?''

யசோதை ஒன்றுமே பேசவில்லை. ஆனால் நெற்றியில் சுருக்கங்கள் விழ, ''உம்ம்ம்'' என்று பெருமூச்செறிந்தாள்.

அயல் வீட்டுக்காரி விடவில்லை. ''ஆனந்தன் எங்கே?'' என்று மீண்டும் கேட்டாள்.

''யாருக்குத் தெரியும்? நேற்று முதல் அவர் வீட்டுக்கே வரவில்லை.''

''என்னடி சொல்கிறாய்? ஆனந்தன் வீட்டில் இல்லையா? ராத்திரி அவன் வரவில்லை? அப்போது, அவன் பயந்து எங்காவது ஓடியிருப்பான்.''

யசோதை மௌனமாக இருந்தாள்.

''என்னவோ அம்மா, உன் போதாத காலம், நீ அவனுக்கு வாழ்க்கைப்பட்டிருக்கிறாய். குரங்கின் கையில் பூமாலை அகப்பட்ட மாதிரிதான் இந்தக் கல்யாணம். அவனுடைய குணமே விசித்திரமானது. சிறு வயசு முதற் கொண்டே அவன் போன போக்குத்தான். ஊரார் வேலையை ஒழுங்காகச் செய்து கொடுக்க மாட்டான். வம்புக்கும் தும்புக்கும் தயாராக நிற்பான். அவனுக்கு இருக்கிற வாய்த் துடுக்கும் செருக்கும், அப்பப்பா! அதைப்பற்றிக் கேட்காதே! ஆனால் பையன் என்னவோ புத்திசாலி. மனம் வைத்தானானால் எதையும் செய்துவிடுவான். போன வருஷம் வண்டியூர்த் திருவிழாவிலே சாவி கொடுத்தால் ஓடும் ஒரு சீமை மோட்டாரைப் பார்த்தான். மறுநாளே அதைப்போலச் செய்துவிட்டான். அவனுக்கு மூளை அபாரம்; ஆனால் எதுவும் லட்சியம் இல்லை. இவ்வளவு இருந்தும் என்ன பிரயோஜனம்? அவனுடைய வாய்ப்பேச்சு வினையாகத்தான் முடிகிறது. நான் சொல்கிறேனே என்று வருத்தப்படாதே, யசோதா. உன்னைப்போன்ற மனைவி வாய்ப்பதற்கு அவன் புண்ணியந்தான் பண்ணியிருக்க வேண்டும். இதெல்லாம் அந்த

மடையனுக்கு எங்கே தெரிகிறது? உன்னைப்போல ராஜாத்தி இந்தச் சோம்பேறிக்கா கிடைக்க வேண்டும்? அது நீ பண்ணின பாவம்!''

யசோதை அழத் தொடங்கினாள். இதுகாறும் அவள், தன்னிடம் யாராவது பரிவு காட்டுகிறார்களா என்று எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள். எதிர்பார்த்ததைப் பக்கத்து வீட்டுக்காரியிடமிருந்து பெற்றபோது அவள் துயரம் எல்லை மீறிப் போயிற்று.

கிணறு வெட்டப்போய்ப் பூதம் கிளம்பியதைக் கண்ட அயல் வீட்டுக்காரி திடுக்கிட்டாள். ''காலை வேளையில் இப்படி அழாதே, அம்மா. அவன் எப்போது வரப் போகிறான் என்று சொல்லிவிட்டுப் போனானா? எங்கே போகிறான் என்றாவது கூறினானா? இல்லை? என்ன பண்ணுவது இந்த இழவுக்கு? உம்ம்ம்ம், அவன் எங்கே போகப் போகிறான்? வருவான், வருவான், சாகிறதற்கு முன்னாலே யாவது....''

''சீசீ! இப்படி அச்சானியமாகப் பேசாதீர்கள்! மாமி.''

''கோபிக்காதே. வாய் தவறி வந்துவிட்டதம்மா. சரி, நீ உள்ளே போ. அவன் கண்டிப்பாய் வருவான். நீ வீணாகக் கவலைப்படாதே'' என்று தைரியம் கூறிவிட்டு, பக்கத்து வீட்டுக்காரி அங்கிருந்து மெதுவாக நழுவினாள்.

''ஆனந்தன் வீட்டை விட்டு ஓடிவிட்டான்'' என்று அவள் ஊரெல்லாம் தமுக்கடித்தாள்.

ஆனந்தன், ராவ்ஜியை நையப் புடைத்துவிட்டு ஊரை விட்டே ஓடிவிட்டான் என்ற செய்தி, ஊர் எங்கும் பரவியது. ஆகவே ஊரில் உள்ளவர்கள் யசோதைக்கு ஆறுதல் கூறுவதற்காக வந்தனர். ஒவ்வொருவரும் தமக்குத் தோன்றிய கேள்விகளைக் கேட்டனர். அவைகளுக்கெல்லாம் பதிலளித்துப் பதிலளித்து யசோதை சோர்ந்து போனாள்.

மூன்று நாட்கள் ஆகியும் ஆனந்தன் திரும்பி வரவே

இல்லை. அந்த மூன்று நாட்களையும் யசோதை மிகுந்த கவலையுடனும் வருத்தத்துடனும் கழித்தாள். அவளுடைய உள்ளம் துயரத்தின் எல்லையை எட்டிவிட்டது. மக்கள், வாய்க்கு வந்தபடியெல்லாம் பேச ஆரம்பித்தனர்.

''ஆனந்தன் இப்பொழுது எங்கே திரும்பி வரப் போகிறான்? அப்படி வரத்தான் அவனுக்கு என்ன தகுதி இருக்கிறது?'' என்று சிலர் பேசினார்கள். ''நான்கு நாட்களுக்குப் பிறகு அவன் தானாகவே திரும்பி வருவான். அவனுக்குப் போக்கிடம் ஏது! கழுதை கெட்டால் குட்டிச் சுவர்.''-இவ்வாறு சிலர் கேலி செய்தார்கள்.

'அவர் கண்டிப்பாக வருவார்' என்ற ஒரே நம்பிக்கையின்மேல் யசோதை நாட்களை எண்ணிக்கொண்டிருந்தாள்.

நான்காம் நாள் மாலையில் கதிரவன் மறைந்துவிட்டான். அப்பொழுதும் ஆனந்தன் வரவில்லை. அவள் நம்பிக்கையை இழந்தாள். அவளுடைய உள்ளத்தில் என்ன என்னவோ விசித்திரமான எண்ணங்கள் தோன்றி மறைந்தன. அவளால் அழுகையை அடக்கவே முடியவில்லை. ஆனந்தனுக்குத் தான் அபசாரம் செய்துவிட்டதாக எண்ணி மனம் ஒடிந்து போனாள். 'நான் மதியாமல் பேசினேன் என்று என்மேல் உங்களுக்குக் கோபமா? உங்களுடைய நன்மைக்காகவேதானே நான் அப்படிப் பேசினேன்? உரிமை இருப்பதனால்தானே அப்படிப் பேசினேன்? அது தவறு என்றால் நான் மன்னிப்புக் கேட்கத் தயாராக இருக்கிறேன். நீங்கள் தயவு செய்து வீடு திரும்பிவிடுங்கள். சண்டாளி நான். என்ன காரியம் செய்துவிட்டேன்! அப்போது என் நாவில் சனி இருந்திருக்க வேண்டும். இல்லையேல் நான் பதியையே வீட்டைவிட்டு விரட்டி இருப்பேனா? எனக்குத் தாய் இல்லை; தந்தை இல்லை; பதியும் அருகில் இல்லை. இப்பொழுது நான் யாருக்காக உயிர் வாழ வேண்டும்? கொல்லைப்

புறத்தில் உள்ள பாழும் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்துகொள்ளத்தான் வேண்டும்' என்று அவளுடைய அந்தராத்மா சவுக்கடி கொடுத்துக்கொண் டிருந்தது; தன் உயிரை மாய்த்துக்கொள்வதைத் தவிர வேறு மார்க்கமே இல்லை என்று யசோதை தீர்மானித்துவிட்டாள்.

இதற்குள் மீண்டும் ஒரு முறை அவள் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் பார்த்தாள். காலையில் சென்ற மாடுகள் வீடு திரும்பிக்கொண் டிருந்தன. ஆகாயத்தில் பல விதமான பறவைகள் கூட்டங் கூட்டமாகப் பறந்து வந்து, கூடுகளில் அடைந்துகொண் டிருந்தன. அங்கே நாள்தோறும் வரும் சிட்டுக்குருவியும் மரக் கிளையில் வந்து உட்கார்ந்தது.

ஆனால் ஆனந்தன்....?

அவன் மாத்திரம் வரவே இல்லை. யசோதை வியாகுலம் அடைந்தாள்.

''ஏன் இந்த வியாகுலம்?'' என்று கேட்பதுபோல் அந்தச் சிட்டுக் குருவி ஒரு முறை கீச்சிட்டது.

இப்பொழுது யசோதையின் கவனம் சிட்டுக் குருவியிடம் சென்றது. அவள் பம்பாயில் இருந்தபோது ரேடியோவில் ஒரு பாட்டை அடிக்கடி கேட்பது வழக்கம். அது இப்பொழுது நினைவுக்கு வந்தது. மனத்துக்குச் சாந்தி ஏற்படட்டும் என்று அவள் அந்தப் பாட்டை மெதுவாகப் பாடத் தொடங்கினாள்:

'சிட்டுக்குருவி சிட்டுக்குருவி
சேதி தெரியுமா?—என்னை
விட்டுப் பிரிஞ்சு போன கணவன்
வீடு திரும்பலே—
சிட்டுக்குருவி சிட்டுக்குருவி
சேதி தெரியுமா?'

பாட்டு முடிந்தபோது அவளுடைய தொண்டை வறண்டுபோயிருந்தது. சோகக் கடலிலிருந்து கரையேற வழியில்லாமல் தவித்துக்கொண் டிருந்தாள்.

இன்று பூனை வழக்கத்தைவிட அதிகமாக அவ ளுடன் நெருங்கிப் பழகியது. 'மியாவ், மியாவ்' என்று ஓயாமல் கத்திக்கொண்டே இருந்தது. அடிக்கடி அவளைச் சுற்றி வந்து, அவள்மேல் தாவி ஏதோ சொல்ல முயன்றது. ஆனால் யசோதைக்கு இதெல்லாம் எரிச்சலாகவே இருந்தது. அவள் பூனையைத் தூக்கி எறிந்து, ''நீயும் என்னை எதற்காகத் தொந்தரவு செய்கி ருய்?'' என்று கடிந்துகொண்டாள்.

அதற்குப் பதில் அளிப்பதுபோல் பூனை விடாமல் கத்திக்கொண்டே இருந்தது. அதை லட்சியம் செய் யாமல் யசோதை கண்களை மூடியவாறு ஆனந்தனைப் பற்றியே யோசித்துக்கொண் டிருந்தாள்.

இதற்குள் யாரோ மெல்லிய குரலில், ''யசோதா, யசோதா!'' என்று கூப்பிடுவதுபோல் இருந்தது. ஆனால் அவள் கண்களைத் திறக்கவே இல்லை. ஆயினும் அது ஆனந்தனின் குரல்தான் என்பதை மட்டும் கண்டு கொண்டாள்.

தன் கணவர் கனவில்தான் வந்து கூப்பிடுகிருர் என்கிற மயக்கம் அவளுக்கு ஏற்பட்டது. ஆகையால் அந்த இன்பக் கனவை முறிக்க வேண்டாம் என்று நினைத்துத் தன் கண்களை இன்னும் இறுக மூடிக்கொண் டாள் அவள்.

ஆனல் அது கனவல்ல என்பதை அவள் அறிய வில்லை. உண்மையாகவே ஆனந்தன் வந்திருந்தான். அவன் மெதுவாக அவளை நெருங்கினன்; யசோதையின் தோளில் கையை வைத்தான். அந்தக் கை பட்டதும் யசோதை புளகாங்கிதம் அடைந்தாள். அப்பொழுதும் அவள் கண்களைத் திறக்கவே இல்லை.

ஆனந்தன் அவளுடைய மாசற்ற மதிமுகத்தைக் கண்கொட்டாமல் சிறிது நேரம் நோக்கிக்கொண் டிருந் தான். அப்பொழுது அவன் உள்ளத்தில் என்றும் இல்லாத அன்பு பொங்கி வழிந்தது. உடனே அவன்

சட்டென்று அவளுடைய செவ்விதழ்களின் இன்பத்தைப் பருகிவிட்டு, ''யசோதா, என் கண்ணே யசோதா! எழுந்திரு. உன் ஆனந்தன் வந்துவிட்டான்'' என்று அவள் காதில் மெல்லச் சொன்னான். யசோதை திடுக்கிட்டுக் கண்களைத் திறந்தாள். இருவர் கண்களும் உள்ளங்களும் ஒன்றாகக் கலந்தன.

யசோதை ஒன்றுமே பேசவில்லை. அவள் விம்மி விம்மி அழுதாள். ஆனந்தன் அவளுடைய முதுகைத் தடவிக் கொடுத்த வண்ணம் அவளைச் சமாதானப்படுத்திக்கொண் டிருந்தான்.

இதற்குள் பூனை அவர்களுக்கிடையில் புகுந்து புகுந்து சென்றுகொண் டிருந்தது.

அளவு கடந்த அழுகையும் ஆனந்தமும் காரணமாக யசோதை சோர்ந்து போய் இருந்தாள். அவளுடைய மனச் சுமை இப்பொழுது குறைந்திருந்தது. அதனால் அவள் எழுந்து உட்கார்ந்தாள். ஆனந்தனை நேருக்கு நேரே கண்டதும் அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவனாலும் சிரிப்பை அடக்க முடியவில்லை.

''யசோதா, நான் வருவேனோ மாட்டேனோ என்று நீ வழிமேல் விழி வைத்திருந்தாய், அல்லவா?'' என்று அவன் கேட்டான்.

''இல்லவே இல்லை. துளிக்கூட இல்லை'' என்று அவள் பதில் அளித்தாள்.

''சட்! சுத்தப் பொய்'' என்று சொன்னான் ஆனந்தன், அவளுடைய கன்னத்தை வருடியவாறு. ''நீ சொல்லாவிட்டாலும் உன்னுடைய கண்கள் சொல்லுகின்றனவே. அது சரி, கொஞ்ச நேரத்துக்கு முன் நீ எந்தக் குருவியுடன் பேசிக்கொண் டிருந்தாய்?''

யசோதைக்கு வெட்கமாக இருந்தது. ''நீங்கள் அதைக் கேட்டீர்களா?''

''ஆமாம். மறைந்து நின்று, பாட்டு முழுவதையும் கேட்டேன்.''

"அது போகட்டும். என்மேல் கோபம் கொண்டா நீங்கள் வீட்டை விட்டுப் போனீர்கள்?"

"இல்லையடி, உன்மேல் நான் கோபப் படுவேனு? என்மேலேயே எனக்கு வெறுப்பாக இருந்தது. அதனுல் தான் சென்றேன்."

"எங்கே?"

"எங்கேயா? வேறு எங்கே? நேரே ஆற்றங்கரைக்குத் தான். அங்கே மால்வனுக்குப் போகும் படகு நின்று கொண்டிருந்தது. அதில் போய் ஏறிக்கொண்டேன். இரவில் தேவ்பாக்கை அடைந்தேன். அங்கே பாலே கரின் வீட்டில் தங்கினேன். அப்பொழுது தேவ்பாகின் ஸாவ்கார் மோத்திராம் சேட் பெரிய பங்களாக் கட்டப் போவதாகத் தெரிய வந்தது."

"ஹூம்."

"அவரிடம் ஏதாவது வேலை கிடைக்கும் என்று நினைத்து மறுநாள் காலையில் அவர் பங்களாவுக்குச் சென்றேன். அப்பொழுது அங்கே வீடு கட்டுவதைப் பற்றித்தான் பேச்சு நடந்துகொண் டிருந்தது. சேட் டிடம் நான் யாரென்று தெரிவித்ததும் அவர் என்னை வேலைக்கு வைத்துக்கொள்ளச் சம்மதித்தார். ஆகையால் பங்களாக் கட்டி முடியும் வரையில் நான் அவரிடந்தான் வேலை செய்யப் போகிறேன்."

"பங்களாக் கட்டி முடிக்க எத்தனை நாட்கள் பிடிக்கும்?"

"எத்தனை நாட்களா? யாருக்குத் தெரியும்? குறைந் தது ஏழெட்டு மாதங்களாவது ஆகலாம்."

"அப்போது, அது வரையில் நான் இங்கே தனி யாகவா இருக்க வேண்டும்?" -யசோதையின் முகம் சுருங்கியது.

"இல்லையடி இல்லை. நீ இல்லாமல் எனக்கு மட்டும் அங்கே மனம் அமைதியாக இருக்குமா? ஆகையால் இரு வருமே போவோம்."

''எப்பொழுது?''

''நாளைக் காலையில்.''

''நாளைக் காலையிலா? இத்தனை சீக்கிரமாகவா?''

''ஆமாம். நாளைக்கேதான். ஏன்? அதில் என்ன சங்கடம் இருக்கிறது?''

''இல்லை, அப்படி ஒன்றும் இல்லை. அதற்குள் சாமான் கீமான் எல்லாம் மூட்டை கட்டியாக வேண்டுமே என்றுதான் பார்த்தேன்.''

''அதற்காகக் கவலைப்படாதே. எல்லாம் முடியும். போக வேண்டும் என்றால் போகத்தான் வேண்டும்.'' ஆனந்தனின் பேச்சில் கண்டிப்புத் தொனித்தது.

''சரி.''

பேச்சை அதனுடன் நிறுத்திவிட்டு யசோதை மிக்க உற்சாகத்துடன் எழுந்திருந்தாள். அடுப்பை மூட்டி, ஆனந்தனுக்குப் பிடித்த பலகாரங்களாகச் செய்தாள். இருவரும் சேர்ந்தே சாப்பிட உட்கார்ந்தனர். நான்கு நாட்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் அவள் சாப்பிட்டாள். சாப்பிடும்போது அவர்களிடையில் ஒரே கேலியும் சிரிப்புமாக இருந்தது.

பின்னர் இருவருமாக மூட்டைகளைக் கட்டினர். தங்களுக்குத் தேவையான சாமான்களைக் கோணியில் போட்டுக் கட்டி, ஆற்றங்கரைக்கு எடுத்துச் சென்றான் ஆனந்தன்.

மறுநாள் காலை ஆனந்தனும் யசோதையும் தேவ்பாக் செல்லப் புறப்பட்டனர். அவர்களுடன் பூனையும் ஓடி வந்தது. சிட்டுக்குருவி எங்கோ போயிருந்தது.

அவர்கள் அதிகாலையில் எங்கோ செல்வதைக் கண்ட அயல் வீட்டுக்காரி, ''ஆனந்தா, எங்கே புறப்பட்டு விட்டாய்?'' என்று கேட்டாள்.

''மால்வண் போகிறோம்.''

ஆனந்தன் ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்ததும், சாமான்களை எல்லாம் படகில் ஏற்றினான். கரையில் ஒரே

கூட்டம். அவர்கள் அனைவரும் ஆனந்தனிடம் சரமாரி யாகக் கேள்விகள் கேட்டனர். ''வீடு கட்டும் வேலைக்காக மால்வண் செல்கிறேன்'' என்று அவன் எல்லாருக்கும் பதில் அளித்தான்.

ஆற்றில் பல படகுகள் இருந்தன. சரக்குகள் ஏற்றிச் செல்லும் படகும் தயாராக இருந்தது. பட கோட்டிகள் படகுகளில் ஏறிக்கொண் டிருந்தார்கள். கூலிகள் படகுகளில் சாமான்களை ஏற்றுவதில் தீவிரமாக முனைந்திருந்தார்கள்.

அன்று வரையில் யசோதை படகில் பிரயாணம் செய்ததே இல்லை. ஆகவே அது அவளுக்குக் குதூகல மாகத்தான் இருந்தது. ஆனால் சில சமயம் அவ்வள வாகப் பிடிக்கவில்லை. கரையின் அருகில் இருந்த படகு ஒன்றில் மீன் கூடைகள் வைக்கப்பட்டிருந்தன. அதில் இருந்த பசுமையான மீன்களைப் பார்த்ததும் யசோதை யின் நாக்கில் நீர் ஊறியது. ''இந்த மீன்களைக் கண்டாலே பச்சையாகத் தின்றுவிடலாம்போல் இருக் கிறதே!'' என்று கூறிக் கண் சிமிட்டினாள் அவள்.

''பயப்படாதே, பயப்படாதே. நாம் செல்லும் ஊரில் மீன்களுக்குப் பஞ்சமே இல்லை. தேவ்பாக் என்றால் மீன் களஞ்சியம் ஆக்கும்!'' என்றான் அவன்.

சின்னஞ் சிறிய அலைகள் படகைத் தாக்குவதைக் கண்டாள் யசோதை. பிறகு அவளுடைய பார்வை அக்கரைக்குச் சென்றது. அக்கரையில் தாமாப்பூர்க் கிராமத்தின் தென்னந்தோப்புகள் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் தென்பட்டன. அவற்றைக் கண்டதும் யசோதைக்குப் பெருமையாக இருந்தது; அது அவ ளுடைய பிறந்தகம் அல்லவா?

படகு நகர்ந்தது; பார்வையும் நகர்ந்தது; பிறகு பதியிடம் பாய்ந்தது யசோதையின் பார்வை.

# 4

# எஜமானி அம்மாள்

**ப**டகு வேகமாகச் சென்றபோது குளிர்ந்த காற்று ஜில்லென்று வீசியது. அது யசோதையின் உடம்பில் பட்டதும் அவளுக்குப் புல்லரித்தது. படகு சென்று கொண்டிருந்தபோதே அவள் தன் விரல்களை ஆற்றுநீரில் விட்டுத் துழாவினாள். அந்த நீரும் ஜில்லிட்டிருந்தது. அவள் எதிரே நோக்கினாள். மூடுபனியைத் தவிர வேறு எதையும் காண முடியவில்லை. ஆற்று நீரெல்லாம் மூடு பனியாகவும், அதைக் கிழித்துக்கொண்டு அவள் பிரயா ணம் செய்வதுபோலவும் அவளுக்குத் தோன்றியது. அப் படிச் சென்றது அவளுக்கு மிகுந்த ஆனந்தம் அளித்தது.

அவள் பின்னால் திரும்பிப் பார்த்தாள். அங்கும் ஒரே மூடுபனி. அக்கம் பக்கத்திலும் ஒரே பனிமயம். எங்கே திரும்பினாலும் பனி, திரை இட்டிருந்தது. 'மூடு பனியில் மூடிக் கிடக்கிறோம்; அதை விலக்கிக்கொண்டு தான் பிரயாணம் செய்யவேண்டும். உண்மையிலேயே அதைக் கிழித்துக்கொண்டு முன்னேறிச் செல்லமுடியுமா? அல்லது இந்தப் பிரயாணம் உலகத்தின் முடிவுவரையில் இப்படியேதான் இருக்குமா? அது அப்படியே இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?' இந்தப் பனித் திரை என்றுமே விலகக்கூடாது என்று யசோதைக்குத் தோன் றிற்று.

இதற்குள் படகு தாமாப்பூருக்கு அருகில் வந்து விட்டது. அங்கிருந்த ஒரு பாறையைச் சுற்றிக்கொண்டு அது மேலே செல்ல ஆரம்பித்தது.

அப்பொழுது யசோதையின் மனத்தில் விசித்திர மான எண்ணங்கள் எழுந்தன. 'படகு இந்தப் பாறையின் மேல் மோதினால் நம் கதி என்ன ஆகும்? படகு நொறுங்

கித் தூள்தூளாகப் போகும். படகில் உள்ள அனைவரும் ஆற்றில் மூழ்கி மடிந்துவிடுவார்கள்.'

இதை எண்ணியதும் அவளுடைய உடம்பு வெட வெடவென்று நடுங்க ஆரம்பித்தது.

தாமாப்பூரில் உள்ள ஆற்றங்கரைத் தென்னந் தோப்புகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிய ஆரம்பித்தன. அவற்றைக் கண்டதும் யசோதைக்குத் தன் பிறந்தகத்தின் நினைவு வந்தது. கூடவே சிற்றப்பனின் நினைவு வந்தாலும் அங்குள்ள அம்பாளின் ஆலயமும் அதன் முன்னுள்ள சித்திரக் குளமுமே அவளுடைய மனக்கண்முன் நன்ருகக் காட்சி அளித்தன. அவள் சிறுமியாக இருந்தபோது அந்தத் தடாகத்தின் கரையில் உட்கார்ந்து, குளத்தில் உள்ள செந்தாமரை மலர்களை மணிக்கணக்காக நோக்கிக்கொண் டிருப்பது வழக்கம். அந்தத் தாமரைத் தடாகத்தில் அவள் எத்தனையோ தடவைகள் நீராடியிருக்கிருள்; துணிகளைத் துவைத்திருக்கிருள். விடுமுறையில் பம்பாயிலிருந்து வந்தபோதெல்லாம் அந்தக் குளக்கரைக்கு நாள் தவருமல் செல்வது வழக்கம். இது விஷயமாக அவளுடைய சிற்றப்பன்கூட அவளைக் கேலி செய்வது உண்டு. 'கழுதை கெட்டால் குட்டிச்சுவர் என்பார்கள்; ஆனால் நம் யசோதை கெட்டால் தாமாப்பூர்க் குளக்கரையில் நிச்சயமாக அகப்பட்டுவிடுவாள்' என்று அவன் அடிக்கடி சொல்வான்.

அந்த நாட்களில்தான் யசோதை எத்தனை மகிழ்ச்சியுடன் இருந்தாள்! அதை இன்று நினைவுபடுத்திக்கொண்டாள். 'அந்தக் குளக்கரைக்கு இன்று நான் போக முடியுமா? இந்தப் பிறப்பிலே செல்ல முடியுமா? என் சிற்றப்பனுக்கு என்னைக் காட்டிலும் என் பணத்தின்மேல் தான் அதிக நாட்டம் இருந்தது. அவனுடைய மனப்படியே அந்தப் பணம் அவனுக்குக் கிடைத்துவிட்டது. நான் இருக்கிறேன அல்லது இறந்துவிட்டேன என்று பார்க்கக்கூட அவன் இப்பொழுது தயாராக இல்லை.'

மெள்ள மெள்ளப் பனித்திரை விலகி வந்தது; கதிரவனுடைய கிரணங்கள் அதை ஊடுருவிச் சென்றன; நாற்புறமும் பளிச்சென்று ஒளி சூழ்ந்துகொண்டது.

படகு தேவ்பாக்கை அடைந்தபோது நண்பகல் ஆகி விட்டது. அவர்கள் படகைவிட்டு இறங்கினர். நதிக் கரையில் உள்ள சூடேறிய மணலில் நடந்து சென்றபோது யசோதையின் கால்கள் வெப்பம் தாங்கமாட்டாமல் சதி ராடத் தொடங்கின.

இதைக் கண்ட ஆனந்தன், ''உன் செருப்பை ஏன் போட்டுக்கொண்டு வரவில்லை?'' என்று அவளைக் கேட்டான்.

''என்னவோ, மறந்துபோனேன்.''

''என்னுடைய செருப்பைத் தரட்டுமா?''

''வேண்டாம்.''

ஆனால் தகிக்கும் மணல், கால்களைப் பொசுக்க ஆரம் பித்ததும் அவள் ஆனந்தனின் செருப்புகளை மாட்டிக் கொள்ள இசைந்தாள். அப்படி மாட்டிக்கொண்டபோது, ''இந்தச் செருப்பில் என் இரண்டு கால்களுமே கொள்ளும் போல் இருக்கிறது'' என்று சொல்லிச் சிரித்தாள்.

இருவரும் மெதுவாக நடக்க ஆரம்பித்தனர். அளவில் பெரிய அந்தச் செருப்புகளை அணிந்துகொண்டு யசோதையால் சரிவர நடக்க முடியவில்லை. அவளு டைய வேதனையைக் கண்ட ஆனந்தன், ''உன்னை நான் தூக்கிக்கொண்டு வரட்டுமா?'' என்று அன்புடன் கேட்டான்.

''இஷ்ஷ்....''

அன்புமிக்க அந்த வார்த்தைகளைக் கேட்ட யசோதை புளகாங்கிதம் அடைந்து அந்த இன்பத்தி லேயே மெய்ம்மறந்து வேகமாக நடக்க ஆரம்பித்தாள். ''பேர் அன்னபூரணி, ஆனால் ஒரு வேளைச் சாப்பாட்டுக்கு லாட்டரி என்பார்களே, அதுபோலத்தான் இருக்கிறது உங்கள் தேவ்பாக்'' என்று கேலி செய்தாள் யசோதை.

''அப்படி என்றால்?''

''பேர்தான் தேவ்பாக் - தேவர்களின் நந்தவனம். ஆனால் இங்கே காணப்படுவதோ ஒரே மணல்காடு - சஹாரா!''

சஹாரா என்று அவள் சொன்னதும் ஆனந்தனுக்கு அது என்னவென்றே புரியவில்லை. ஏனென்றால் சஹாரா பாலைவனத்தைப்பற்றி அவன் படித்திருக்கவில்லை. ஆகையால் யசோதை சஹாரா என்று கூறியதும், அது பம்பாயில் உள்ள ஏதாவது ஓர் இடத்தின் பெயராக இருக்கும் என்று எண்ணி வாளா இருந்துவிட்டான்.

சிறிது தூரம் நடந்து சென்றதும், தான் சஹாரா என்று சொன்னது எத்தனை தவறு என்பதை யசோதை உணர்ந்தாள். 'பெண்புத்தி பின்புத்தி என்பது எத்தனை உண்மை!' என்று நினைத்துத் தன் நாக்கைக் கடித்துக் கொண்டாள். மணல் வெளிகளைக் கடந்து தென்னஞ் சோலைகளில் நுழைந்தபோது, குளுமையான காற்று ஜிலுஜிலுவென்று வீசிற்று. ''ஆஹாஹா! என்னே என் அவசர புத்தி? உண்மையில் இந்தத் தேவ்பாக் ஒரு தெய்விகப் பூஞ்சோலைதான்!'' என்று அகமகிழ்ந்தாள்.

பொடிநடையாக அவர்கள் இருவரும் பாலேகர் என்ற நண்பர் ஒருவரின் இல்லத்துக்கு அருகில் வந்து சேர்ந்தார்கள். அங்கிருந்து மோத்திராம் சேட்டின் நீல மாளிகை தெரிந்தது. அந்த நவீனக் கட்டிடத்தைக் கண்டதும் யசோதையின் ஆனந்தம் பொங்கியது.

''அது யாருடைய மாளிகை?'' என்று அவள் ஆனந்தனைக் கேட்டாள்.

''மோத்திராம் சேட்டின் பங்களா அது'' என்று பதில் அளித்தான் அவன்.

''மிகவும் அழகாக இருக்கிறதே!''

''பின்னே இருக்காதா? சேட்டோ, கொக்கோ!''

''இத்தனை அழகாக ஒரு பங்களா இருக்கும்போது புதிதாக மாளிகை ஒன்றை எதற்காகக் கட்டுகிறார்?''

''எதற்காகவா? எல்லாம் பணக் கொழுப்புத்தான். சாதாரணமாகப் பணக்காரர்களுக்கு ஒரு பைத்தியம் உண்டு. நன்றாக இருக்கும் வீட்டை இடித்து அடிக்கடி புதிதாகக் கட்டிக்கொண் டிருப்பார்கள். நன்றாக ஓடிக் கொண்டிருக்கும் மோட்டார் காரை விற்றுவிட்டுப் புதிய மாடலை வாங்குவார்கள். கணக்கு இல்லாமல் கிடக்கும் பணத்துக்கு ஏதாவது செலவு வேண்டாமா? பணக்காரர் கள் ஒரு பங்களாவுடன் திருப்தி அடைவதில்லை. ஆனால் ஏழைகளோ ஒரு குடிசைக்குக்கூட வழியில்லாமல் திண் டாடித் தவிக்கிறார்கள். சேட்ஜி இந்தப் புதிய மாளிகை யைத் தம் மனைவிக்காகக் கட்டுகிறார். ஆற்றங்கரையில் அதைக் கட்டப்போகிறார், முற்றும் பம்பாய்ப் பாணியில். அதற்காகப் பம்பாயிலிருந்து ஓர் இஞ்சநேயர்கூட வரப் போகிறாராம்.''

யசோதை சிரித்தாள். ''இஞ்சநேயரும் இல்லை, ஆஞ்சநேயரும் இல்லை. இஞ்சினீயர் என்று சொல்லுங் கள்'' என்று அவள் அவனைத் திருத்தினாள்.

''அதென்னவோ எனக்குத் தெரியாது. நான் பட்டிக்காட்டு ஆசாமிதானே?''

''பார்த்தீர்களா, பார்த்தீர்களா? உடனே வித்தி யாசமாக நினைத்துக்கொள்கிறீர்களே..சரி, அது போகட்டும். சேட்டின் மனைவி மிகுந்த ஆசைகொண் டவள் என்று தெரிகிறது; இல்லையா?''

''ஆமாம். பணக்காரர்களே எப்பொழுதும் ஆசை மிகுந்தவர்கள்தாம்.''

''அப்படிச் சொல்லாதீர்கள். தங்கள் ஆசைகளைப் பூர்த்தி செய்துகொள்ள அவர்களிடம் பண வசதி இருக்கிறது. அதுதான் காரணம். எனக்கு மட்டும் இச் சைகள் குறைவாகவா இருக்கின்றன?''

இதைச் சொன்னவுடன் யசோதை தன் நாக்கைக் கடித்துக்கொண்டாள். தான் அப்படிச் சொன்னதை ஆனந்தன் மீண்டும் தவறாக எடுத்துக்கொண்டால்

ஆபத்து ஏற்பட்டுவிடுமே என்று அஞ்சினுள். எதற்காக அப்படிப் பேசினேம் என்று தன்னைத் தானே வெறுத்துக்கொண்டாள்.

இதற்குள் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த மங்கை ஒருத்தி எதிரில் வருவதை அவர்கள் இருவரும் கண்டனர். யசோதை அவளையே இமை கொட்டாமல் பார்த்துக்கொண் டிருந்தாள். அந்த மங்கையின் வயசு இருபது அல்லது இருபத்திரண்டு இருக்கலாம். அவளுடைய தங்க முலாம் பூசிய தளதளக்கும் மேனி, அதற்குச் சோபை அளிப்பதுபோல் சிவப்புக் கரையுடைய வெள்ளை வாயில் புடைவை, எளிதான ஆனுல் எழில் மிக்க அலங்காரம்-இவற்றைக் கண்ட யசோதையின் மனம் அவளிடமே லயித்துவிட்டது.

அந்த மங்கை அருகில் வந்தபோது யசோதை அவளுடைய முகத்தைக் கூர்ந்து கவனித்தாள். திருமகளின் களை பொருந்திய அந்த மதிவதனத்தைக் கண்டு யசோதைக்கு அந்த மங்கையிடம் ஒருவித மரியாதை ஏற்படலாயிற்று.

இப்பொழுது இருவரும் ஒருவரை ஒருவர் நன்றுகக் கவனித்துக்கொண்டனர். அந்த மங்கையும் யசோதையைக் கண்டு கொஞ்சம் வியப்படையத்தான் அடைந்தாள்.

யசோதை ஒரு சாதாரணப் புடைவையைத்தான் உடுத்திருந்தாள். ஆனுலும் அவளுடைய கட்டழகும், பட்டணத்துப் பெண் என்று பறைசாற்றும் அவளுடைய நாகரிக அலங்காரமும் கவர்ச்சியாக இருந்தன. ஆகையால் அந்த மங்கைக்கும் யசோதை விஷயத்தில் ஒருவிதக் களிப்பும் நேசபாவமும் உண்டாயின. அதை அவளுடைய முகம் எடுத்துக்காட்டிற்று.

உடனே யசோதை அவளைப் பார்த்து மெல்லப் புன்னகை பூத்தாள். ஆனுல் பேசுவதற்கு இருவருக்கும் துணிவு ஏற்படவில்லை.

இந்த நிலையில் வேறு வழியின்றி அந்த மங்கை அவர்களைக் கடந்து சென்றாள்.

அவளுடைய பின்னழகைக் கண்டு யசோதை பிரமித்து நின்றாள். அதைக் கலைப்பதுபோல் அங்கு வந்து சேர்ந்தார் நண்பர் பாலேகர். அவர் ஆனந்தனை நோக்கி, ''என்னப்பா, எப்பொழுது வந்தாய்? இந்தப் பெண் யார்? உன் மனைவிதானே? நல்லது......ஏன் வீட்டு வாசலிலேயே நிற்கிறீர்கள்? வா, அம்மா, வீட்டுக்குள்ளே வா, அம்மா. சங்கோசப்படாதே. இது நம் வீடு தான். மிகவும் நேரமாகிவிட்டது. விரைவில் உண்டியை முடித்துக்கொள்ளுங்கள். என்ன அம்மா அங்கே பார்வை? பணக்காரர்களைப் பார்த்துக்கொண்டே இருந்தால் நாம் பட்டினி கிடக்கவேண்டியதுதான். அந்த அம்மாள் யார் தெரியுமா? மோத்திராம் சேட்டின் மனைவி, சுசீலா. தங்கமான குணம்'' என்று கூறினார்.

''அப்படித்தான் தோன்றுகிறது'' என்று முணுமுணுத்தவாறே யசோதை வீட்டுக்குள் சென்றாள்.

பாலேகரின் வீட்டில் வந்தவுடன் அவர்களுக்கு வெல்லமும் குளிர்ந்த நீரும் தரப்பட்டன. கொங்கண தேசத்தில் வெளியூரிலிருந்து வெயில் வேளையில் விருந்தாளிகள் வந்தால் அவர்களுக்கு முதலில் வெல்லமும் நீரும் தருவது வழக்கம். அந்தப் பசி வேளையில் ஆனந்தன் வெல்லத்தைத் தின்றுவிட்டு ஒரு செம்பு நீரைக் காலி செய்தான். ஆனால் யசோதையோ, 'இந் நேரத்தில் சூடாக ஒரு கப் டீ கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று எண்ணத் தொடங்கினாள்.

இருந்தாலும் வேண்டா வெறுப்பாக அவள் வெல்லத்தை விழுங்கினாள். பிறகு தண்ணீரை அருந்தியபோது அவளுடைய கருத்து மாறியது. 'இது ஒன்றும் அத்தனை மோசமாக இல்லை' என்று மனத்துக்குள்ளே எண்ணிக் கொண்டாள்.

ஆனந்தன் சாமான்களையெல்லாம் ஒரு பக்கமாக

எடுத்து வைத்தான். பிறகு அவர்கள் உணவு உண்டு, வெயில் வேளையில் அங்கேயே இருந்துவிட்டு, அன்று சாயங்காலமே தங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த விடுதிக்குச் சென்றார்கள்.

ஆற்றங்கரையில் இருந்த மேட்டுப்பாங்கான ஓர் இடத்தில் பங்களாவைக் கட்டுவது என்று தீர்மானமாகி இருந்தது. அதற்கான பூர்வாங்க வேலைகள் நடந்து கொண்டிருந்தன. பம்பாயிலிருந்து இஞ்சினீயர் இன்னும் வரவில்லையாதலால் அஸ்திவார வேலைகள் அப்படியே இருந்தன.

அந்த இடத்தின் அருகில் வேலையாட்கள் தங்குவதற்காகக் குடிசைகள் போட்டிருந்தன. அந்த வேலையாட்களில் சிலர் தங்கள் மனைவி மக்களுடன் அங்கேயே வசித்தனர். பங்களாவைக் கட்டி முடிக்கப் பல மாதங்கள் ஆகுமாதலால் இந்த இடவசதி செய்யப்பட்டிருந்தது.

அருகிலேயே ஆனந்தனின் விடுதியும் இருந்தது. அவர்களுக்கு இன்று கடுமையான வேலை. வீட்டுச் சாமான்களை அடுக்கி வைப்பதில் அன்றைப்பொழுது கழிந்துவிட்டது. யசோதை தன் வேலைகளில் சுவாரசியமாக ஈடுபட்டிருந்தாலும் அவளுடைய மனத்திரையில் சுசீலாவின் உருவந்தான் காட்சி அளித்துக்கொண்டிருந்தது. எஜமானி அம்மாளுடன் தனக்கு அறிமுகம் ஆகுமா? அவள் தன்னுடன் பேசுவாளா? அல்லது பணக்காரி என்ற தோரணையில் கர்வத்துடன் இருப்பாளா? இந்த எண்ணங்கள்தாம் அவளுடைய உள்ளத்தில் சதா உறுத்திக்கொண்டிருந்தன.

அன்றிரவு கனவில்கூடச் சுசீலாவைத்தான் கண்டு கொண்டிருந்தாள் யசோதை.

# 5
# பிழையான பிளான்

சுசீலாவும் யசோதையைப்பற்றித்தான் சதா நினைத்துக்கொண் டிருந்தாள். தேவ்பாக் போன்ற சிறிய ஊருக்கு இத்தனை அழகான பெண் வந்திருப்பது அவளுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

சில நாட்களுக்கு முன்புதான் அங்கே சுசீலா பெண்கள் பள்ளி ஒன்றைத் தொடங்கியிருந்தாள். கிராமப் பெண்களுக்கு எழுதப் படிக்கவும், தையல் வேலை செய்யவும் அவள் கற்றுக் கொடுத்து வந்தாள். கல்வியும் கலைகளும் கற்பித்து வந்த அந்தப் பள்ளிக்கு, 'மாதர் சங்கம்' என்று அவள் பெயரிட்டிருந்தாள். அந்த மாதர் சங்கத்தில் அவள் மிகுந்த ஊக்கம் கொண்டிருந்ததோடு, அதைப் பெரிதாக்கும் எண்ணமும் அவளுக்கு இருந்தது. 'அப்பணியில் யசோதை நமக்கு உதவுவாளா? அப்படிச் செய்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று சுசீலா எண்ணமிடத் தொடங்கினாள். நாலைந்து நாட்கள் வரையில் யசோதையின் எழிலுருவந்தான் சுசீலாவின் மனக் கண்முன் காட்சியளித்துக்கொண் டிருந்தது. மாதர் சங்கப்பணிகளில் யசோதையை ஈடுபடுத்தலாம் என்று அவள் கருதியிருந்ததோடு மற்றோர் எண்ணமும் அவள் மனத்தில் இருந்தது. அதுதான் யசோதையின் அளவுக்கு மிஞ்சிய கவர்ச்சி.

மறுதடவை சந்திக்கும்போது யசோதையுடன் நட்புப் பூண்பது என்று தீர்மானித்தாள்.

*       *       *       *

மத்தியான்ன நேரம். சுசீலா, யசோதை விஷயமாக என்ன என்னவோ ஆலோசித்துக்கொண் டிருந்தாள். ஹாலில் இருந்த நாற்காலியில் அமர்ந்து அன்றைப் பத்திரி

கையைப் படித்துக்கொண் டிருந்தபோதுதான் அந்த ஆலோசனை விரியலாயிற்று. ஆனுல் அதற்கு முற்றுப்புள்ளி வைப்பதுபோல் வெளியில் காலடிச் சத்தம் கேட்கவே, அவள் தன் கவனத்தை வாசல் பக்கம் திருப்பினுள்.

இதற்குள் வேலையாள் வந்து, ''அம்மா, யாரோ ஒரு கனவான் வந்திருக்கிருர்'' என்று கூறினுன்.

"கனவானு?" என்று திரும்பிக் கேட்டுச் சுசீலா நாற்காலியை விட்டு எழுந்திருந்தாள். அருகில் இருந்த தன் அறைக்குச் சென்று கூந்தலையும் புடைவையையும் சரிப்படுத்திக் கொண்டாள்; பிறகு வெளித் தாழ்வாரத்துக்கு வந்தாள். ஒரு கனவானைப் போன்று நாகரிக உடை அணிந்த இளைஞன் ஒருவன் அங்கே நிற்பதைக் கண்டாள் அவள்.

பாரத நாட்டுப் பெண்களுக்கே உரிய பண்புடன், ''உங்களுக்கு யார் வேண்டும்?'' என்று சுசீலா மிக்க மரியாதையுடன் கேட்டாள்.

''மோத்திராம் சேட்டின் பங்களா..'' அவனுல் அந்த வாக்கியத்தை முடிக்க முடியவில்லை. ஏனென்ருல் அவன் சுசீலாவைக் கண்டதும் திடுக்கிட்டான். சுசீலாவும் அவனைப் பார்த்ததும் நடுக்கமுற்ருள்.

''யார்? சுசீலாவா?'' என்று அவன் வியப்புடன் கேட்டான்.

சுசீலாவுக்கு உள்ளம் பதறியது. இருந்தாலும் தன் நிலையை ஒருவாறு சமாளித்துக்கொண்டு சிரித்தவண்ணம், "திவாகர், நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? பம்பாயிலிருந்துதானே வருகிறீர்கள்? எதற்காக நிற்கிறீர்கள்? இப்படி உட்காருங்கள்'' என்ருள்.

''நீ இங்கே இருப்பாய் என்று நான் கனவிலும் கருதவில்லை, சுசீலா'' என்று சொல்லியவாறே அவன் தாழ்வாரத்துக்கு வந்து, அங்கிருந்த 'கோட் ஸ்டாண்டி'ல் தன் தொப்பியைக் கழற்றி மாட்டினுன். பிறகு அவள் இருந்த பக்கம் திரும்பி, ஒரு பெருமூச்சுடன், ''இப்பொழுது நீ

மிஸ்ஸ் மோத்திராம் சேட் என்று சொல்; அப்படித்தானே? ஸ்ரீமான் மோத்திராம் சேட்டின் பங்களாவுக்குப் பிளான் தயாரிக்கும் வேலையை நான் ஏற்றுக்கொண்டபோது, உன் பங்களாவுக்குத்தான் அது என்பதை நான் துளிகூட எண்ணவில்லையே! இது அல்லவா ஆச்சரியம்?..''

அவன் முடிக்கும் முன்பே அவள் பேச்சை வெட்டினுள்: ''அது இருக்கட்டும். முதலில் உடையை மாற்றுங்கள். அவர் இப்பொழுது வந்துவிடுவார். பம்பாயிலிருந்து இஞ்சினீயர் வரப்போகிருர் என்று அவர் காலையில் சொல்லிக்கொண் டிருந்தார். அவர் நீங்கள்தாம் என்று எனக்கு எப்படித் தெரியும்?'' இதைக் கூறிவிட்டுச் சுசீலா சட்டென்று உள்ளே சென்ருள்.

திவாகர் நிலையற்ற மனத்துடன் தாழ்வாரத்தில் நடை போட்டுக்கொண் டிருந்தான். அநேகமாகக் காய்ந்து போன புண்ணிலே ஏதாவதொன்று பட்டு அது மீண்டும் ரத்தக்களரி ஆவதுபோல இருந்தது அவனுடைய மன நிலை. பழைய நினைவுகளை அவனுல் மறக்க முடியவில்லை.

இதற்குள் சுசீலா வெளியே வந்தாள். அவளைத் தொடர்ந்து வந்த வேலையாள் ஒரு தட்டில் சிற்றுண்டியும் டீயும் கொண்டு வந்து அங்கிருந்த மேஜைமீது வைத்தான்.

''திவாகர், முதலில் பலகாரம் சாப்பிடுங்கள்'' என்ருள் சுசீலா.

திவாகர் உடனே யந்திரத்தைப்போல வந்து சிற்றுண்டியை அருந்திஞன். டீயைக் குடிப்பதற்குமுன், ''ஸ்ரீமான் மோத்திராம் சேட் எப்பொழுது வருவார்?'' என்று அவளைக் கேட்டான்.

''இப்பொழுது வந்துவிடுவார்'' என்று அவள் பதில் அளித்தாள்.

திவாகர் ஏதோ பேச வேண்டுமென்று நினைத்தான்; அவனுடைய உதடுகள் முணுமுணுத்தபடியே இருந்தன; ''சுசீலா..'' என்று அவன் ஆரம்பித்தான்.

சுசீலா அச்சம் அடைந்தவளாக அவனையே நோக்கிக் கொண்டிருந்தாள்.

இதற்குள் வெளி வராந்தாவில் பூட்ஸ் சத்தம் கேட்டது. சுசீலாவுக்கு இது சிறிது ஆறுதலாக இருந்தது. அவள் நீண்ட பெருமூச்சு விட்டாள்.

மோத்திராம் சேட் உள்ளே வந்தார்.

திவாகர் எழுந்து நின்றான். ''நான் திவாகர், இஞ்சினீயர்'' என்று தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொண்டு, கைகூப்பினான்.

மோத்திராம் சேட்டும் அவனுக்கு அஞ்சலி செய்து விட்டுச் சிரித்துக்கொண்டே, ''அப்படியா? மிக்க மகிழ்ச்சி. நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? காலையிலேயே வருவீர்கள் என்று எதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். வேலையாளைக்கூடத் துறைமுகத்துக்கு அனுப்பியிருந்தேன். ஆனால் அவன் திரும்பி வந்து நீங்கள் வரவில்லை என்று சொன்னான்'' என்று கூறினார்.

''இங்கேதான் நான் நேரே வருவதாக இருந்தேன். ஆனால், முதலில் மால்வண் பட்டணத்தைப் பார்த்தால் என்ன என்று எனக்குத் தோன்றிற்று. ஆகவே அங்கே சென்று, பட்டணத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு, பிறகு இங்கே வந்து சேர்ந்தேன்'' என்றான் திவாகர்.

''அதுவும் நல்லதுதான். நீங்கள் காலையில் வந்திருந்தால் கார் கிடைத்திருக்கும்..சரி, நாளைக்கே பங்களா வேலையைத் தொடங்கிவிடுங்கள். நீங்கள் வரவேண்டுமென்றுதான் எல்லா வேலைகளையும் நிறுத்தி வைத்திருக்கிறேன். ஏழெட்டு நாட்களில் உங்கள் 'பிளானை'த் தயார் செய்யுங்கள்'' என்று கூறிவிட்டு மோத்திராம் சேட் சுசீலா இருந்த பக்கம் திரும்பினார். பிறகு சிரித்துக் கொண்டே, ''மிஸ்டர் திவாகர், ஒரு முக்கியமான விஷயம். எஜமானி அம்மாளையும் கலந்துகொண்டு அவர்கள் இஷ்டப்படியே 'பிளானை'த் தயாரியுங்கள். ஏனென்றால் தகராறுகளும் மனஸ்தாபங்களும் வீண் சச்சரவு

களும் ஏற்பட்டு இந்த வீட்டின் அமைதி குலைய வேண்டாம்'' என்று கூறிவிட்டுத் தம் அறைக்குச் சென்றார்.

திவாகர் அவர்கள் வீட்டிலேயே தங்கினான். மாலையில் அவன் மோத்திராம் சேட்டுடன் பங்களாக் கட்டுவதற்கான காலி மனையைக் காணச் சென்றான். சுசீலாவும் கூடவே போனாள்.

மோத்திராம் சேட், திவாகருக்கு இடத்தைக் காட்டினார். பிறகு சிறிது நேரத்துக்கெல்லாம் அவனையும் சுசீலாவையும் அங்கேயே விட்டுவிட்டு, அவர் வேறு வேலையைக் கவனிக்கச் சென்றார்.

இம்மாதிரியே தினந்தோறும் நடந்துகொண்டிருந்தது. சுசீலா தன் பங்களா எப்படி இருக்கவேண்டும் என்று திவாகருக்கு எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தாள். திவாகரின் காதுகள் மட்டும் அவள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தனவே ஒழிய, அவனுடைய மனம் வேறு எங்கேயோ லயித்திருந்தது.

இரண்டு மூன்று நாட்கள் கழிந்தபிறகு ஒரு நாள்—

சுசீலா, மோத்திராம் சேட், திவாகர் ஆகியவர்கள் கடற்கரையில் உட்கார்ந்துகொண்டு பங்களா எப்படி இருக்க வேண்டுமென்று பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது திவாகர், தான் தயாரித்த பிளானைக் காட்டி, அதில் உள்ள சிறந்த அம்சங்களை அவர்களுக்கு விளக்கிக் கொண்டிருந்தான்.

அதே சமயம் ஆனந்தன் அருகிலேயே ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தான். ஆனால் அவனுடைய கவனமெல்லாம் திவாகரின் பிளானிலேதான் இருந்தது.

இந்தப் பிளான் தயாரிக்கும் விஷயத்தில் காட்டியிருக்கும் தன் விசேஷத் திறமையைத் திவாகர் எடுத்துச் சொல்லி முடித்ததும், ஆனந்தனுக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. ஆகையால் அவன் திவாகருக்கு அருகில் சென்று, ''சாஹேப், அந்தப் 'பலானை' நான் கொஞ்சம் பார்க்கலாமா?'' என்று பணிவுடன் கேட்டான்.

''ஏண்டா, நீகூட இஞ்சினீயரா?''

''நான் உங்களைப்போல் பரீட்சையில் தேர்ச்சிபெற்ற இஞ்சினீயர் அல்லாவிட்டாலும், என் முன்னோர்கள் இந்த வேலையைத்தான் செய்துவந்திருப்பதால் எனக்கும் அதில் கொஞ்சம் பழக்கம் உண்டு'' என்று ஆனந்தன் மிக்க பணிவாகப் பதில் அளித்தான்.

திவாகருக்கு அவனுடைய அதிகப் பிரசங்கித்தனம் கட்டோடு பிடிக்கவில்லை. ஆயினும் அவன் சிரித்துக் கொண்டே, ''அப்படியா? மிகவும் நல்லது. 'பலானில்' ஏதாவது, மிஷ்டேக் கிஷ்டேக்' இருந்தால் சொல்லு. பயப்படாதே!'' என்று கிண்டலாகச் சொன்னான்.

உடனே திவாகர் ஆனந்தனிடம் பிளானைக் கொடுத்தான். ஆனந்தன் அதைக் கையில் வாங்கி உற்றுக் கவனித்துப் பார்த்தான். பிறகு மிகுந்த பணிவோடு, ''சாஹேப், என்னை மன்னியுங்கள். உங்களுடைய தவறுகளை நான் எடுத்துக் காட்டுவதாக எண்ண வேண்டாம். ஆனால்..'' என்று இழுத்தான்.

''ஆனால் என்னடா? வாய் திறந்து சொல்லேன்'' என்று திவாகர் உறுமினான்.

''இதில் யோசிக்க வேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது. பங்களாவின் மேல்பாகத்தைக் கவனிக்கும்போது கட்டிடத்தின் அஸ்திவாரம் வலுவாக இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. 'பலானி'ல் குற்றம் சொல்வதாக நினைக்காதீர்கள். உங்கள் 'பலான்' என்னவோ சரிதான். அதன்படி இந்தப் பங்களாவைப் பம்பாயில் கட்டினால் வலுவாக இருக்கும். ஆனால் இது கொங்கணத்துப் பூமி, பாருங்கள். இதன் வலுவையும் நாம் கவனிக்காமல் இருக்க முடியாது. இதோ பாருங்கள். இந்த இடத்தில் நாம் பங்களாக் கட்டப்போகிறோம். இது மேட்டுப்பாங்கான இடம். இந்த இடத்தில் காற்று எத்தனை வேகமாக வீசுகிறது என்பதை மழைக்காலத்தில்தான் அறிய முடியும். இது சேட் சாஹேபுக்கு நன்றாகத் தெரியும். இது

தவிர, ஆற்றில் வெள்ளம் வரும்போது இந்தப் பூமி அரிக்கப்பட்டுவிடும். அதனால் அஸ்திவாரமும் பாதிக்கப்பட்டுவிடும். நாலைந்து ஆண்டுகளில் அஸ்திவாரம் கரைந்து போனாலும் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆகையால் இந்த அஸ்திவாரம் போதாது; இன்னும் ஆழமாக வேண்டும். என்ன, தெரிந்ததா? நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். பிறகு உங்கள் விருப்பம்'' என்று கூறி முடித்தான் ஆனந்தன்.

திவாகரின் நெற்றியில் சுருக்கங்கள் படிந்தன. அவனுடைய சினம் தலைக்கேறியது. என்ன பேச வேண்டுமென்றே அவனுக்குத் தோன்றவில்லை.

''பட்டிக்காட்டு என்ஜினீயர் சாஹேப், போதும் உங்கள் பிரசங்கம். இதெல்லாம் எனக்கு ஏற்கனவே தெரியாமல் இல்லை. ஆகையால் எனக்கு உங்கள் உபதேசம் தேவையில்லை. வேண்டும்போது நான் உங்கள் உதவியை நாடுகிறேன்'' என்று திவாகர் குத்தலாகப் பேசினான். ஆயினும் அவனுடைய ஆத்திரம் அடங்கவில்லை. அவன் ரௌத்திராகாரமானான். சேட்டின் முன்னிலையில் தன் மானத்தை வாங்கிய அவனைக் கண்ட துண்டமாக வெட்டிவிடவேண்டுமென்று அவனுக்குத் தோற்றியது. ஆனால் அதை வாய் வார்த்தைகளால் தீர்த்துக்கொண்டான். ''டேய் ஆனந்தா, என்னை யாரென்றடா நினைத்தாய்? எனக்கு மூளையில்லை அல்லது என் மூளையைப் பம்பாயிலேயே மறந்து வந்துவிட்டேனென்று எண்ணினாய்? போடா போ! உன் வேலையைக் கவனி. அதிகப்பிரசங்கித்தனம் வேண்டாம் உனக்கு!'' என்று சீறி விழுந்தான்.

திவாகர் இத்தனை தூரம் பேசிய பிறகு ஆனந்தனால் பதில் அளிக்காமல் இருக்க முடியவில்லை. ''சாஹேப், நீங்கள் பெரிய எஞ்ஜினீயர்; பரீட்சைகள் எல்லாம் பாஸ் செய்தவர். ஆனால் உங்களுடைய 'பலானி'ல் குற்றம் இருக்கிறது என்று நான் சொல்லுகிறேன். முக்கண் படைத்த சிவனானாலும் குற்றம் குற்றந்தானே, சாஹேப்?

இந்த அஸ்திவாரம் போதாது என்பது மட்டும் அல்ல. 'பலானி'ல் எத்தனையோ தவறுகள் இன்னும் உள்ளன. நீங்கள் கோபப்படாமல் இருந்தால், நான் எல்லாவற்றையும் காட்டுகிறேன்'' என்று ஆனந்தன் சாந்தமாகப் பதில் அளித்தான். பிறகு மோத்திராம் சேட் இருந்த பக்கம் திரும்பி, ''சேட், உங்கள் உப்பைத் தின்கிறேன் என்பதற்காகச் சொல்கிறேன்; இந்தப் 'பலான்' முழுவதும் தப்பு. இதன்படி பங்களாவைக் கட்டினுல் ஏழெட்டு ஆண்டுகளுக்குமேல் அது நிற்காது'' என்று கூறி முடிக்கு முன்னரே, மோத்திராம் சேட், ''போதும், நிறுத்து உன் பிதற்றலை! பெற்ற தாயிடமே கற்ற வித்தையைக் காட்டுகிருயா? உனக்கு என்னடா அத்தனை துணிச்சல்! ஒழுங்காக மரம் அறுக்கத் தெரியவில்லை; மதி சொல்ல வந்துவிட்டான் மடையன்! போய் உன் வேலையைப் பாரடா. டேய், இதைக் கேள்; நாளைக்கு வந்து என்னைப் பார். கூலியை வாங்கிக்கொண்டு கூச்சல் போடாமல் ஊருக்குப் போய்ச் சேர்'' என்று கர்ஜித்தார்.

இதைக் கேட்டதும் திவாகருக்கு நிம்மதியாக இருந்தது. ஆனந்தன் சுட்டிக்காட்டிய தவறுகளை எல்லாம் அவன் ஒப்புக்கொள்ளத் தயாராக இருந்தான். ஆனுல் அப்படிச் செய்வதால் ஏற்படும் அவமானத்தை மட்டும் அவன் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை.

பாவம், ஆனந்தன்! அவன் அங்கிருந்து புறப்பட்டுச் சென்ருன். போகுமுன் அவன் எல்லாரையும் ஒரு முறை நோக்கினுன். அந்தப் பார்வையில், அந்தக் கண்களில், இருந்த ஒளி சுசீலாவுக்குத் தெரியாமல் இல்லை. அவனுடைய எஜமான விசுவாசமும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத இயல்பும் அவளை மிகவும் கவர்ந்தன.

அன்றைத் தினம் அந்த அழகான பெண்ணை ஆனந்தனுடன்தானே பார்த்திருந்தாள் சுசீலா? ஆகையால் ஆனந்தனுக்கு அந்தப் பெண்ணைப்பற்றித் தெரிந்திருக்கும்

என்று நினைத்தாள் அவள். தவிரத் திவாகரின் பிளானில் உள்ள தவறுகளைக் காட்டியதன் மூலம் ஆனந்தன் தனக்கு எப்பேர்ப்பட்ட உதவி செய்திருக்கிறான்! பங்களாக் கட்டும் விஷயத்தில் எத்தனை அக்கறை கொண்டிருக்கிறான்! இதனாலெல்லாம் சுசீலாவுக்கு ஆனந்தனிடம் ஒருவிதப் பாசம் ஏற்பட்டது. அவன் தன் ஆள் என்று அவன் பால் அளவுகடந்த அன்பு ஏற்பட்டது.

''திவாகர், வாருங்கள் போகலாம்; மால்வண் கடற் கரை வரையில் சுற்றிவிட்டு வரலாம். புறப்படு சுசீலா'' என்றார் மோத்திராம் சேட்.

''இன்று நான் வரவில்லை. இங்கேயே பொழுதைப் போக்கிவிட்டு நான் வீட்டுக்குப் போகிறேன்'' என்று பதில் அளித்தாள், சுசீலா.

சுசீலாவுடன் உல்லாசமாகச் சுற்ற வேண்டும் என்று திவாகர் எண்ணியிருந்தான். ஆனால் சுசீலா, ''வரவில்லை'' என்று சொன்னவுடன் அவனுக்கு நிராசை ஏற்பட்டது.

''சரி, அப்போது நாம் போவோம். சுசீலா, இங்கே இருட்டில் வெகு நேரம் உட்கார்ந்திருக்காதே. ஏதாவது பூச்சி கடித்துத் தொலைக்கப்போகிறது. என்ன?'' என்று கூறிவிட்டு மோத்திராம் சேட் அங்கிருந்து நகர்ந்தார். அவரும் திவாகரும் அருகில் இருந்த மோட்டாரில் ஏறிக் கொண்டனர். மோட்டார் நகர்ந்து சென்றது.

சுசீலாவுக்கு மன நிம்மதி ஏற்பட்டது. உடனே அவள் ஆனந்தன் வேலை செய்துகொண்டிருந்த இடத்திற்குச் சென்றாள்.

ஆனால் அவன் அங்கே இல்லை. அருகில் இருந்த ஒரு பாறையின்மேல் உட்கார்ந்து ஆழ்ந்த யோசனையில் இருந்தான்.

சுசீலா அவனுடைய பின்புறமாகச் சென்று, ''ஆனந்தராவ், எப்படிப்பட்ட யோசனையில் ஆழ்ந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

ஆனந்தன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

சுசீலாவின் குரலில் இருந்த அன்பு, இரக்கம், மரியாதை இவைகளைக் கண்டு, அவனுடைய மனத்துக்குப் பெருத்த ஆறுதலாக இருந்தது.

''ஏழைகளுக்கு ஏதம்மா யோசனை?'' என்ருன் ஆனந்தன். ''நீங்கள் சொல்லுங்கள் அம்மா, எனக்குப் படிப்பில்லை என்பதற்காக மூளை இல்லை என்று அர்த்தமா? உலகில் படித்தவர்கள்தாம் புத்திசாலிகள், படிப்பில்லாதவர்கள் படுமுட்டாள்களா? தவறுகள் செய்தது எஞ்சினீயராக இருந்தபோதிலும் முட்டாள் பட்டம் எனக்குத் தானே கிடைத்தது? அப்பேர்ப்பட்ட வேலை எதற்கு? வயிற்றுப் பிழைப்புக்காக என்ருல், அந்த வயிற்றைக் குண்டுபோட்டுச் சுட்டால்தான் என்ன? வேண்டாம், இந்த அவலங்கெட்ட வேலையும் வேண்டாம்; அவமானமும் வேண்டாம். நாளை முதல் நான் உங்கள் வேலையைச் செய்யப் போவதில்லை. இங்கே நான் கேவலம் வயிற்றுப் பிழைப்புக்காக வரவில்லை; என் கனவு ஒன்று நிறைவேறுமா என்று பார்க்கத்தான் வந்திருக்கிறேன். ஆனல் நான் அடைந்த அநுபவம் வேருக இருக்கிறது'' என்று அவன் கூறியபோது அவனுடைய கண்கள் கலங்கி இருந்தன.

''ஆனந்தராவ், வீணுக வருத்தப்படாதீர்கள். நீங்கள் வேலையை விட்டுச் செல்லும்படியாக விபரீதம் ஒன்றுமே நடந்துவிடவில்லை. இங்கு நான் இருக்கும் வரையில் உங்களை வேலையிலிருந்து நீக்குவதற்கு யாருக்குமே துணிவு கிடையாது'' என்று ஆறுதல் அளித்தாள் சுசீலா.

ஆனந்தன் ஏளனமாகச் சிரித்தான்.

அந்தச் சிரிப்பில் ஆனந்தனுக்கு எத்தனை நிராசை இருக்கிறது என்பதைச் சுசீலா கண்டு கொண்டாள். உடனே அவனை நோக்கி, ''பங்களா எனக்காகக் கட்டப்படுகிறது. அது விஷயத்தில் உங்களுக்குச் சந்தேகமே இல்லையே? ஆகையால் நான் விரும்பிய 'பிளான்' படி

தான் அது கட்டப்படும்; தெரிந்ததா? உங்கள் யோசனைகள் அனைத்தும் எனக்குப் பிடித்திருக்கின்றன. அந்தப் பிளானில் உள்ள தவறுகளைத் திவாகர் ஒப்புக்கொள்ளா விட்டாலும் என் மனத்துக்கு அவை தவறுகள்தாம் என்று நன்ருகப் படுகின்றன. ஆகையால் நீங்கள் கவலைப்படா தீர்கள்; வருத்தப்படாதீர்கள். நாளைக்கு நீங்களே ஒரு 'பிளான்' தயாரித்துக்கொண்டு வாருங்கள். என்ன; தெரிந்ததா?'' என்று கேட்டாள் அவள்.

ஆனந்தனுக்கு என்ன செய்வதென்றே தெரிய வில்லை. வேலையை விட்டுத் தன்னை நீக்கப்போகிருர்களே என்பதற்காக அவனுக்கு விசனம் இல்லை. திறமைக்கும் நேர்மைக்கும் பாராட்டுதல் இல்லையே என்கிற வருத்தந் தான் அவனுக்கு. ஆகையால் சுசீலாவின் ஆறுதல் மொழிகளால் அவனுக்குப் புத்துயிர் கிடைத்தமாதிரி தோன்றிற்று.

''அம்மா, நீலக் கடலில் நாற்றமடிக்கும் மீன்கள் உள்ளன; ஆனால் அதே கடலில் நல்முத்துக்களும் அகப் படுகின்றன அல்லவா?'' என்று கேட்டான் ஆனந்தன்.

ஆனந்தன் அவ்வாறு தன்னைப் புகழ்வது சுசீலா வுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதே சமயம் அந்தப் படிப்பில்லாத கிராமத் தொழிலாளியின் அறிவு நுட்பத் தைக் கண்டு வியந்தாள் அவள்.

''அது சரி, ஆனந்தராவ், இந்த உபமானங்களை எங்கே கற்றீர்கள்; நீங்கள் ஒரு கவி கூட; அல்லவா?''

''இல்லையம்மா....ஆனால் என்னுடைய வறுமை யான குடிசையில் ஒரு காவியம் இருக்கிறது, அம்மா.''

''உண்மையாகவா? அது என்ன காவியம்?''

''அது பேசும் காவியம், நடமாடும் காவியம்; அது தான் என் யசோதை.''

''ம்....ம்....உண்மைதான். இரண்டு நாட்களுக்கு முன் நான் பாலேகரின் வீட்டு வாசலில் பார்த்தேனே, அவள்தானே உங்கள் மனைவி? யசோதையா அவள் பெயர்?

மிகவும் அழகான பெயர். ஆனந்தராவ், நீங்கள் பாக்கியசாலி என்பதில் சந்தேகமே இல்லை. அந்தக் காவியத்தை ஒரு நாள் எனக்குக் காட்டுவீர்களா? ஏன், நாளைக்கே எங்கள் வீட்டுக்கு அவளை அழைத்துக்கொண்டு வாருங்கள். வேண்டாம்; நானே வருகிறேன் உங்கள் வீட்டுக்கு. ஆனால் நான் வரப்போவதாக மட்டும் அவளிடம் சொல்லிவிடாதீர்கள். ஏனென்றால் அவளை நான் ஆச்சரியத்தில் மூழ்கடிக்கப்போகிறேன்.''

ஆனந்தனுக்கு இது வேடிக்கையாக இருந்தது. பணக்காரச் சேட் ஒருவரின் மனைவி இத்தனை பண்புடையவளாக இருப்பாள் என்று அவன் கனவிலும் கருதவில்லை. அவனுக்குச் சுசீலா மனம் விட்டுப் பேசும் இயல்பு மிகவும் பிடித்திருந்தது.

''அம்மா, உங்களை நான் முத்து என்று குறிப்பிட்டது வெறுமனே அல்ல. ஆனால் இந்த முத்து இருக்க வேண்டிய இடம்..''

''ஆனந்தராவ், நிலைமறந்து என்ன பேசுகிறீர்கள்?'' என்று சிறிது கடுமையான குரலில் கேட்டாள் சுசீலா.

உடனே ஆனந்தன் தன் பிழையை உணர்ந்தான். ''மன்னியுங்கள், அம்மா; நான் தவறிவிட்டேன். என் இயல்பே இப்படித்தான். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் வழக்கமே என்னிடம் இல்லை.''

''போகட்டும், ஆனந்தராவ்; வீணாக வருத்தப்படாதீர்கள். நீங்கள் வேலையை விட்டுப் போக மாட்டீர்கள் அல்லவா?''

ஆனந்தன் சிறிது தயங்கினான்.

''போக மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுங்கள்.''

''எதற்காகச் சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்? இந்த ஆனந்தனின் வாய் வார்த்தையேதான் சத்தியம்......சரி, நான் போகவில்லை. உங்களுக்காக இந்த அவமானத்தைப் பொறுத்துக்கொள்கிறேன். ஆனால்

இன்னொரு முறை மட்டும் என்னை இம்மாதிரி இக்கட்டில் மாட்டி வைக்காதீர்கள்.''

கடற்கரையில் கொஞ்சம் கொஞ்சமாக வெளிச்சம் மங்கி இருள் கவிந்துகொண்டது. ஆனந்தனும் சுசீலாவும் அங்கிருந்து எழுந்து, வெவ்வேறு மார்க்கங்களில் தங்கள் வீட்டை நோக்கிப் புறப்பட்டனர்.

'மனிதர்கள் படிப்பினால்தான் உயர்கிறார்கள் என்பது ஒன்றும் இல்லை. படிப்பற்றவர்களும் புத்தி சாலிகளாக இருக்கிறார்கள்.'—இந்த எண்ணந்தான் சுசீலாவின் மனத்தில் மேலோங்கி இருந்தது.

ஆனந்தனையும் திவாகரையும் கவனிப்போம். ஆனந்தன் எத்தனை உயர்ந்த உள்ளம் படைத்தவனாக இருக்கிறான்! அடுத்தாற்போல், ஆனந்தனும் மோத்திராம் சேட்டும்......? இந்த இருவர்களையும் எடை போட்டுப் பார்த்தது சுசீலாவின் மனம். ஆனந்தன் எத்தனையோ சிறந்தவன் என்றுதான் அவளுக்குப் பட்டது.

அதே சமயம் ஆனந்தனும் யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

'ஆண்களைவிடப் பெண்கள்தாம் உயர்ந்தவர்கள். சுசீலா ஒப்புக்கொண்டதை, திவாகர் ஏன் ஒப்புக்கொள்ள வில்லை? தன் கௌரவம் பாழாகிவிடும் என்று நினைத்தானா? மோத்திராம் சேட்டின் விஷயத்தை விட்டுத் தள்ளுங்கள். அவர் செல்வச் சீமான். பணக்காரர்களுக்குப் புத்தி கொஞ்சம் மட்டு என்பார்கள். ஆனால் திவாகரைப் போன்ற படித்தவன் என்னை ஏன் எதிர்க்க வேண்டும்?

'சுசீலாதான் எத்தனை பரந்த உள்ளம் படைத்தவள்! அத்தனை தூரம் போவானேன்? யசோதையையே பாருங்கள். என்னைப்போன்ற படிப்பில்லாத பதியிடம் அவளுக்குத்தான் எத்தனை பிரேமை! உலகில் பெண்கள் இருப்பதனால்தான் உயிர் வாழ வேண்டுமென்று தோன்றுகிறது. அவர்கள் மட்டும் இல்லையேல் இது நரகத்துக்குச் சமானமாகிவிடும்.

'சுசீலாவை நான் நல்முத்துக்கு ஒப்பிட்டது மிகவும் பொருந்தும். ஆனால் அதே விலை மதிக்க முடியாத முத்து மோதிரம் ஸேட்டுக்குச் சோபை அளிக்கவில்லை. இதை நான் வேறு விகற்பமின்றிச் சகஜமாகத்தான் சொன்னேன். ஆனால் சுசீலாவுக்கு அது பொறுக்கவில்லை. அவளுக்கு எத்தனை கோபம் வந்தது!

'தகுதியில்லாத கணவன்மார்களிடமும் மனைவிகள் அன்பு கொள்ளத்தான் கொள்கிறார்கள்.' இதை நினைத்தும் ஆனந்தனுக்குச் சுசீலாவிடம் அளவு கடந்த அபிமானம் ஏற்பட்டது.

## 6

# மனக்குறை

மறுநாள் காலையில் மோத்திராம் சேட் ஏதோ வேலை விஷயமாக மால்வனுக்குப் போகப் புறப்பட்ட போது சுசீலா அவரை நோக்கி, ''அங்கே எத்தனை நாட்கள் தங்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''நாளை நின்று வந்துவிடுவேன்.''

''சரி, மாலையில் வண்டியைத் திருப்பி அனுப்பி விடுங்கள்.''

''ஏன்? நீ எங்காவது போகவேண்டுமா? அல்லது திவாகருக்காக..''

''இல்லை, மாதர் சங்கத்தில் வேலை இருக்கிறது.''

''அப்படியா? சரி சரி. உடனே அனுப்பிவிடுகிறேன்.''

மோத்திராம் சேட் காரில் ஏறிக்கொள்ளச் சென்ற போது, சுசீலா அவரை நிறுத்தி, ''பிறகு என்ன முடிவுக்கு வந்தீர்கள்? ஆனந்தனை வேலையை விட்டு நீக்கப் போகிறீர்களா?'' என்று கவலையுடன் கேட்டாள்.

''ஆம், அவனை வேலையை விட்டு எடுக்கத்தான் வேண்டும். ஏனென்றால் திவாகர் போன்ற பட்டம் பெற்ற எஞ்சினீயரின் வேலையில் குற்றம் சொல்பவனுக்குத் தண்டனை அளிக்காமலா இருப்பது?''

''ஆனால் அவன் வேண்டுமென்றே சொன்னானா? அல்லது விளையாட்டுக்குச் சொன்னானா? தவறுகள் இருக்கத்தானே இருந்தன? திவாகரின் பிளானில் தவறுகள் உள்ளன என்பது உங்களுக்காவது புரிந்ததா, இல்லையா?''

''ஆம், புரிந்தது. ஆனந்தன் சொல்வதிலிருந்து அவை தவறுகள் என்று எனக்கு நன்றாகத் தெரிந்தது.

ஆனால் திவாகர் போன்ற பிரபல எஞ்சினீயர் தவறுகள் செய்வாரா?''

''ஏன் செய்ய மாட்டான்? திவாகர் பரீட்சையில் தேர்ச்சி பெற்ற எஞ்சினீயர் ஆனாலும் மனிதன்தானே! விசுவகர்மா அல்லவே?'' - சுசீலா ஆத்திரத்துடன் பேசினாள்.

''அப்போது, ஆனந்தன் சொல்வது சரியென்று நீ நினைக்கிறாய்? நல்லது. இவன் சரி என்கிறான்; அவன் சரியல்ல என்கிறான். இந்தத் தகராறை எல்லாம் தீர்த்துவைக்க எனக்கு நேரம் இல்லை. பங்களா உனக்காகக் கட்டப்படுகிறது. ஆகையால் அது சம்பந்தமாக என்ன செய்வதென்பதை நீயே தீர்மானித்துவிடு.''

''அப்போது ஆனந்தனை வேலையிலிருந்து எடுக்க வேண்டாம் அல்லவா?',

''அவசியம் இல்லைதான். ஆனால் திவாகர் என்ன நினைப்பார்?''

''அதைப்பற்றி நான் பார்த்துக்கொள்ளுகிறேன்.''

''பின்னே சரி. நான் போகிறேன்.''

இவ்வாறு கூறிவிட்டு மோத்திராம் சேட் காரில் போய் உட்கார்ந்தார். கார் புறப்பட்டுச் சென்றது.

சுசீலா வெளி வராந்தாவிலிருந்து நடு ஹாலுக்கு வந்தாள்.

திவாகர் அங்கே ஒரு நாற்காலியில் அமர்ந்து டைம்ஸ்' பத்திரிகையைப் படித்துக்கொண் டிருந்தான். அவனுடைய முகத்திலிருந்து அவன் மனநிலை நன்றாகத் தெரிந்தது. அவனுடைய கவனம் எல்லாம் பத்திரிகையில் இல்லை. அவன் படிப்பதுபோல் பாசாங்கு செய்துகொண்டிருந்தான். அவனுடைய பார்வை சுசீலாவிடமே லயித்திருந்தது.

சுசீலா சோபாவில் அமர்ந்து பின்னல் வேலை செய்துகொண் டிருந்தாள். சிறிது நேரம் யாரும் எவருடனும் பேசவில்லை. அந்த மௌனம் இருவரையும்

வாட்டிக்கொண் டிருந்தது. திவாகர் சுசீலாவுடன் ஏதோ பேச வேண்டுமென்று துடித்தான். அது சாதாரணமாகப் பேசக் கூடிய விஷயம் அல்லவாதலால் சட்டென்று பேசுவதற்கு அவனுக்குத் துணிவு ஏற்படவில்லை. பேசவும் முடியாமல், பேசாமல் இருக்கவும் முடியாமல் தத்தளித்துக்கொண் டிருந்தது அவனுடைய கள்ளம் நிறைந்த உள்ளம்.

இறுதியில் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு அவன் சுசீலாவைக் கூப்பிட்டான்.

''சுசீலா!''

இதைச் செவியுற்ற சுசீலா திடுக்கிட்டாள். அவளுடைய முகத்தில் பயக் குறி தோன்றியது. அவள் தன் பார்வையைத் திவாகரின் பக்கம் திருப்பினுள்.

''சுசீலா!'' என்று திவாகர் அவளிடம் பேச ஆரம்பித்தான். ஆனால் அவனுடைய குரலையும் மிஞ்சி மற்ருெரு குரல் வெளியிலிருந்து கணீரென்று வந்தது. வாசலில் யாரோ கூப்பிட்டார்கள்.

''சுசீலா அம்மா!''

சுமார் பத்து வயசுப் பெண் ஒருத்தி வீட்டு வாசலில் நின்றுகொண் டிருந்தாள்.

வெளியில் வந்த சுசீலா, அந்தப் பெண்ணை நோக்கி, ''என்னடி கங்கு?'' என்று கேட்டாள்.

''அக்கா உங்களைச் சங்கத்துக்கு வரச் சொன்னுர்.''

''சரி, போ. வருகிறேன் என்று சொல்.''

உடனே அந்தச் சிறுமி சிட்டுக் குருவியைப் போலப் பறந்து ஓடினுள்.

சுசீலா, தன் தோல்பையையும் குடையையும் எடுத்துக்கொண்டு மாதர் சங்கத்துக்குப் புறப்பட்டாள். ஆனால் போகும்போது சிறிது தயங்கினுள் அவள். ஒரு கணநேரம் ஏதோ யோசித்துவிட்டு, ''திவாகர்'' என்று கூப்பிட்டாள். திவாகர் திறந்த வாய் மூடாது இமை கொட்டாது அவளையே நோக்கிக்கொண் டிருந்தான்.





''இன்று மாலையில் நாம் உலாவப் போவோம். உங்களிடம் சில விஷயங்களைப்பற்றிப் பேச வேண்டும்'' என்றாள். திவாகரின் முகம் மலர்ந்தது. பழைய காதல் விஷயமாகத்தான் அவள் ஏதோ பேச விரும்புகிறாள் என்று எண்ணி, திவாகர் இன்ப வெள்ளத்தில் மிதந்தான்.

சுசீலா அங்கிருந்து புறப்பட்டுச் சென்று மாதர் சங்கத்தை அடைந்தாள்.

மோத்திராம் சேட்டின் பங்களாவுக்கு அருகிலேயே இருந்த் ஒரு சிறு வீட்டில்தான் மாதர் சங்கம் இடம் பெற்றிருந்தது. முன்பு அந்த வீடு ஆடுமாடுகளுக்கான கொட்டிலாக உபயோகப்பட்டு வந்தது. ஆனால் சுசீலா வந்த பிறகு, அந்த வீட்டின் உருவமே மாறி, இப் பொழுது மாதர் சங்கம் அங்கே நிறுவப்பெற்றது.

சுசீலா மாதர் சங்கத்தில் நுழைந்தபோது அங்கே வயசான பெண்மணி ஒருத்திதான் இருந்தாள். ஒரு பக் கத்தில் சுசீலாவைக் கூப்பிட வந்த கங்கு ஒரு நாய்க் குட்டியுடன் விளையாடிக்கொண் டிருந்தாள்.

அந்த வயசான பெண்மணிக்குச் சுசீலா அஞ்சலி செய்துவிட்டு, ''என்ன அக்கா, இன்று சீக்கிரம் வந்து விட்டீர்கள்? ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று கேட்டாள்.

வயசான பெண்மணி சிரித்தாள்.

அவளைப் பார்க்கும்போது அவள் மிகவும் கண்டிப் பானவள் என்று தெரிந்தது. வயசான காரணத்தால் அவள் பலவீனமாகிச் சோர்ந்து காணப்பட்டாலும் அவளுடைய கண்களில் மட்டும் ஒரு வகைப் பிரகாசம் இருந்தது. அவளுக்குச் சுமார் ஐம்பது ஐம்பத்தைந்து வயசு இருக்கலாம்.

அவள் சுசீலாவை நோக்கி, ''விசேஷம் ஒன்றும் இல்லை, அம்மா. வெகு காலமாகவே நான் உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டுமென்று இருந்தேன்'' என்று ஆரம்பித்தாள்.

''என்ன அக்கா அந்த விஷயம்?'' என்று ஆவலுடன் கேட்டாள் சுசீலா.

''சுசீலா அம்மா, எனக்கு இப்பொழுது வயசாகி விட்டது என்று உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. இந்தச் சங்கத்தின் வேலைகளை முன்போல இப்பொழுது ஓடியாடிச் செய்ய முடியவில்லை. ஆகையால் யாரை யாவது எனக்குப் பதிலாக நியமித்தால் நன்றாக இருக்கும்.''

''இவ்வளவுதானா? நான் என்னவோ ஏதோ என்று பயந்துபோனேன். உண்மையைச் சொல்லட்டுமா, அக்கா? உங்களுக்கு வயசாகவில்லை; இளமைதான் ததும்புகிறது. நாற்பத்தைந்து வயசு வரையில் எழுதப் படிக்காமல் இருந்து, பிறகு ஒரே வருஷத்தில் கல்வி கற்ற யாரையாவது நீங்கள் கண்டிருக்கிறீர்களா? எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டது மட்டும் அல்ல; தையல்வேலை, பூவேலை கூடத்தான் உங்களுக்குத் தெரிந்திருக்கின்றன. அப்படிப்பட்ட நீங்களே இப்பொழுது சங்கத்தை விட்டுப் போக விரும்பினால், சங்கம் மேற்கொண்டு நடப்பது எப்படி? உங்களால் தானே இங்கு எல்லா வேலைகளும் நடந்து வருகின்றன?''

அந்தப் பெண்மணி பதிலே பேசவில்லை.

''அக்கா, இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய உதவிக்காகப் பெண் ஒருத்தியை நியமிக்கிறேன்'' என்றாள் சுசீலா.

''யாரை அம்மா நியமிக்கப் போகிறீர்கள்?'' என்று அந்தப் பெண்மணி கேட்டாள்.

''சீக்கிரமே உங்களுக்குத் தெரியவரும். அந்த வேலையாகத்தான் இப்போது நான் புறப்பட்டிருக்கிறேன். இன்று பிற்பகலில் நான் நேரங் கழித்துச் சங்கத்துக்கு வருவேன். அதுவரையில் எல்லாப் பெண்களுக்கும் நீங்களே கற்றுக்கொடுங்கள்.'' இவ்வாறு கூறிவிட்டுச் சுசீலா சிரித்துக்கொண்டே சங்கத்தை விட்டு வெளியேறினாள்.

அப்பொழுது மணி பத்தாகி இருந்தது. சூரிய கிரணங்கள் சுரீரென்று உடம்பில் பட்டன. தரையிலும் சூடேறி இருந்தது. ஆகவே சுசீலா தன் குடையைப் பிரித்தாள். வேகமாக நடக்கத் தொடங்கினாள்.

அவள் கடற்கரையோரமாகச் சென்றுகொண்டிருந்தாள். அப்போது கடலில் வற்றம் ஆகையால், வெகு தூரம் வரையில் கடற்கரை தெரிந்தது. வெகு தொலைவில் அலைகள் கரையை மோதும் சத்தம் அரைகுறையாகச் செவிகளில் விழுந்துகொண்டிருந்தது. கரையில் மீன்களின் நாற்றம் மூக்கைத் துளைத்தது. சுசீலா, தரையை நோக்கிய வண்ணம் நடந்து சென்றுகொண்டிருந்தாள். அவளுடைய காலடிச் சத்தம் கேட்டு, இங்கும் அங்கும் திரிந்துகொண்டிருந்த நண்டுகள் பயந்து ஓடி வளைகளில் ஒளிந்தன. அவள் அந்தப் பொந்துகளைக் கடந்து சென்றதும், அவை தலையை நீட்டிப் பார்த்தன. இதைக் கண்ட சுசீலாவுக்கு நண்டுகள் கண்ணுமூச்சி ஆடுவதுபோல் இருந்தது. அந்த வேடிக்கையைக் கண்டு ஆனந்தம் அடைந்தவளாக அவள் மேலும் நடக்கலானாள்.

எதிரே செம்படவப் பெண் ஒருத்தி, மீன் கூடையைச் சுமந்துகொண்டு வேகமாக வந்துகொண்டிருந்தாள். அவள் சுசீலாவை நெருங்கியதும், ''அம்மா, மீன் வேணுமா? இப்போதுதான் பிடித்தது'' என்றாள்.

''என்ன மீன் இருக்கிறது?'' என்று சுசீலா சிறிது நின்றவண்ணம் கேட்டாள்.

''சுளே இருக்கிறது; ஷேத்தகா இருக்கிறது.''

''அப்படியா? பின்னே நம்ம வீட்டிலே கொடுத்துவிட்டுப் போ. இன்று விருந்தாளி வந்திருக்கிறார். போ, போ, சீக்கிரம்.''

இவ்வாறு கூறிவிட்டுச் சுசீலா அங்கிருந்து புறப்பட்டாள். இப்பொழுது அவள் கடற்கரையை விட்டுக் குறுக்குப் பாதை ஒன்றில் செல்லலானாள். சிறிது

நேரத்தில் அவள் ஆனந்தனின் அருகில் வந்து சேர்ந்தாள். வெளியில் இருந்தவாறே அவள் தன் பார்வையை வீட்டுக்குள் செலுத்தினுள். அங்கே ஆனந்தன் ஒரு பலகையின் மேல் அமர்ந்து பல்வேறு உருவங்களை வெட்டி எடுப்பதில் வெகு சிரத்தையுடன் ஈடுபட்டிருந்தான். ஆகையால் சுசீலா வந்ததை அவன் கவனிக்கவில்லை.

சுசீலா குடையை மடக்கினுள். கைக் குட்டையால் முகத்தில் வழிந்த வேர்வையைத் துடைத்துக்கொண்டே, ''எஞ்சினீயர் சாஹேப்!'' என்று கூப்பிட்டாள்.

ஆனந்தன் தலையைத் தூக்கிப் பார்த்தான். அங்கே சுசீலா நிற்பதைக் கண்டதும் அவனுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. உடனே அவளை உள்ளே வரச்சொல்லி, இங்கும் அங்குமாகச் சிதறிக்கிடந்த பொம்மைகள், பாதி தயார் செய்த ஒரு புது வகைக் கப்பலின் மாதிரி உருவம் முதலியவற்றை ஒரு புறம் சுசீலா உட்காருவதற்காக இடம் செய்து ஒதுக்கிக் கொடுத்தான்.

''இப்படி உட்காருங்கள்; அல்லது, மணை போடட்டுமா?'' என்று அவளைக் கேட்டான்.

''வேண்டாம். இங்கேயே உட்காருகிறேன். இதெல்லாம் என்ன வேலை?'' என்று அவள் ஆனந்தனைக் கேட்டாள்.

''ஒன்றும் இல்லை. இப்படி ஏதாவது உருவங்களைச் செய்துகொண்டே இருப்பேன். இது என் பொழுது போக்கு'' என்முன் ஆனந்தன்.

''இது என்ன, கப்பலின் உருவம்?''

''நீராவிக் கப்பல் இருக்கிறதல்லவா? அதுபோலவே துரிதமாகச் செல்லக்கூடிய யந்திரக் கப்பலின் மாதிரி இது. கற்பனை உதித்தது; உருவாக்கினேன்.''

''அப்படியா? அது எப்படி வேலை செய்கிறது என்று சொல்லுங்கள்.''

''இப்பொழுது சொன்னால் உங்களுக்கு ஒன்றுமே புரியாது. இது இன்னும் பூர்த்தியாகவில்லை. சோதனை தான் நடக்கிறது. இதில் மட்டும் நான் வெற்றி கண்டால், நீராவிக் கப்பலைத் தூக்கி அடிக்கும் என் யந்திரக் கப்பல்!''

ஆனந்தனின் முகத்தில் பிரதிபலித்த மகிழ்ச்சியைக் கண்டு சுசீலாவுக்கு எவ்வளவோ பெருமையாக இருந்தது.

''அப்பொழுது நல்லதாய்ப் போயிற்று. எங்கள் பாய்மரக் கப்பல்களையும் இம்மாதிரியே செய்து கொடுங்கள்.''

''உம்.''

''சரி, இவை என்ன பொம்மைகள்? இவை யாருக்காக? ஓஹோ, வருங்காலத் திட்டமா?'' என்று சுசீலா சிரித்துக்கொண்டே கூறினாள்.

ஆனால் அதன் அர்த்தம் ஆனந்தனுக்கு விளங்கவில்லை. இடையில் ஆனந்தன் ஒரு காகிதத்தை எடுத்துச் சுசீலாவிடம் நீட்டினான்.

சுசீலா அதைக் கையில் வாங்கிக்கொண்டே, ''இது என்ன? எந்தப் பிளான்?'' என்று கேட்டாள்.

''இது உங்கள் பங்களாவுக்கான பிளான். இதை விவரமாகச் சொல்லட்டுமா?''

''வேண்டாம். எனக்கு உங்களிடம் நம்பிக்கை இருக்கிறது.''

வெளியில் ஆனந்தன் யாரோ பெண் ஒருத்தியுடன் பேசிக்கொண்டிருக்கிறான் என்பதை யசோதை உள்ளிருந்தவாறே கண்டுகொண்டாள். அவள் யார் என்று பார்ப்பதற்காக அவள் வெளியில் வந்தாள்.

சுசீலாவைக் கண்டதும் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'அன்று நாம் பார்த்த அம்மாள் இவருடன் வெகு சரளமாகப் பேசிக்கொண்டிருக்கிறாள்; இருவரும் ஒருவரை ஒருவர் நன்றாக அறிந்திருக்கிறார்கள்; இந்த விஷயம் எனக்கு இதுவரையில் தெரியவில்லையே! ஒரு

வேளை அவர்களுடைய அறிமுகம் சேட் வீட்டில் ஏற்பட்டிருக்கலாம்' என்று யசோதை தன் மனத்துக்குள் எண்ணிக்கொண்டாள்.

யசோதையைக் கண்டதும் சுசீலாவுக்குப் பரமானந்தம். அப்பொழுது யசோதை ஒரு சாதாரணப் புடைவையைத்தான் கட்டிக்கொண்டிருந்தாள். ஆனாலும் அவளுடைய சிவந்த மேனிக்கு அது எடுப்பாக இருந்தது. கருமேகங்களுக்கு இடையில் பூர்ண சந்திரன் பிரகாசிப்பதுபோல் தோன்றியது சுசீலாவுக்கு. யசோதையின் பின்னல் அலங்காரம் வெகு சாதாரணமாக இருந்தபோதிலும் சுசீலாவின் மனத்துக்கு மிகவும் பிடித்திருந்தது.

அவள் மனத்துக்குள் எண்ணமிட்டாள்: 'இந்த அழகுத் தெய்வம் ஆனந்தனின் குடிசையிலா வாழ வேண்டும்? ஆனால் இவளும் பாக்கியசாலி அல்லவா, ஆனந்தனைப் போன்ற புத்திசாலியான பதியை அடைந்திருப்பதற்கு?'

சுசீலா யசோதையை நோக்கிப் புன்னகை புரிந்தாள். இருவரும் ஏக காலத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டபோது, யசோதையும் சிரித்தாள். ஆனந்தன் இருவரையும் அன்புடன் நோக்கிக்கொண்டிருந்தான்.

''சுசீலா அம்மா, இவள்தான் என் மனைவி யசோதா'' என்று ஆனந்தன் தன் மனைவியைச் சுசீலாவுக்கு அறிமுகம் செய்துவைத்தான். யசோதையின் ரோஜா மலரை ஒத்த மிருதுவான கன்னங்கள் வெட்கத்தால் மேலும் சிவந்தன.

''வா அம்மா யசோதா, இப்படி உட்கார்'' என்று அன்பொழுகக் கூறிய சுசீலா, ஆனந்தனை நோக்கி, ''யசோதையை நான் இப்பொழுது என்னுடன் அழைத்துக்கொண்டு போகிறேன். சாயந்தரம் அனுப்பிவிடுகிறேன்'' என்றாள்.

''சரி, உங்கள் விருப்பம்'' என்ருன் ஆனந்தன்.

உடனே சுசீலா யசோதையை நோக்கி, ''என்ன அம்மா, எங்கள் வீட்டுக்கு வருகிருயா?'' என்று கேட்டாள்.

''வருகிறேன். ஆனுல் இப்பொழுது அல்ல. வீட்டு வேலைகளை முடித்துவிட்டு மத்தியான்னம் வருகிறேன்'' என்று பதிலளித்தாள் யசோதை.

''இப்பொழுது ஏன் இல்லை? சமையல் செய்ய வேண்டுமா? எங்கள் வீட்டுக்கே சாப்பிட வந்துவிடுங்கள்.''

''வரலாம். ஆனுல் இவர் பிறர் வீட்டில் சாப்பிடுவதில்லை'' என்று ஆனந்தனைப் பார்த்த வண்ணம் கூறிஞள் யசோதை.

''சரி, அப்பொழுது மத்தியான்னம் கட்டாயம் வருகிருயா? காரை அனுப்பட்டுமா? வேண்டாமா? பிறர் வண்டியிலும் அவர் சவாரி செய்வதில்லையா?'' - சுசீலா சிரித்தவண்ணம் கிண்டலாகக் கேட்டாள்.

இதற்குள் யசோதையும் அவளைப்போல் மர்மமாகவே பேசிஞள். ''ஆமாம். அதோ பாருங்கள் எங்களுடைய வண்டி. அது தயாரானதும் நாங்கள் அதில் வருவோம்.''

யசோதை காட்டிய இடத்தை நோக்கிஞள் சுசீலா. அங்கே ஒரு மூலையில் உடைந்துபோன பொம்மை மோட்டார் ஒன்று கிடந்தது.

''ஆனந்தாரவ், இதென்ன பொம்மை?'' என்று கேட்டாள் சுசீலா.

ஆனந்தன் பதிலே பேசவில்லை.

யசோதை ஆனந்தனைப் பரிவுடன் பார்த்தாள். பிறகு சுசீலாவை நோக்கி, ''மோட்டார் தயாரிக்கும் பித்துப் பிடித்திருக்கிறது இவருக்கு'' என்று கூறிஞள்.

இதைச் செவியுற்ற அவளுக்கு ஆனந்தனிடம் அளவு கடந்த மரியாதை ஏற்பட்டது. ஆகவே அவள் பெருமையுடன் ஆனந்தனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

அப்படிப் பார்த்தபோது அவனுடைய முகத்தில் ஓர் ஒளி இருப்பதைக் கண்டாள்.

சிறிது நேரத்துக்குப்பின் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு சுசீலா, அங்கிருந்து புறப்பட்டுச் சென்றாள். அவளுடைய சிந்தனை விரியலாயிற்று 'இப்பேர்ப்பட்ட குணசாலியும் புத்திசாலியுமான ஒருவரின் மூளை கூலி வேலை செய்வதில் அல்லவா வீணாகிறது? நம் நாட்டிலேயே கப்பலையும் மோட்டாரையும் தயாரிக்கத் திட்டமிடும் இந்த மேதையை, திவாகர் ஒரு நொடியில் முட்டாள் என்று சொல்லிவிட்டானே! இதைச் சேட்டுக்குத் தெரிவிக்கத்தான் வேண்டும். இப்படிப்பட்ட மதிப்பில்லா மாணிக்கம் குப்பையில் விழுந்து பாழாவதைத் தடுக்கவேண்டும்.''

அப்பொழுது அவளுடைய மோட்டார் வண்டி மால்வணிலிருந்து திரும்பி வந்துகொண் டிருந்தது. அவள் நடந்து செல்வதைக் கண்ட சாரதி உடனே காரை நிறுத்தினான். சுசீலா காரில் ஏறி உட்கார்ந்துகொண்டாள். ஆனால் அவள் காரில் எப்பொழுது ஏறினாள், எப்பொழுது அது பங்களாவை அடைந்தது என்பது சுசீலாவுக்குத் தெரியவில்லை.

''சேட், ஒருகால் மால்வணிலேயே தங்க வேண்டி இருக்கும்'' என்றான் சாரதி.

''என்ன சொன்னாய்?'' என்று திடுக்கிட்டுக் கேட்டாள் சுசீலா, காரிலிருந்து இறங்கிக்கொண்டே.

''ஐயா நாலைந்து நாட்கள் மால்வணிலேயே தங்க வேண்டி இருக்கும்.''

''ஏன்?''

''கொச்சியிலிருந்து வரும் பாய்மரக் கப்பல் இன்னும் வந்து சேரவில்லை. ஏதோ விஷயம் இருக்கிறது. அது நேற்றே வந்திருக்க வேண்டும். ஆனால் இன்றைக்குக்கூட வரவில்லை என்றால் சேட்டுக்குக் கவலையாகத் தானே இருக்கும்?''

சுசீலா, ''ஆமாம்'' என்று கூறிக்கொண்டே பங்களாவில் நுழைந்தாள்.

அன்று மாலையில் யசோதை அங்கு வந்தாள். அவள் பங்களாவைச் சுற்றிப் பார்த்தாள். சுசீலாவின் செல்வச் சிறப்பைக் கண்டு அவளுடைய மனம் புழுங்கியது.

பின்னர் அவள் மாதர் சங்கத்துக்குச் சென்று அங்கு நடக்கும் வேலைகளைக் கண்டாள். பெண்கள் தையல் வேலை எப்படிச் செய்கிறார்கள், மற்ற வேலைகளை எப்படிச் செய்கிறார்கள் என்று அவள் கவனித்தாள். அக்காவின் வேலையை ஏற்றுக்கொள்ளத் தனக்குச் சம்மதம் என்று தெரிவித்தாள். அன்று முதல் அவள் மாதர் சங்கத்தின் ஒரு நிர்வாகி ஆகிவிட்டாள். ஆனால் அவளுடைய மனம் மட்டும் ஒரு நிலையில் இருக்கவில்லை.

அவள் வீடு திரும்பியபோது அவளுடைய மனக் கண்முன் சுசீலா, அவளுடைய கார், அவளுடைய கவர்ச்சியான செல்வச் சிறப்பு இவைதாம் காட்சி அளித்துக்கொண்டிருந்தன.

'இம்மாதிரி சுகபோகங்களை நானும் அநுபவித்திருக்க வேண்டியவள். சுசீலாவுக்கும் எனக்கும் இடையில் அவ்வளவாக வேற்றுமை இல்லை. பார்க்கப் போனால் சுசீலாவைவிட நான்தான் அழகியாக இருக்கிறேன். அவளுக்கு நேர்த்தியான புடைவைகள் இருக்கின்றன; நகைநட்டுகள் உள்ளன. ஆனால் எனக்கோ வறுமை காரணமாக அவையெல்லாம் கிடைப்பதில்லை. அவ்வளவுதான். சுசீலா என்னைவிடக் கொஞ்சம் அதிகமாகப் படித்திருக்கிறாள். ஆனால் நானும் அதுவரையில் படித்திருப்பேன்; பி. ஏ. பாஸ் செய்திருப்பேன். சுசீலா சீமானுக்கு வாழ்க்கைப்பட்டிருப்பதனால் இத்தனை சுகங்களை அநுபவிக்கிறாள். என் தலைவிதி, நான் ஏழையை மணந்துகொள்ள வேண்டியதாயிற்று!' இவ்வாறு யசோதையின் உள்ளக் கடலில் சிந்தனை அலைகள் மோதிக்கொண்டிருந்தன.

அவளுடைய உள்ளத்தில் மனக் குறை என்னும்

உணர்ச்சி விழித்துக்கொண்டது. மனம் நிம்மதியை இழந்தது. ஆனால் யாரிடம் வெறுப்புக்கொள்வது என்று தான் அவளுக்குத் தெரியவில்லை. தன் ஆத்திரத்தை எல்லாம் சாலை ஓரத்திலிருந்த செடி கொடிகளின்மேல் காட்டினாள். அவற்றில் இருந்த இலைகளையும் பூக்களையும் பறித்துக் கசக்கி எறிந்தாள். அங்கு ஒரு மரக்கிளையில் காகம் ஒன்று உட்கார்ந்து 'கா கா' என்று கரைந்து கொண்டிருந்தது. அதை அவள் வெறுப்புடன் நோக்கினாள்.

யசோதை வீட்டை அடைந்தபோது, ஆனந்தன் தன் வேலையில் ஆழ்ந்திருந்தான். தன் மனைவியின் நிம்மதி குலைந்த மன நிலை அவனுக்கு எப்படித் தெரியும்?

அதிருப்தியும் மனக் கசப்பும் நிறைந்த உள்ளத்துடன் அவள் வாசற்படியிலேயே கணநேரம் நின்றாள். அங்கிருந்தே தன் கணவனைக் கூர்ந்து நோக்கினாள். தன் வாழ்க்கை வறண்ட பாலைவனம் ஆனதற்குக் காரணமே அவன்தான் என்று அவள் தீவிரமாக நினைக்கத் தொடங்கி விட்டாள். அவளுடைய உள்ளத்தைத் துயர அலைகள் தாக்கின. இந்த வாழ்க்கையிலேயே கசப்பு ஏற்பட்டு, வெறுப்புடன் அவள் வீட்டில் நுழைந்தாள்.

அன்று இரவெல்லாம் அவள் நீருக்கு வெளியில் போடப்பட்ட மீனைப்போல் வேதனை தாளாமல் துடித்துக் கொண்டிருந்தாள்.

## 7
# மோகன வடிவம்

திவாகர் அந்த நாளை, பாக்கியம் செய்த நாளாகக் கருதினன். 'மாலையில் உலாவப் போகலாம்' என்று அன்று காலை சுசீலா சொன்னபோது, அவனுடைய மன மென்னும் பறவை சிறகடித்துப் பறக்கத் தொடங்கி யது. காணமற் போன ஒரு பொருள் கிடைத்தது போன்று ஆனந்த உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. உலாவப் போகும்போது சுசீலா தன்னிடம் என்ன என்ன பேசுவாள், என்ன என்ன கேட்பாள் என்றெல்லாம் அவன் கற்பனை செய்து பார்த்துக்கொண்டான். மத்தி யான்னம் வரையில் கூடத்திலேயே அமர்ந்து, அவன் சிந்தனை உலகில் சஞ்சரித்துக்கொண் டிருந்தான்.

சுசீலா ஆனந்தனின் இல்லத்திலிருந்து திரும்பி வந்தபோது, திவாகர் மெய்ம்மறந்து மோன நிலையில் இருந்தான். சற்றைக்கெல்லாம் மோன நிலை கலைந்து, அவன் சுசீலாவின் முகத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். ஆனல் அந்த முகத்தில் அவன் எதிர் பார்த்த பிரேமை உணர்ச்சியே காணப்படவில்லை. அதற்குப் பதிலாக அவள் முகத்தில் ஒருவித கம்பீரந் தான் காணப்பட்டது.

அன்று மத்தியான்னம் அங்கு யசோதை வந்தாள். இருவரும் அளவளாவிக்கொண் டிருந்தனர். அப்பொழுது திவாகர் சுசீலாவையே இமைகொட்டாது பார்த்துக் கொண்டிருந்தான்; ஓயாமல் சிந்தனையில் ஈடுபட்டிருந் தான். சுசீலாவின் இந்தச் சுபாவம் அவனுக்குப் புதி ராகவே பட்டது. பழைய சுசீலா - காலேஜில் படித்த போது தன்னைக் காதலித்துவந்த அதே சுசீலா - இதற்குள் எப்படி மாறிவிட்டாள் என்பதை நினைக்க நினைக்க அவ னுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

அன்று சாயந்தரம் அவர்கள் உலாவச் சென்ற போது, அவன் கேட்ட முதல் கேள்வி: ''சுசீலா, நீ இங்கே வந்த பிறகு முற்றும் மாறி இருக்கிருய். இங்கு நான் ஒரு புதிய சுசீலாவைத்தான் காண்கிறேன். ஏன் அப்படி?''

சுசீலா பதிலொன்றும் பேசாமல் அவனையே நோக்கிக்கொண் டிருந்தாள்.

திவாகர் தொடர்ந்து சொன்ஞன்: ''பழைய சுசீலா....''

''பழைய சுசீலா மடிந்துபோனுள்'' என்று அவனுடைய வாக்கியத்தைப் பூர்த்தி செய்தாள் அவள். ''இப்பொழுது நன்ருய்க் கேளுங்கள். உங்கள் எதிரில் இருக்கும் சுசீலாவுக்கும் பழைய சுசீலாவுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை, திவாகர்!'' என்று அவள் அழுத்தந் திருத்தமாகச் சொன்னுள்.

இதைக் கேட்ட திவாகர் வியப்படைந்தான். ''காலேஜிலே காதலித்த கட்டழகரே, இல்லறத்திலே இன்பம் தர வந்த எஞ்சினீயரே, துர்ப்பாக்கியவதியின் துயரைத் துடைக்க வந்த திவாகரரே'' என்றெல்லாம் காதல் மொழிகள் பேசிக் கொஞ்சிக் குலாவுவாள் என்று கனவு கண்டு வந்த திவாகரனுக்குச் சுசீலாவின் பேச்சு ஏமாற்றத்தை அளித்தது. இருதயம் பாளம் பாளமாக வெடித்துவிடும்போல் இருந்தது. அவன் ஏமாற்றம் கொண்டான்.

ஆகவே அவன் சிறிது நேரம் வாளா இருந்தான். அவளும் பேசாமல் நடந்துகொண்டே இருந்தாள். அவர்கள் இருவரும் வெகு தூரம் வந்துவிட்டனர். அங்கிருந்து மால்வணிலுள்ள சிந்து துர்க்கம் என்னும் சிவாஜி மகாராஜாவின் கோட்டை தெரிந்தது.

அதே சமயம் சூரியன் அஸ்தமித்துக்கொண் டிருந் தான். அதன் பிரதிபிம்பம் வெகு தொலைவில் நீலக் கடலில் தெரிந்துகொண் டிருந்தது. அந்த மனே

ரம்மியமான காட்சியைத் திவாகரும் சுசீலாவும் பார்த்தனர்.

அந்நேரத்தில் தேவ்பாக்கிலிருந்து மால்வண் வரையிலுள்ள கடற்கரையில் ஒரே ஜனத்திரள்.

அவர்கள் எத்தனை நேரந்தான் மௌனமாக இருக்க முடியும்? கடைசியில் திவாகர் பொறுமையை இழந்து, ''என்னுடன் ஏதோ பேச வேண்டுமென்று சொன்னாயே, சுசீலா?'' என்று கேட்டான்.

சுசீலா ஒரு கணம் வாயே திறக்கவில்லை.

திவாகர் அவளுடைய பதிலைக் கேட்பதற்காக வெகு உற்சாகத்தோடு தன் காதைத் தீட்டி வைத்துக்கொண்டான்.

''அப்படி விசேஷமாக ஒன்றுமில்லை, திவாகர்; பங்களாவின் பிளான் விஷயமாகத்தான் பேச வேண்டி இருந்தது'' என்றாள் சுசீலா.

இதைக் கேட்டதும் திவாகரின் உற்சாகம் நீரில் விழுந்த மணலைப்போல் நொடியில் கரைந்துபோயிற்று.

''நான் நினைக்கிறேன்'' என்று சுசீலா ஆரம்பித்து, ''உங்கள் பிளானில் ஆனந்தன் குறிப்பிட்ட தவறுகள் எல்லாம் சரிதான்'' என்று அவள் கூறினாள்.

''சுசீலா, கடைசியில் என்னையே நீ மூர்க்கனாகப் பார்க்கிறாய் அல்லவா?''

''அப்படி அல்ல, திவாகர். அவன் சொன்னது சரியாக இருந்தது என்று எனக்குப் படுகிறது. கிராமத்து மக்கள் பார்ப்பதற்கு அப்பாவிகளாகத் தோற்றமளிக்கிறார்கள்; ஆனால் அவர்கள் முட்டாள்கள் அல்ல. ஆனந்தனையே பாருங்களேன். சாதாரணமான, கிராமத்துப் பட்டறைத் தொழிலாளிதான் அவன். ஆனால் - கோபித்துக்கொள்ளாதீர்கள் திவாகர் - ஆனால் அவன் பம்பாயிலுள்ள எஞ்சினீயரைவிட எத்தனையோ மேலானவன் அல்லவா? இன்று நான் அவன் வீட்டுக்குக்கூடப் போயிருந்தேன்....''

''எனக்கு அவனுடைய கதையே வேண்டாம்; சுசீலா, நீ சொல்லிவிடு நான் பெரிய முட்டாள் என்று; எதற்காகச் சுற்றி வளைத்துப் பேசுகிறாய்? என் வேலை உனக்குப் பிடிக்கவில்லை என்றால், அந்தக் கிராமத்து எஞ்சினீயரைக்கொண்டே உன் பங்களாவைக் கட்டிக் கொள். நான் இன்றைக்கே பம்பாய்க்குச் சென்றுவிடு கிறேன்'' என்று திவாகர் சினத்துடன் கூறினான்.

'பம்பாய்க்குச் சென்றுவிடுகிறேன்' என்று வெகு ஜம்பமாக வாயால் சொல்லிவிட்டானே தவிர, அதைச் செயலுக்குக் கொண்டுவருவது அத்தனை சுலபமல்ல என் பதைத் திவாகர் அன்றிரவுதான் உணர்ந்தான்.

ஊரை விட்டுப் போவதற்காகத் தன் பெட்டியில் துணிமணிகளை எடுத்து வைத்துக்கொண் டிருந்தபோது அவனுடைய கைகள் கனக்க ஆரம்பித்தன. அவ னுடைய மூளை வேலை செய்யத் தொடங்கியது. பலவித எண்ணங்கள் இழையோடின. 'ஆனந்தனும் பங்களா வும் எக்கேடு கெட்டுப்போனால் நமக்கு என்ன? நமக்கு ஏன் அந்த வீண் கவலைகள் எல்லாம்? ஆனந்தனுடைய பிளானையே ஏற்றுக்கொண்டுவிடுவோம். ஏனென்றால், இங்கிருந்து ஒரு தடவை மனக் கசப்புடன் வெளியேறி விட்டால் அத்துடன் சுசீலாவுடன் பழகுவது துண்டிக்கப் பட்டுவிடும். அதற்காகவாவது நான் அவர்கள் சொல்லு கிறபடி ஆடத்தான் வேண்டும்.' இந்தத் தீர்மானத் துடன் அவன் படுக்கச் சென்றான்.

மறுநாள் காலை திவாகர் சுசீலாவைக் கூப்பிட்டு, ''சுசீலா, ஆனந்தன் வந்தால், என்னை வந்து பார்க்கச் சொல். அன்று அவன் சொன்னது எனக்குச் சரியாகப் புரியவில்லை. அதனால்தான் இத்தனை குழறுபடிகள். தவிர, உன் விருப்பத்துக்கு மாறாக நான் என்றைக்குமே போக விரும்ப மாட்டேன். ஆகையால், அவன் சொல்வதை நான் ஏற்றுக்கொள்ளத் தயார். பிளான் யாருடையதாக இருந்தால் என்ன? பங்களா வெகு அருமையாகக் கட்டி

முடிக்கப்பட வேண்டியதுதானே, நம் எல்லாருடைய விருப்பமும்?'' என்று பேசிக்கொண்டே போனுன்.

ஆனுல் சுசீலா குறுக்கிட்டு, ''திவாகர், நீங்கள்தாம் அவன் வீட்டுக்குச் செல்லவேண்டியதாக இருக்கும். அவன் ஒரு நாளும் உங்களிடம் வரவே மாட்டான். ஏனென்ருல் அவன் கலைஞன். கலைஞனுக்குக் கண நேரத்தில் கோபம் வந்துவிடுகிறது. அது தர்மா மீட்டரில் பாதரசம் ஏறுவதுபோல் நொடியில் உச்சிக்கு ஏறிவிடுகிறது. கீழே இறங்க அதற்கு வெகு காலம் பிடிக்கும். ஆகையால் நீங்களே அங்கே சென்று அவனைச் சமாதானப்படுத்தி வாருங்கள்.''

''அதுவே உன் விருப்பமானுல் அதைச் செய்வதற்கும் நான் தயார்.'' இவ்வாறு கூறிவிட்டு, வேறு வழியின்றி, திவாகர் ஆனந்தனின் இல்லத்துக்குச் சென்ருன்.

ஆனந்தன் திறந்த உள்ளத்தோடு திவாகரின் தவறுகளை எல்லாம் எடுத்துரைத்து, அவனை இணங்கச் செய்தான். தவிர, புதிய பிளான் எப்படி இருக்கவேண்டுமென்றும் யோசனைகள் கூறினுன்.

ஆனந்தன் சொல்வதை எல்லாம் அப்படியே ஏற்றுக் கொள்வது என்ற தீர்மானத்துடன்தானே திவாகர் அங்கே சென்றிருந்தான்? அதன்படியே அவன் தன் தவறுகளை உடனே ஒப்புக்கொண்டு, ஆனந்தனை நோக்கி, ''ஆனந்தா, கிராமாந்தரங்களில் இவ்வளவு புத்திசாலிகள் இருப்பார்கள் என்று நான் கனவிலும் கருதவில்லை. அதிலும் மால்வண் மக்கள் மகா புத்திசாலிகள். எவரும், மடிவதற்கு முன்னுல் மால்வண் மக்களை ஒரு தடவை பார்க்கத்தான் வேண்டும்'' என்ருன்.

அதே சமயம் யசோதை சமையலறையில் இருந்தவாறே எட்டிப் பார்த்தாள். திவாகரின் பார்வை அவள்பால் கவர்ந்து இழுக்கப்பட்டது. திவாகர் அந்த அழகுப் பிம்பத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போனுன். அவனுடைய உதடுகள் மெதுவாக முணுமுணுத்தன:

''எவரும் மடிவதற்கு முன்னால் மால்வண் மக்களை ஒரு தடவை பார்க்கத்தான் வேண்டும்.''

யசோதையின் மோகன வடிவம் அவனை மயக்கி விட்டது என்று சொல்ல வேண்டியதில்லை.

ஆனந்தனின் வீட்டில் திவாகர் சின்னஞ் சிறிய கப்பல், மோட்டார், மற்றும் பல கவர்ச்சியான பொருள் களைப் பார்த்தான். ஆனால் யசோதை மட்டுந்தான் அவனுடைய மனத்தில் பசுமரத்தாணிபோல் ஆழமாகப் பதிந்துவிட்டாள்.

'மோத்திராம் சேட்டிடம் எத்தனையோ பேர்கள் வேலை செய்கிறார்கள் - வல்லவர்கள், நல்லவர்கள், அதிபுத்திசாலிகள், அழகே உருவானவர்கள்.' - இந்த எண்ணந்தான் அவனுடைய மனத்தில் மேலோங்கி இருந்தது.

உடனே அவனுடைய மூளையில் ஒரு கற்பனை உதித்தது. அதனால் அவனுக்கு அபரிமித ஆனந்தம் உண்டாயிற்று. ஆனந்தனின் வீட்டிலிருந்து அவன் அதி வேகமாக நடக்கத் தொடங்கினான்.

# 8
# கப்பல் தொழிற்சாலைக்கு

தினந்தோறும் யசோதை மாதர் சங்கத்துக்குப் போய்க்கொண்டிருந்தாள். அவள் நடுத்தர வகுப்பாருடன் பழகுகிறாள், நல்ல சமூகத் தொண்டு புரிந்து வருகிறாள் என்பதை அறிந்ததும் ஆனந்தனுக்கு மகிழ்ச்சி பொங்கிற்று. அதுவும் சுசீலா அவளுடைய தோழியைப் போல் பழகுவதைக் கண்டதும் அவனுடைய உள்ளக் களிப்பு உச்ச நிலையை அடைந்துவிட்டது.

சுசீலாவுக்குத் தான் தயாரித்த பிளான் மிகவும் பிடித்திருக்கிறது என்பதை எண்ணிப் பார்த்தபோது அவன் பூரிப்பும் பெருமையும் அடைந்தான். தன் திறமையையும் சாமர்த்தியத்தையும் பாராட்டக்கூடியவள் சுசீலா ஒருத்திதான் என்பதை நினைக்க நினைக்க, அவன் புளகாங்கிதம் அடைந்தான். அவள்பால் அவனுக்கு மட்டற்ற மரியாதை ஏற்பட்டது.

படித்துப் பட்டம் பெற்ற எஞ்சினீயரைக் கொஞ்சங்கூட லட்சியம் செய்யாமல், ஆனந்தனுடைய கருத்துப்படியே பங்களாவைக் கட்டத் தீர்மானித்தாள் அல்லவா சுசீலா? அப்படிச் செய்து அவனுக்கு எவ்வளவு கௌரவத்தை அளித்தாள் அவள்! தவிர, யசோதைக்கு எப்படிப்பட்ட தோழி கிடைத்திருக்கிறாள்! இதை எண்ண எண்ண அவனுக்குப் பெருமையாகவே இருந்தது.

யசோதை, மாதர் சங்கத்துக்கு வந்தது முதல் சுசீலாவின் பொறுப்புக்கள் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வந்தன. யசோதை கிராமப் பெண்களுக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுத்ததோடு, ஒரு மூலையில் தூசு படிந்து கேட்பாரற்றுக் கிடந்த சுசீலாவின் ஹார்மோனியத்துக்கும் விமோசனம் அளித்து, பெண்களுக்கு அதை வாசிக்கவும் கற்றுக்கொடுத்தாள்.

யசோதை ஹார்மோனியம் வாசிக்கிறாள், சாதாரணமான பட்டறைத் தொழிலாளியின் மனைவி ஹார்மோனியம் வாசித்து அருமையாகப் பாடுகிறாள் - என்னும் செய்தி ஊரெங்கும் பரவி எல்லாரையும் ஆச்சரியத்தில் மூழ்க அடித்தது.

ஹார்மோனியத்தின் இன்னிசையைக் கேட்ட போது, யசோதைக்குப் பழைய நினைவுகள் ஒன்றன்பின் ஒன்றாக அலைமோதின. நமக்குப் பழக்கப்பட்டவர்களின் பரிசயமான குரலைப் பல ஆண்டுகளுக்குப் பிறகு கேட்கும் போது மனத்துக்கு எவ்வாறு இன்பமாக இருக்குமோ, அவ்வாறே இருந்தது அவளுடைய மன நிலை.

அந்த நினைவுகள் இன்பமானவைதாம் என்றாலும், யசோதைக்கு இப்பொழுது அவை துயரத்தையே தந்தன. காய்ந்துவிட்ட புண்ணைக் கிளறிவிட்ட மாதிரி ஆயிற்று. ஏனென்றால், சிறு பிராயத்தில் அவள் நடத்தி வந்த சுகபோக வாழ்க்கைக்கும் இப்பொழுது அவள் நடத்தும் வறுமையான வாழ்வுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது.

சுசீலாவைப்போல் தனக்கும் ஒரு நல்ல இடத்தில் மணமாகி இருந்தால்? இந்த எண்ணம் அவளுடைய நொந்த உள்ளத்தை வாள்கொண்டு குத்தியது.

யசோதையின் மிருதுவான விரல்கள் ஹார்மோனியத்தின் கட்டைகளின்மேல் சதிராடத் தொடங்கிய போது அவற்றில் நாதப்பிரம்மம் நிறைந்திருப்பதாகச் சுசீலாவுக்குத் தோன்றிற்று. தனக்கு ஹார்மோனியம் வாசிக்கத் தெரியாது; ஆனால் தன் வீட்டில் ஹார்மோனியம் கேட்பாரற்றுக் கிடக்கிறது. யசோதைக்கு வாசிக்கத் தெரியும்; ஆனால் அவளோ அதைக் கண்ணால் பார்க்கக்கூடக் கொடுத்துவைக்கவில்லை. இது என்ன விந்தையான உலகம்!

''எங்களுக்கு ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக் கொடுங்கள்; எங்களுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுங்

கள்'' என்று எல்லாப் பெண்களும் யசோதையை நச்சரித்து வந்தனர். ஆகையால் மாதர் சங்கத்தில் எப்பொழுது பார்த்தாலும் ஹார்மோனியம் ஒலித்துக் கொண்டிருந்தது.

ஒரு நாள் சுசீலா வேடிக்கையாக, ''யசோதை, மாதர் சங்கத்தின் பெயரை இன்னும் கொஞ்ச நாட்களில் மாற்றவேண்டி இருக்கும். இங்கு எப்பொழுதுமே சங்கீதம் ஒலித்துக்கொண் டிருப்பதால், மாதர் சங்கம் என்பதற்குப் பதிலாக மாதர் சங்கீத வித்தியாலயம் என்று பெயரிட வேண்டி இருக்கும்'' என்று கூறினுள்.

அதற்கு யசோதை சிரித்துக்கொண்டே பதிலளித்தாள்: ''பின்னே படிப்புக்கு மங்களம் பாட வேண்டியது தான்.''

இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

இவ்வாறு முதல் ஏழெட்டுத் தினங்களை யசோதை வெகு ஆனந்தமாகக் கழித்தாள். அவள் மாதர் சங்கத்துப் பணிகளை மிகுந்த உற்சாகத்துடன் செய்தாள். ஆனுல் சுசீலா, அவளுடைய பங்களா, கார், இவற்றைக் கண்ணுறும்போதெல்லாம் அவளுக்கு வெறுப்பாக இருந்தது. அப்படிப்பட்ட தருணத்தில் சுசீலா கொட்டும் ஆசை வார்த்தைகளை அவளால் சகிக்கவே முடியவில்லை.

மாதர் சங்கத்தில் யசோதையின் பெயர் நாளுக்கு நாள் பிரபலமாகிக்கொண்டே வந்தது. ஊரெங்கும் அவளைப்பற்றியே பாராட்டுப் பேச்சு.

* * *

எட்டு நாட்களுக்குப் பிறகு மோத்திராம் சேட் மால்வணிலிருந்து திரும்பி வந்தார். புயலில் சிக்கியிருந்த அவருடைய மரக்கலம் ஆபத்தின்றிக் கரை சேர்ந்தது. அவர் தேவ்பாக்குக்கு வந்தபோது, மாதர் சங்கத்தில் சேர்ந்திருக்கும் புதிய அம்மாளின் பணிகளைப் பற்றிய செய்திகள் அவருடைய செவிக்கு எட்டின.

அவர் சுசீலாவை நோக்கி, ''புதிய அம்மாளாமே, அவள் யார்? நன்ருக ஹார்மோனியம் வாசிக்கிருளாமே?'' என்று கேட்டார்.

''ஆமாம். அவள் நம் ஆனந்தனின் மனைவி'' என்று வெகு பெருமையாகச் சொன்ஞள் சுசீலா.

''அப்படியா? சபாஷ்! ஆனந்தனின் மனைவியா சங்கத்தில் சக்கைபோடு போடுகிருள்? பட்டறைத் தொழிலாளியின் மனைவி ஹார்மோனியப் பெட்டி வாசிக்கிருளா? தேவலையே!''

''ஏன், வாசிக்கக்கூடாதா? உயர் சாதிக்காரர்கள் தாம் வாசிக்க வேண்டும், கீழ்ச் சாதிக்காரர்கள் வாசிக்கக்கூடாது என்று எந்தச் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது?'' என்று சுசீலா சிறிது கோபத்துடனேயே கேட்டாள்.

இடையில் திவாகர் குறுக்கிட்டு, ''எப்படி அழகு எல்லாச் சாதியினருக்கும் பொதுவோ, அப்படியே சங்கீதமும் யாவருக்கும் பொது'' என்ருன் சிரித்துக்கொண்டே.

''அப்படியென்ருல்..?'' என்று கேட்டார்.

''அப்படியென்ருல், ஆனந்தனின் அன்புக்கு உரியவள் எவ்வளவு அழகாக ஹார்மோனியம் வாசிக்கிருளோ, அவ்வளவு அழகாகத்தான் இருக்கிறது அவளுடைய கடைந்தெடுத்த தேகக் கட்டும்'' என்று பேசிக்கொண்டே போஞன் திவாகர்.

ஆனல் அந்தக் கட்டத்தில் சுசீலா மட்டும் அவனை எரித்துவிடுபவள்போல் முறைத்துப் பார்க்காமல் இருந்திருந்தால் அவன் மேலும் மேலும் யசோதையின் அழகை வர்ணித்துக்கொண்டே சென்றிருப்பான்.

''ஊரார் மனைவியைப்பற்றிய வர்ணனைகள் இந்த வீட்டில் வேண்டாம்'' என்று சுசீலா நெற்றியில் சுருக்கங்கள் விழ, சிறிது கடுமையாகவே கூறிஞள்.

அதனுடன் பேச்சு நின்றது. ஆனல் அன்று மாலையில் மோத்திராம் சேட்டும் திவாகரும் உலாவச் சென்ற

போது, மாதர் சங்கத்தின் வாசலில் அவர்கள் கணநேரம் தயங்கி நிற்கத்தான் நின்றனர். சாலை யோரமாகச் சென்றுகொண் டிருக்கும் பிரயாணி, மகிழம்பூ மரத்தைக் கண்டதும் எப்படிக் கணநேரம் நின்று அதன் சுகந்தத்தைப் பருகுவாரோ, அப்படியே அவர்களும் சங்கத்தின் வாசலில் நின்று உள்ளிருந்து வந்துகொண் டிருந்த இன்னிசையைப் பருகிக்கொண் டிருந்தனர்.

''உள்ளே பாடுவது யார்?'' என்று திவாகரைக் கேட்டார் மோத்திராம்.

''ஆனந்தனின் ஆசைக்கிழத்தி'' என்று பதில் அளித்தான் திவாகர்.

''அருமையான சாரீரம், இல்லையா?''

''சாரீரம் மட்டும் என்ன, அவளுடைய சரீரத்தை நீங்கள் பார்க்கவில்லை.''

''ஆகா! குயில் பாடுவதுபோல் அல்லவா இருக்கிறது?''

''ஆமாம், குயில்தான், கோகில கானந்தான்; ஆனால் குயிலைப்போல் அவள் ஒன்றும் கறுப்பல்ல; ரோஜா மலர் போன்ற மேனி.''

''திவாகர், நீங்கள் பலே தமாஷ் பேர் வழி!'' என்று மோத்திராம் சிரித்தவண்ணம் சொன்னார்.

''சேட் சாஹெப், மனிதன் எப்பொழுதுமே முகத்தைக் கடுகடுப்புடன் வைத்துக்கொண் டிருக்க முடியாது. அவனுக்குத் தமாஷும் தேவை. அது இல்லாமல் வாழ்க்கையில் சாரமே இல்லை. ஆனால் தமாஷை இடமறிந்து கையாளவேண்டும். உதாரணமாக, இப்பொழுது இங்கே சுசீலா அம்மாள் இருந்திருந்தால், இம்மாதிரி பேச யாருக்குத் துணிவு ஏற்படும்?'' என்று மெதுவாகக் கேட்டான், வாழைப்பழத்தில் ஊசியை ஏற்றுவதுபோல.

''ஆம், நீங்கள் சொல்வது முற்றும் உண்மை. இதோ பாருங்கள், என் நிலைமை இப்படி இருக்கிறது;

இந்தக் கிராமத்தில் என்னுடன் தமாஷாகப் பேசிப் பழக நண்பரோ உறவினரோ இல்லை. இங்கு இருக்கும் சிலரோ எனக்குச் சமானமாகப் பழகுவதற்குத் தகுதியற்றவர்கள். இந்த நிலையில் நீங்கள் வந்ததிலிருந்து என் மனத்துக்கு எத்தனை ஆறுதலாக இருக்கிறது தெரியுமா? உங்களைக் காணும்போதெல்லாம் வெகு நாள் பழகிய பால்ய நண்பனைப்போல் தோன்றுகிறது எனக்கு. நீங்கள் வந்தீர்கள்; இல்லையேல் சதாசர்வகாலமும் மனைவியுடன் பேசிக்கொண்டிருக்க யாரால் முடியும்? அப்படிப் பேசினாலும் எல்லா விஷயங்களையும் பேசிக்கொண்டிருக்க முடியுமா? தவிர, சுசீலாவிடத்தில் எனக்கு ஒருவித அலாதி மரியாதை உண்டு. ஆகையால் அவளிடம் ஓர் ஆணிடம் பேசுவதுபோல் பேசமுடியாது. இதல்லாமல் ஒருவன் தன் மனைவியிடம் பேச முடியாத, பேசக் கூடாத, விஷயங்களும் இருக்கத்தானே இருக்கின்றன? இல்லையா திவாகர்?''

இவ்வாறு மோத்திராம்சேட் தம் மனத்தைத் திவாகருக்குத் திறந்து காட்டினார்.

திவாகர் இதற்காகத்தான் காத்திருந்தான். சேட் தன்பால் நம்பிக்கைகொண்டிருக்கிறார் என்பதைக் காண அவனுக்கு மட்டில்லாத மகிழ்ச்சி ஏற்பட்டது.

''சேட் சாஹெப், நீங்கள் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை. இன்று காலையில் பார்த்தீர்கள் அல்லவா? நான் ஆனந்தனின் மனைவி அழகாக இருக்கிறாள் என்று சொன்னபோது சுசீலா அம்மாளுக்கு எவ்வளவு கோபம் வந்தது? இதுகூட வீட்டில் பேசக் கூடாது என்றால், இது பேசக்கூடச் சுதந்தரம் இல்லையென்றால், இந்த உலகில் இருந்துதான் என்ன பயன்?'' என்று திவாகர் மோத்திராமைக் கேட்டான்.

அவன் சொன்னது சேட்டின் செவிகளில் பட்டதோ என்னவோ தெரியாது; ஆனால் மாதர் சங்கத்திலிருந்து

மிதந்து வந்த கர்ணுமிர்த கானத்தை மட்டும் அவருடைய செவிகள் ரசித்துக்கொண் டிருந்தன.

"நீங்கள் எது வேண்டுமானுலும் சொல்லுங்கள், மோத்திராம். ஆனந்தனின் மனைவி இந்தப் பாழான பிராந்தியத்தில் பூத்திருக்கும் பக்குவமான மலர். அது இதுவரையில் உங்கள் பார்வையில் படாமல் எப்படி இருந்தது என்றுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது" என்ருன் திவாகர்.

"மலர், பார்வை என்று என்ன என்னவோ சொல்லிப் புதிர் போடுகிறீர்களே, திவாகர்?"

"புதிர் அல்ல அது. புரியும்படியாகத்தான் சொல்கிறேன். உங்களைப்போன்ற இளமை ததும்பும் செல்வச் சீமான் அப்படிக் கொஞ்சம் உல்லாசமாக இருந்தால் அதில் தப்பு ஒன்றும் இல்லை."

"சீசீ! நீங்கள் என்ன பேசுகிறீர்கள், திவாகர்? யாராவது கேட்டால் என்ன நினைப்பார்கள்?" என்று தம் நாக்கைக் கடித்துக்கொண்டே சொன்ஞர் மோத்திராம் சேட்.

"என்ன நினைப்பார்கள்? ஒன்றும் நினைக்க மாட்டார்கள். நீங்கள் அப்படி இல்லாவிட்டால்தான் ஜனங்களுக்குச் சந்தேகம் ஏற்படும்" என்று சாமர்த்தியமாகப் பதிலளித்தான் திவாகர்.

இதற்குள் ஹார்மோனியம் வாசிப்பது நின்றது. சிறிது நேரத்தில் பெண்களின் பேச்சுக் குரல் கேட்டது.

சுசீலா, யசோதை, அக்கா யாவரும் வெளியே வந்தார்கள். "அதோ பார்த்தீர்களா?" என்று திவாகர் மோத்திராம் சேட்டுக்குக் காட்டிஞன். அவன் விரல் காட்டிய திசையில் சேட் பார்த்தார்.

சுசீலாவுக்கும் அக்காவுக்கும் மத்தியில் யாரோ ஓர் அப்ஸரஸ் செல்வதை அவர் கண்டார். அவள் யசோதைதான் என்று தெரிந்துவிடவே சேட் அவளை இமை கொட்டாமல் நோக்கிஞர். தாம் காண்பது கனவா நனவா

என்று தெரியாமல் அவர் தத்தளித்தார். அவருடைய உடலில் மின்சாரம் பாய்ந்ததுபோன்ற ஓர் உணர்ச்சி ஏற்பட்டது.

உடனே அவர் அங்கிருந்து புறப்பட்டு ராஜநடை நடந்து சென்றார். திவாகரும் அவரைப் பின் தொடர்ந்தான். வழியில் அவர்கள் இருவரும் அதிகமாகப் பேச வில்லை. ஆகாயத்தில் மின்னல் ஒரு வெட்டு வெட்டியதும் எப்படி நம் கண்கள் தாமாகவே மூடிக் கொள்ளுகின்றனவோ, அவ்வாறே மோத்திராம் சேட்டின் மன நிலையும் ஆகியிருந்தது. அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

திவாகர் தன் மனத்துக்குள்ளே மகிழ்ந்துகொண்டிருந்தான். தான் விடுத்த கூரிய அம்பு குறி தவறாமல் பாய்ந்ததில் அவனுக்கு எல்லையில்லாத ஆனந்தம் உண்டாயிற்று.

அவர்கள் இறுதியில் கடற்கரையை அடைந்தனர். அங்கே சிறிது தூரத்தில் யாரோ சண்டையிட்டுக்கொண்டிருந்தது அவர்களுக்குத் தெரிந்தது.

அங்கே தொழிலாளர்கள் கூட்டமாகக் கூடியிருந்தனர். பங்களாக் கட்டுவதற்காக அமர்த்தியிருந்த வேலையாட்களிடையே ஏதோ சச்சரவும் வாக்குவாதமும் நடந்துகொண்டிருந்தன.

அவர்கள் அனைவரும் மோத்திராம் சேட்டைக் கண்டதும் வாயடைத்து நின்றனர். அவர்களில் ஒருவனை நோக்கி மோத்திராம் சேட், "என்னடா தகராறு?" என்று கேட்டார்.

"இந்த ஆனந்தனால் ரொம்பத் தொல்லைங்க; அவனுக்கு வேலையில் கவனமே இல்லைங்க" என்றான் ஒருவன்.

"எப்பொழுது பார்த்தாலும் வெட்டித்தனமாக உட்கார்ந்திருக்கிறான். தானும் வேலை செய்வதில்லை, மற்றவர்களையும் செய்ய விடுவதில்லை" என்றான் இரண்டாவது ஆள்.

''நாங்கள் எல்லாரும் உழைக்கிறோம்; இவன் தண்டத்துக்கு உட்கார்ந்து நாட்டாண்மை செய்கிறான்.'' - இது மூன்றாவது தொழிலாளி.

''நாள் முழுவதும் தன் குடிசையிலே சொந்த வேலைகளைச் செய்துகொண்டிருக்கிறானுங்க. பொம்மை, மரக்கலம், மோட்டார் இவை செய்யறதுதான் இவனுக்கு வேலை.'' - இது நான்காவது ஆள்.

இவர்கள் சொன்னதையெல்லாம் இதுவரையில் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த மோத்திராம் சேட், ''எல்லாரும் பேசாமல் இருங்கடா. எங்கே உங்கள் மேஸ்திரி?'' என்று கூச்சலிட்டார்.

மேஸ்திரி பயந்தவனாக முன்னால் வந்தான்.

''என்னடா? இது என்ன வீண் தகராறு?''

''சேட், இந்த ஆளுங்க சொல்றதெல்லாம் நெஜந்தானுங்க. ஆனந்தன் ஒரு வேலையும் செய்யறதில்லை. அதற்குப் பதிலாக, 'அப்படிச் செய், இப்படிச் செய்' என்று எனக்கே உத்தரவு போடுகிறான். தவிர, அவன் எவர் பேச்சையும் கேட்பதில்லை. ஆனால் ஆசாமி என்னவோ கெட்டிக்காரன்'' என்றான் மேஸ்திரி.

''ஆனந்தா, இங்கே வா'' என்று மோத்திராம் சேட் ஆனந்தனைக் கூப்பிட்டார்.

ஆனந்தன் அருகில் வந்ததும், ''என்னப்பா, இவர்கள் சொல்வதெல்லாம் மெய்தானா?'' என்று அவனைக் கேட்டார்.

''மெய்யும் இல்லை, பொய்யும் இல்லை'' என்று ஆனந்தன் சாந்தமாகப் பதிலளித்தான்.

''அதற்கு என்னடா அர்த்தம்?''

''அர்த்தம் இதுதான், சேட். நான் வேலை செய்யவில்லை என்பது பொய். நான் ஒழுங்காக வேலை செய்கிறேன். ஆனால் இவர்களைப்போல் அல்ல. தினசரி மேஸ்திரி என்னை மரத்தை இழைக்கும்படி சொல்கிறான். அது எனக்குப் பிடிக்கவில்லை. ஏனென்றால், அந்தக் 'கூலி

வேலையைச் செய்ய இவர்கள் இருக்கிறார்கள். இந்த மேஸ்திரி, மூளையை உபயோகிக்கும் வேலையை எனக்கு ஏன் தரக்கூடாது என்பதுதான் என் வாதம். இரண்டாவது என்னவென்றால், எனக்கு இவர்களைப்போல் வேலை செய்யாமல் பொழுது போக்கத் தெரியவில்லை; இத்தனையுண்டு வேலையை வைத்துக்கொண்டு இவர்கள் பாசாங்கு செய்வது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை; மூன்றாவதாக, எனக்குத் தரப்படும் வேலையை நான் நொடியில் முடித்துவிட்டு இவர்களுக்கு வேலை விஷயமாக யோசனைகள் கூறுகிறேன். அது இந்த ஆட்களுக்குப் பிடிக்கிறதில்லை. நான் அதிகாரம் செய்வதாக இவர்கள் நினைக்கிறார்கள். ஆகையால் வெறுப்புற்று நான் வீட்டுக்குச் சென்று என் சொந்த வேலை எதையாவது செய்கிறேன். விஷயம் இவ்வளவுதான்'' என்று ஆனந்தன் சிரித்துக்கொண்டே கூறினான்.

முதலாளிக்கு அஞ்சாமல் அவன் பதில் சொன்னதைக் கண்ட மற்றத் தொழிலாளிகளுக்குப் பீதி ஏற்பட்டது.

''மூளையை உபயோகிக்கும் வேலையாக வேண்டும் என்கிறாயா?'' என்று மோத்திராம் சேட் ஆனந்தனைக் கேட்டார்.

''ஆமாம்'' என்பதுபோல் அவன் சேட்டைப் பார்த்தான்.

''சரி, உனக்கு மரக்கலத்தைப்பற்றிய வேலை தெரியுமா? தெரிந்திருந்தால் நாளைக்கே நீ மால்வணியிலுள்ள நம் தொழிற்சாலைக்குப் போ'' என்றார் அவர்.

''சரி, எனக்கு எல்லா வேலையும் தெரியும்.''

''நீராவிக் கப்பலைப்போல் இயந்திரத்தால் செல்லக் கூடிய மரக்கலம் ஒன்றை இப்பொழுது அவன் தயாரித்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் அவனுக்குக் கப்பல் வேலை எல்லாம் தெரிந்துதான் இருக்கும்'' என்றான் திவாகர் திடுதிப்பென்று.

''அப்படியா? சபாஷ்! அப்பொழுது, ஆனந்தா, நீ

கட்டாயம் போ; நாளைக்கே அதை நீ பார்த்து வா; பிற்பாடு என்னிடம் சொல், உனக்கு எந்த வேலை பிடிக்கிறதென்று.''

''சரி, சேட்.''

இந்தச் சம்பாஷணையைக் கவனித்துக்கொண்டே இருந்த அனைவரும் பிரமித்து நின்றனர். அவனுக்குத் தண்டனை அளிக்காமல் சேட் அவனைப் பாராட்டிப் பேசியதைக் கண்ட அவர்களுக்கு ஏமாற்றமும் பொறுமையும் ஏற்பட்டன.

9

# பூனையும் அத்தரும்

மோத்திராம் சேட் ஆனந்தனை மால்வனுக்குச் செல்லும்படி கூறியபோது திவாகரின் மூளையில் ஒரு விபரீதமான கற்பனை உதித்தது.

அவர்கள் பங்களாவுக்குத் திரும்பி வந்ததும், அவன் மோத்திராம் சேட்டை நோக்கி, ''சேட், உங்கள் யுக்தி அபாரம். ஒரே கல்லில் இரண்டு மாங்காயை வீழ்த்தப் பார்க்கும் நீங்கள் ஒரு பெரிய மேதாவி'' என்று அகமகிழ்ந்தான்.

மோத்திராமுக்கு அவன் சொன்னது விளங்கவில்லை.

''என்ன யுக்தி, என்ன கல், என்ன மாங்காய்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே நீங்கள் சொல்வது!'' என்று கேட்டார் அவர்.

''புரியுமா? இப்பொழுதெல்லாம் நீங்கள் மெய்ம் மறந்தல்லவா காரியங்களைச் செய்கிறீர்கள்?'' என்றான் திவாகர் சிரித்தவண்ணம்.

''இல்லை திவாகர், உண்மையிலேயே நீங்கள் சொன்னது எனக்குப் புரியவில்லை. நீங்கள் எதைப்பற்றிச் சொன்னீர்கள்?'' என்று மீண்டும் கேட்டார் சேட்.

திவாகர் சிறிது தயங்கினான். ''ஆனந்தனைப் புகழ்ந்தாற்போல் நாடகமாடி அவனை மால்வனுக்கு அனுப்பி விட்டீர்களே! அதைத்தான் குறிப்பிட்டேன். ஆனந்தன் அப்படிப் போனானே இல்லையோ, நீங்கள் இப்படி யசோதையை மடக்கிக் கொண்டுவர அதிக நேரம் செல்லாது'' என்று கூறினான்.

மோத்திராமின் மூளை இப்பொழுது வேலை செய்யத் தொடங்கியது.

''ஆம், இந்த யுக்தி எனக்கு அப்பொழுது தோன்ற வில்லைதான். திவாகர் சொல்வதுபோல் யசோதையை மசியும்படி செய்வதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம்'' என்று அவர் மனத்துக்குள் எண்ணமிடலானுர்.

''என்ன யோசிக்கிறீர்கள், மிஸ்டர் மோத்திராம்? இதுதான் சரியான நேரம்; சரியான சந்தர்ப்பம். மனித ருடைய வாழ்க்கையில் சந்தர்ப்பங்கள் அடிக்கடி வருவ தில்லை; முன்னறிவிப்போடு வருவதில்லை. ஆகையால், அது வரும்போது நாம் வெகு சாதுரியமாக அதைப் பயன் படுத்திக் கொள்வதில்தான் இருக்கிறது நமது வெற்றி. ஆனந்தனை அப்பால் அனுப்பிவிட்டு, யசோதையுடன் ஆனந்தமாக இருங்கள்'' என்று புத்தி கூறினுன் திவாகர்.

திவாகரின் யோசனைகளைக் கேட்டபோது மோத்தி ராமின் செவிகளில் இன்பத் தேன் பாய்ந்ததுபோல் இருந் தது. பகல் முழுவதும் அவர் இதைப்பற்றியே கனவு கண்டுகொண் டிருந்தார். அன்றிரவு ஒன்றுமே ஓட வில்லை. அன்று மாலையில் அவர் நயனங்களால் பருகி யிருந்த யசோதையின் ரூபலாவண்யம் இப்பொழுது அவருடைய பார்வையிலிருந்து அகல மறுத்தது. 'உலகில் சௌந்தரியம் என்னும் பூந்தோட்டம் சிருஷ் டிக்கப்பட்டதே உங்களைப்போன்ற சீமான்களுக்காகத் தான். அந்தப் பூந்தோட்ட மலர்களின் சுகந்தத்தை நுகர வேண்டியவர்களும் உங்களைப் போன்றவர்களே' என்று யசோதையின் உருவம் அவருக்குச் சொல்வது போல் இருந்தது.

'திவாகரும் அதைத்தானே அடிக்கடி கூறிக்கொண் டிருக்கிறுன்? திவாகரைப் போன்ற படிப்பாளிகளுக்கே அதில் குற்றமொன்றும் காணப்படவில்லை என்றுல், என்னைப் போன்றவர்கள் ஏன் வீணுக மனத்தை அலட் டிக்கொள்ள வேண்டும்? சுசீலா - சுசீலாவைப்பற்றி நினைத்ததும் என் மனத்தில் ஒரு பூகம்பமே எழுகின்றது. சுசீலா வெளுத்ததெல்லாம் பால் என்று நினைப்பவள்.

ஆனால் அவள் வெகு கண்டிப்புக்காரி. என்னை மணந்தது முதல் அவள் என்னை அடக்கி ஆளுகிறாள். அவள் என்னைவிடப் படித்தவள், பண்புடையவள், உயர்ந்தவள். அப்படிப்பட்டவள் என் திட்டங்களைக் கண்டு கொண்டால் 'உண்டு, இல்லை' என்று என்னைத் தீர்த்து விடுவாள். அதன் பின் நான் இந்த உலகில் பிழைத்திருப்பதே சாத்தியமில்லை...

'ஆனால் யசோதை...?

'அந்த அழகுப் பிம்பத்தின் சௌந்தரியத்திலே மயங்காத பேர்களும் உண்டா? ஆண்டவனுக்கு ரசிகத் தன்மையே இருக்காது என்று நினைக்கிறேன். இல்லாவிட்டால் ஆனந்தனைப்போன்ற பிச்சைக்காரனுக்கா இம் மாதிரி ரத்தினம் கிடைக்கச் செய்வார்?

'நம் திட்டமெல்லாம் சுசீலாவுக்கு எப்படித் தெரியப்போகிறது? அது தெரியாமல் பார்த்துக்கொண்டால் போகிறது.'

மோத்திராம் சேட்டின் குழம்பிய மனத்தில் இம் மாதிரி எண்ணங்கள் வட்டமிடலாயின.

சுசீலாவும் யசோதையும் அவருடைய மனக்கண்முன் தோற்றம் அளித்துக்கொண்டே இருந்தனர்.

சுசீலாவை ஏறிட்டுப் பார்க்கவே அவருடைய கண்கள் கூசின.

ஆனால் யசோதையோ அவருடைய நயன கமலங்களுக்குச் சீதளமான சந்திரிகையைப்போல் தோற்றமளித்தாள்.

சுசீலா பூசிக்கப்பட வேண்டிய தெய்வமாக அவருக்குக் காணப்பட்டாள். ஆனால் யசோதை அவருக்குச் சுகமளிக்கப் பிறந்த சுந்தராங்கியாகத் தோன்றினாள். யசோதையின் பொலிவு அவரை அவ்வளவு கவர்ந்திருந்தது.

ஆகவே, 'எது வந்தாலும் வரட்டும்; யசோதையை அடைந்தே தீருவது' என்று அவர் சங்கற்பம் செய்து கொண்டார்.

உடனே அவர் ஆனந்தனுக்குச் செய்தி அனுப்பினார், ''இந்தக் கணமே மால்வனுக்குச் சென்று ஆலையைப் பார்த்து வா'' என்று.

அன்று பிற்பகலில் மோத்திராம் ஆனந்தனைப்பற்றி விசாரிக்கும் பாவனையில் அவன் இல்லத்துக்குப் புறப்பட்டார்.

தாம் பணத்திலே புரளும் செல்வச் சீமான் என்பதை எடுத்துக் காட்டும் வகையில் சலவை செய்த நேர்த்தியான உடைகளை அவர் அணிந்துகொண்டார். நெற்றியில் ஜவ்வாதுப் பொட்டு இட்டுக்கொண்டார். உடைகளின்மேல் லேசாக அத்தரைப் பூசிக்கொண்டார்.

இந்த அலங்காரத்துடன் அவர் சூரியன் அஸ்தமிக்கும் வேளையில் ஆனந்தனின் வீட்டு வாசலில் வந்து நின்றார்.

வீட்டு வாசற்கதவு சிறிது திறந்திருந்தது. வாசற் படியில் பூனை உட்கார்ந்து தன் கால்களால் முகத்தைச் சுத்தி செய்துகொண் டிருந்தது. அது மோத்திராமைப் பார்த்ததும், வழக்கப்படியே 'மியாவ் மியாவ்' என்று கத்திற்று.

மோத்திராம் தமது தந்தப்பிடி போட்ட கைப் பிரம்பைக் காட்டிப் பயமுறுத்தியதும், பூனை மெதுவாக உள்ளே ஓட்டமெடுத்தது.

பூனையும் பரிமள அத்தர் வாசனையும் ஏககாலத்தில் வீட்டினுள் பறந்து சென்றன.

'ஆஹாஹா! அத்தர் வாசனை எங்கிருந்து வருகிறது?' என்று யசோதை ஒரு கணம் பிரமித்து நின்றாள்.

உடனே வெளிப்பக்கம் வந்து வாசலை நோக்கினாள்.

அங்கே யாரோ ஒரு ஷோக்கான வாலிபர் நின்று கொண்டிருப்பதைக் கண்டாள் யசோதை.

## 10
# குலைநடுங்கும் காட்சி

கருமேகங்களிடையில் கண்ணைப் பறிக்கும் மின்னல் வெட்டைப்போல் அந்தப் பழைய வீட்டில் தோன்றினாள் யசோதை, மோத்திராமின் கண்களுக்கு. அவளைக் கண்ணுற்றதும் அவருக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. பட்டறைத் தொழிலாளியான ஆனந்தனின் மனைவி இவ்வளவு அழகாக இருப்பாள் என்று அவர் கனவிலும் கருதவில்லை. அந்த விவரம் தமக்கு இதுகாறும் எப்படித் தெரியாமல் இருந்தது என்பதை நினைத்தபோது அவருடைய ஆச்சரியம் எல்லை மீறிச் சென்றது. திவாகரின் யோசனைகளும் புத்திமதிகளும் இப்பொழுதுதான் அவருடைய மனத்துக்கு இதமாக இருந்தன. ஆகவே அவர் தமது மனத்துக்குள் அவனுக்கு நன்றி செலுத்தினார்.

இதற்குள் யசோதை தன் வீட்டு வாசலில் யாரோ நிற்பதைக் கண்டாள். உடனே அவள் நம் நாட்டுப் பெண்மணிகளுக்கே உரிய நாணத்துடன் கதவு மறைவில் ஒதுங்கி, கதவிடுக்கின் வழியாக வெளியே நோக்கினாள்.

மோத்திராம் சேட்டுக்கு உள்ளமே வெடித்துவிடும் போல் ஆகிவிட்டது. அவள் மீண்டும் தம் எதிரில் தோன்ற மாட்டாளா, பவழ வாயைத் திறந்து இரண்டொரு வார்த்தைகள் பேச மாட்டாளா என்று ஏங்கித் துடித்தது அவருடைய உள்ளம்.

சிறிது நேரம் யோசித்த பிறகு அவரே, "ஆனந்தா, ஆனந்தா!" என்று கூப்பிட்டார்.

யசோதை கதவின் மறைவில் இருந்தவாறே, "வெளியில் சென்றிருக்கிறார் வேலையாக" என்று மெதுவான குரலில் பதிலளித்தாள்.

"அப்படியா?" என்று சொல்லிவிட்டு, கொஞ்சம்

முன்னால் நகர்ந்து அவர், ''எங்கே சென்றிருக்கிறான் அவன்? மால்வனுக்கா?'' என்று கேட்டார்.

''ஆமாம், சேட்டின் வேலையாகத்தான் மத்தியான்னம் போயிருக்கிறார்.''

''ரொம்ப நல்லது. அவன் போனானா இல்லையா என்று விசாரிக்கத்தான் நான் இங்கு வந்தேன்.''

அவர் பேசியதன் அர்த்தம் யசோதைக்கு விளங்கவில்லை. 'இவர் யாராக இருக்கலாம்? என்று அவள் எண்ணமிடலானாள். பிறகு அதை அறிவதற்காக, ''அவரிடம் ஏதாவது சொல்லவேண்டுமா? யார் வந்திருந்ததாகச் சொல்லட்டும்?'' என்று அவள் கேட்டாள்.

''என்ன? நான் யாரென்று உனக்கு இன்னும் தெரியவில்லை? பேஷ் பேஷ்!'' என்று கூறிக்கொண்டே மோத்திராம் உள்ளே நுழைந்தார்.

அவர் உள்ளே வந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை. அதுவும் ஆனந்தன் இல்லாத சமயம் ஓர் அந்நியன் உள்ளே வந்தது யசோதைக்கு முற்றும் பிடிக்கவில்லை.

ஆகவே அவள் வேண்டா வெறுப்புடன் சேட்டை நோக்கிக்கொண் டிருந்தாள். அதே சமயம் பூனை மோத்திராம் சேட்டைச் சுற்றிச் சுற்றி வலம் வந்து உறுமிக்கொண்டே இருந்தது.

''யாருடைய பங்களாவைக் கட்டுவதற்காக ஆனந்தன் இங்கு வந்திருக்கிறானோ, அந்த மோத்திராம் சேட் நான்தான். இப்பொழுது தெரிந்ததா, நான் யார் என்று?'' - மோத்திராம் சிரித்துக்கொண்டே கேட்டார்.

அப்பொழுது யசோதை சிறிது திடுக்கிட்டாள். எதிர்பாராத விதமாக எஜமானனைக் கண்ட வேலையாள் அச்ச முறுவதைப்போல் ஆயிற்று அவளுடைய நிலைமை. ஆயினும் அவரது வருகை அவளுக்குச் சிறிது பெருமையாகவும் இருந்தது.

யசோதை ஒன்றுமே பதிலளிக்கவில்லை.

ஆனால் கொஞ்ச நேரமாகியும் மோத்திராம் அங்

கிருந்து அசையாமல் நிற்பதைக் கண்டதும் அவளுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

அவள் சேட்டை நோக்கினாள். ஆனால் மறு விநாடியே திகைப்படைந்தாள். மோத்திராமின் கள்ளம் நிறைந்த பார்வையைக் கண்டதும் அவளுடைய ரோமங்கள் குத்திட்டு நின்றன.

அவள் பீதியடைந்தவளாக மருண்ட மானைப்போல் இங்குமங்கும் நோக்கினாள். பிறகு ஒன்றும் தோன்றாமல் புடைவைத் தலைப்பின் ஒரு நுனியைத் தன் விரலால் சுற்றத் தொடங்கினாள்.

மோத்திராம் தம் காமவெறிக் கண்களால் அவளையே பார்த்துக்கொண்டிருந்தார்.

"யசோதைதானே உன் பெயர்?" என்று அவர் கேட்டார்.

"ஆமாம்" என்று அவள் பதில் கூறிவிட்டு, உயரே பார்க்கத் தொடங்கினாள்.

"நீ மாதர் சங்கத்தில் பணியாற்றுகிறாய் என்று எனக்கு நேற்று வரையில் தெரியாது. நேற்று மாலை நான் தற்செயலாக அந்தப் பக்கம் வந்தேன். உன் பாட்டைக் கேட்டுப் பிரமித்துப் போனேன். நீ எங்கே கற்றுக்கொண்டாய், இத்தனை நன்றாகப் பாட?"

யசோதை மௌனம் சாதித்தாள். மோத்திராம் சீக்கிரமே செல்லமாட்டாரா என்று அவள் நினைக்கத் தொடங்கினாள்.

"அந்தப் பாட்டை இப்பொழுது பாடிக் காண்பிக்கிறாயா?" என்று மோத்திராம் சிரித்துக்கொண்டே அவளைக் கேட்டார்.

எதிர்பாராத இந்தக் கேள்வியைக் கேட்டதும் யசோதைக்கு என்னவோபோல் இருந்தது. அந்த இக்கட்டான நிலைமையினால் அவளுடைய உடலெல்லாம் வேர்த்துக் கொட்டிற்று. ரோஜா மலரை நிகர்த்த அவளது மதி வதனம் செம்மையாகச் சிவந்தது.

அவள் மௌனம் சாதிப்பதைக் கண்ட மோத்திராம், ''யசோதா, இந்தப் பிச்சைக்கார வீட்டில் உன் போன்ற ரத்தினம் இருப்பது கொஞ்சங்கூடச் சோபிக்கவில்லை. இந்த உன்னதமான ரத்தினத்துக்கு உயர்ந்த மாளிகை வேண்டும், உல்லாசமான உப்பரிகை வேண்டும். என்ன?'' என்று கூறிப் புன்னகை பூத்தார்.

யசோதை எச்சிலை மென்று விழுங்கினாள். அவள் மீண்டும் ஒரு முறை எச்சிலை விழுங்க முயன்றாள். ஆனால் அவளுடைய தொண்டை வறண்டு போயிருந்தது.

''என்ன யோசிக்கிறாய்? வருகிறாயா என்னுடன்? என் சொத்து, செல்வம், மோட்டார், பங்களா, எல்லாவற்றையுமே உன் காலடியில் கிடத்திவிடுகிறேன். உன் சேவைக்காக அர்ப்பணிக்கிறேன்'' என்றார் மோத்திராம் தம் மீசையைத் தடவி விட்டுக்கொண்டே.

இதைக் கேட்டதும், ஏக காலத்தில் ஆயிரம் ஈட்டிகள் உடலில் பாய்ந்ததுபோல் இருந்தது யசோதைக்கு. மோத்திராமின் நீசத்தனமான நடத்தையினால் தன் மானத்துக்கே பங்கம் ஏற்பட்டுவிடும் என்று அவள் அஞ்சினாள்.

அதே கணம், உடல் நடுங்க, குரோதம் பொங்க, அவள் காளி ரூபம் எடுத்தாள்.

''சண்டாளா, உனக்குத் தாய், தங்கை என்று யாருமே கிடையாதா?'' என்று நெருப்பைக் கக்கும் எரிமலையைப்போல் குமுறிக் கொட்டினாள்.

''யசோதா, கோபப்படாதே! என் கண்மணியே! நிதானமாக யோசித்துப் பார். உன்னைப்போன்ற வாடா மலர்..''

''சீ, மூடு வாயை! ஒரு வார்த்தை அதிகமாகப் பேசினாயோ, கூச்சல் போட்டு, ஊரையே கூட்டிவிடுவேன்.''

அந்த ஆக்கிரோஷமான பேச்சைக் கேட்டதும் மோத்திராம் சேட் வெட்கமடைந்து வாய் மூடினார். வெட்கமடைந்து வாய் மூடினார் என்று சொல்வதற்குப்

பதிலாக, ஊரார் கூடினால் தம் மானம் பறந்து போகுமே என்று அஞ்சினார் எனலாம்.

'நாம் ஒரு வார்த்தை சொன்னதும் அவள் இணங்கி விடுவாள், நம்முடன் வந்துவிடுவாள்' என்று அல்லவா கற்பனை செய்துகொண்டு வந்தார் சேட்? ஆனால், தாம் ஒன்று நினைக்கத் தேவி ஒன்று நினைத்துவிட்டாளே!

இனி இங்கு ஒரு விநாடி தாமதித்தாலும் ஆபத்து என்று நினைத்து அவர் உடனே சட்டென்று வெளியேறினார். 'ஊர் ஜனங்களுக்கு முன் அவமானப்படுத்தி அடி வாங்கிக் கொடுக்காமல் இத்துடன் ஆளை விட்டாளே மகராசி!' என்று அவருக்குச் சிறிது ஆறுதலாக இருந்தது.

ஆயினும் கோபமும் அவமானமும் அவரது உடலைச் சல்லடைக் கண்களாகத் துளைக்கத் தொடங்கின. தம்மைப் போன்ற வாலிபம் நிறைந்த அழகான செல்வச் சீமானை, பிச்சைக்காரப் பெண் ஒருத்தி மானபங்கப்படுத்தி அனுப்பினாளே என்று அவருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

மோத்திராம் சேட் போனதும் யசோதை தரையில் உட்கார்ந்தாள். பூனை அவளைச் சுற்றிச் சுற்றி வந்து, 'என்ன நடந்தது?' என்று கேட்பதுபோல் பார்த்தது.

யசோதைக்கு அந்த அந்திவேளை வெகு பயங்கரமாகத் தோன்றியது. வெளியிலோ ஒரே கும்மிருட்டு. ஆள் நடமாட்டம் நின்றுவிட்டது. சேட் மீண்டும் திரும்பி வந்து அவளைப் பலவந்தப்படுத்தினால்கூட அவளைக் காப்பாற்றுவார் யாரும் இல்லை. இந்த நிலையில் வீட்டில் விளக்கேற்ற வேண்டும் என்றுகூட அவளுக்குத் தோன்றவில்லை.

துணையின்றித் தனியாக இருக்கிறோம் என்று அவளுக்கு ஏகப் பயம். உடனே அவளுக்கு ஆனந்தனின் நினைவு வந்தது.

ஆனந்தன் மால்வனுக்குப் போகப் புறப்பட்ட

போது, ''எப்பொழுது திரும்பி வருவீர்கள்?'' என்று அவள் அவனைக் கேட்டாள்.

''நாளை மாலைக்குள் வந்துவிடுவேன்'' என்றான் அவன்.

''அதுவரையில் நான் இங்கே தனியாகவா இருக்க வேண்டும்?'' என்றாள் அவள், பீதி கலந்த குரலில்.

''இங்கு என்னடி பயம் உனக்கு? இதென்ன காடா? அக்கம்பக்கத்தில் ஆட்களே இல்லையா?'' அவனது குரலில் கடுமையும் கண்டிப்பும் இருந்ததைக் கண்டு அவள் மேற்கொண்டு பேசப் பயப்பட்டாள்.

''சரி, நாளைக்குக் கட்டாயம் வந்துவிடுவீர்கள் அல்லவா?''

''நிச்சயமாக வந்துவிடுவேன்.''

இவ்வாறு கூறிவிட்டு ஆனந்தன் புறப்பட்டுச் சென்றான். அவனுடைய தலை மறையும்வரையில் யசோதை அந்தத் திசையையே நோக்கிக்கொண்டிருந்துவிட்டு ஒரு நெடுமூச்சு விட்டாள்.

இங்கு ஒரு பயமும் இல்லை என்று சொல்லிவிட்டுப் போனானே. அவன் கணநேரம் வீட்டில் இல்லாததால் எப்பேர்ப்பட்ட பேராபத்து நேர இருந்தது! இன்று இரவு முழுவதும் அவள் தனியாகவே அந்த வீட்டில் கழிக்கவேண்டும். நாளைப் பகல் முழுவதும் தள்ளியாக வேண்டும். அப்பப்பா! அதை அந்தப் பேதை எப்படித் தான் பொறுப்பாள்?

அவளுக்கு அச்சமாக இருந்தது. உடனே அருகில் இருந்த பூனையை வாரி எடுத்து அணைத்துக்கொண்டாள். அவளுடைய நயனங்களில் நீர் மல்கியது.

* * *

இங்கே மோத்திராம் சேட் உள்ளம் வெந்துபோய் உலாவிக்கொண்டிருந்தார். காரணமின்றி எங்கே சென்றுகொண்டிருக்கிறோம் என்பது அவருக்கே தெரியவில்லை. கால் இழுத்துச் சென்ற இடமெல்லாம் அவர் சென்றுகொண்டே இருந்தார்.

திவாகர், காதல் என்னும் வித்தைத் தம் உள்ளத்தில் ஊன்றுமல் இருந்திருந்தால் எவ்வளவு நன்ருக இருந்திருக்கும் என்று அவர் எண்ணமிடலானுர்.

ஆனுல் மறுகணமே அவருடைய சஞ்சலமடைந்த மனம், 'அதில் என்ன தப்பு இருக்கிறது? எங்கு வேண்டுமானுலும் பார். உன்னைப்போன்ற பணக்கார வாலிபர்கள் உல்லாசமாக வாழ்க்கையை நடத்துகிருர்கள். அவர்களுக்கும் மனைவி உண்டு. ஆனுல் அவர்கள் உன்னைப்போல் மனைவியைக் கண்டு நடுங்குகிறவர்கள் அல்ல; தாசர்கள் அல்ல' என்று இடித்துக் காட்டியது. அவருக்கு இப்பொழுது கொஞ்சம் தைரியம் பிறந்தது.

'பணக்காரர்கள் ஏன் அஞ்ச வேண்டும்? அஞ்ச வேண்டிய அவசியம் என்ன? ஏழையான யசோதை மறு பேச்சின்றி என் சொல்லுக்கு இணங்கி இருக்கவேண்டும். ஆனுல் அவள் ஒரு லங்கிணியாகக் காணப்படுகிருள். அவளை நான் சௌந்தரியப் பூஞ்சோலை என்று தவருக நினைத்தேன். அந்த வண்ண மலர்ச் சோலையில் விஷப் பாம்பு வாசம் செய்யும் என்று நான் கருதவே இல்லை. இப்பொழுது அந்த விஷப் பாம்பைக் கொல்லத்தான் வேண்டும். அதன் விஷப் பற்களைப் பிடுங்கத்தான் வேண்டும். அதன் கொட்டத்தை அடக்கத்தான் வேண்டும்.

'எப்படியும் யசோதையை வசப்படுத்தியே தீருவது என்று மோத்திராம் தீர்மானித்துவிட்டார். 'அவளை நம் வழிக்குக் கொண்டுவரா விட்டால் நமக்குத்தான் அவமானம். திவாகர் போன்ற பம்பாய்வாசி நம்மை, "சீ, தூ!" என்று காறித் துப்புவான். ஆகையால் நாம் போட்ட திட்டத்தை நிறைவேற்றத்தான் வேண்டும். அதற்காக, திவாகரின் உதவியை வேண்டுமானுலும் நாடுவோம்: அவன் நிச்சயம் நமக்குச் சகாயம் செய்வான்.'

இவ்வாறு ஆழ்ந்த யோசனையில் மூழ்கிவிட்ட மோத்திராம் சேட் மால்வண் வரையிலும் நடந்துவந்துவிட்டார்.

யோசனையிலிருந்து விழிப்படைந்ததும் வெகு தூரம் வந்துவிட்டதை அவர் உணர்ந்து, வந்த வழியே திரும்பினுர். வேக வேகமாக அவர் தேவ்பாக்கை நோக்கி நடக்கலானுர்.

சிறிது நேரத்தில் அவர் தம் பங்களா வாசலில் வந்து நின்ருர், வேர்க்க விறுவிறுக்க. கேட்டண்டை வந்த போது சுசீலா யாருடனே உரக்கப் பேசிக்கொண் டிருந்தது அவருடைய செவிகளில் விழுந்தது. அவள் பேசிக்கொண்டிருந்த அறையின் ஜன்னல், தெருப் பக்கமாக இருந்தது. அறையில் பிரகாசித்துக்கொண் டிருந்த மின்சார விளக்கின் வெளிச்சம் தெருவில் விழுந்துகொண் டிருந்தது. ஆகவே அவர் ஆவல் காரணமாக ஜன்னல் ஓரமாக நின்று அவள் பேசுவதைக் கவனித்தார். சுசீலா பேசிய ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டபோது அவருடைய காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி வார்த்தது போல் இருந்தது.

அவருடைய உடல் புல்லரித்தது. உடனே அவர் ஜன்னல் வழியே உள்ளே எட்டிப் பார்த்தார். அப்பொழுது அவர் கண்ட காட்சியால் அவரது குலே நடுங்கிற்று. இருதயம் நின்றுவிடும்போல் ஆகிவிட்டது. உடலும் உள்ளமும் பதற, அவர் சலனமற்று நின்று சம்பாஷணையைக் கேட்டுக்கொண் டிருந்தார்.

# 11

# தொழிலாளியா, மேஸ்திரியா?

ஆனந்தன் அளவு கடந்த நம்பிக்கையுடன் மால்வ ணுக்குப் புறப்பட்டான். 'மரக்கலம் தயாரிக்கும் தொழிற் சாலையில் என்ன என்ன வேலைகள் இருக்கும், அங்கே தான் செய்யக்கூடிய வேலை என்ன இருக்கும், தன் சாமர்த்தியத்தைக் காட்டுவதற்கு அங்கே சந்தர்ப்பம் கிடைக்குமா?' - இவ்வாறு கணக்கற்ற எண்ண அலைகள் அவனுடைய உள்ளக் கடலில் எழுந்து ஓயாமல் மோதிக் கொண்டிருக்க, அவன் நடந்து சென்றான்.

கடற்கரை மணலில் நடந்து நடந்து அவனுடைய கால்கள் சோர்ந்துவிட்டன. மேற்கொண்டு ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாது என்று அவனுக்குத் தோன்றி யது. கடற்கரையில் இருந்த ஒரு படகில் ஏறி உட்கார்ந்து கொண்டான். பிறகு தன் பார்வையை எதிரே செலுத் தினன். கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் பரந்த கடல் கம்பீரமாகத் தோற்றம் அளித்தது. அதில் பிரம் மாண்டமான அலைகள் தோன்றி, வெகு வேகமாகக் கர்ஜித்துக்கொண்டே வந்து கரையைத் தாக்கிக்கொண் டிருந்தன. பிறகு அவை வந்த வழியே சாந்தமாகத் திரும்பிச் சென்றுகொண் டிருந்தன.

அங்கே தொலைவில் சிந்து துர்க்கம் கோட்டையைக் கண்டதும் ஆனந்தனின் மார்பு பெருமையால் எழும்பி யது. அது சத்திரபதி சிவாஜி மகாராஜாவின் கோட்டை என்பதற்காக அல்ல; அந்தப் பூரிப்புக்கு மற்றொரு கார ணமும் இருந்தது.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இதே கோட்டை யில் ஆனந்தனின் முன்னோர்களில் யாரோ ஒருவர் வசித்து வந்தார் என்று அவன் கேள்விப்பட்டிருந்தான்.

அந்த உறவினர் சிவாஜியின் கடற்படைக்காகக் கப்பல் கட்டி வந்தார். அவர் தயாரித்த கப்பல்கள் எல்லாம் வலுவானவை. பறங்கிக்காரர்களின் கப்பல்களைப் பார்த்து அவற்றைவிடப் பலமான கப்பல்களை அவர் கட்டியதால் சிவாஜி மன்னருக்குக் கடற்போர்களில் தோல்வியே ஏற்படவில்லை. ஆகவே அவருடைய திறமையைப் பாராட்டிச் சிந்து துர்க்கம் கோட்டையில் உள்ள பவானி அம்மன் கோயிலில் வீரர்களுக்கான மரியாதை கிடைத்திருந்தது.

இன்றைக்குக்கூட அந்த மரியாதையைப் பெறுவதற்காக ஆனந்தனின் குலத்தவர்கள் ஆண்டுதோறும் சிந்து துர்க்கத்துக்குச் சென்று வருகிறார்கள்.

இதை நினைத்தபோதுதான் ஆனந்தன் பூரிப்படைந்தான். அத்தகைய கலைஞனின் வம்சத்தில் தான் பிறந்தவன் என்று அவனுக்குப் பெருமையாக இருந்தது. ஆகவே அவன் சிந்து துர்க்கத்தை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டான்.

இப்பொழுது ஆனந்தனின் மனத்தில் பற்பல எண்ணங்கள் உதித்தன. 'புத்தி சாதுரியத்தில் நானும் குறைந்தவன் அல்ல. நானும் அவரைப்போலவே பராக்கிரமசாலி ஆகியிருப்பேன். ஆனால் பராக்கிரமத்தைக் காட்டுவதற்கான அந்த நாட்கள் இப்பொழுது மறைந்துவிட்டனவே! சந்தர்ப்பம் மட்டும் கிடைத்தால் நானும் ஒரு நாள் புகழ் அடைந்தே தீருவேன்.'

இப்படிச் சிந்தனையில் அவன் எத்தனை மணி நேரம் ஆழ்ந்திருந்தானோ தெரியாது. யாரோ ஒருவன், "கீழே இறங்கையா, படகு ஓட்டவேணும்" என்று கூறியதும் அவன் திடுக்கிட்டான். உடனே தன்னுடன் பேசியவன் யார் என்று அவன் திரும்பிப் பார்த்தான். அங்கே ஒரு செம்படவன் நின்றுகொண் டிருந்தான். ஆகவே ஆனந்தன் படகை விட்டு எழுந்தான்.

இதற்குள் அந்தச் செம்படவன் படகுக்கு முன்புறம்

மணலில் அடித்திருந்த முளையைப் பிடுங்கி எடுத்தான். பிறகு அவன் படகைத் தள்ள முயன்றான். ஆனால் மணலில் படகு புதைந்திருந்ததால் அவன் ஒருவனால் மட்டுமே தள்ள முடியவில்லை. ஆகையால் அவன் ஆனந்தனை நோக்கி, "கொஞ்சம் கைகொடுங்கள், மாமா" என்றான்.

ஆனந்தனும் அவனும் படகைத் தள்ளிக்கொண்டே வந்தனர். அது நீரில் மிதக்க ஆரம்பித்ததும் ஆனந்தன் விட்டுவிட்டான்.

செம்படவன் துடுப்புகளைப் படகில் வைத்தான். மீன் பிடிக்கும் வலை சரியாக இருக்கிறதா என்று கவனித்தான். பின்னர் மடியில் இருந்த பையை எடுத்து, அதிலிருந்த பீடி இலைகளைக் கையால் சுருட்டி, ஒரு பீடியைத் தயார் செய்தான். உடனே அதைப் பற்ற வைத்துக் கொண்டே, "மாமா, உங்களுக்கு வேணுங்களா?" என்று ஆனந்தனைக் கேட்டான்.

ஆனந்தன், "வேண்டாம்" என்று பதில் அளித்தான்.

இதைக் கேட்டதும் செம்படவனுக்குச் சிரிப்பு வந்தது.

அந்தப் பீடியை இரு கைகளாலும் பிடித்து, ஜோராக ஒரு 'தம்' இழுத்தான். ஒரு விநாடிக்குப் பின் புகையை வாயாலும் மூக்காலும் வெளியே விட்டுக் கொண்டே, "இன்னும் ஏன் வரவில்லை?" என்று திரும்பிப் பார்த்தவண்ணம் முணுமுணுத்தான்.

பிறகு கொஞ்ச நேரம் காத்திருந்துவிட்டு, அந்த ஆள் வராததைக் கண்டு, "ஹலோ" என்று உரக்கக் கூவினான்.

இதையெல்லாம் காண ஆனந்தனுக்கு வேடிக்கையாக இருந்தது. அவன் இவ்வாறு இரண்டு மூன்று தடவை கூப்பிட்டதும், மற்றோர் இளைஞன் படகருகில் வந்து நின்றான்.

அவன் இடுப்பில் மட்டும் ஒரு துணியைக் கட்டிக் கொண்டிருந்தான். சட்டைகூட அணிந்திருக்கவில்லை.

அவன் வந்ததும் இருவரும் படகில் ஏறிக் குதித்தனர். ஆனந்தனுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு அவர்கள் படகை ஓட்ட ஆரம்பித்தனர். ஆனந்தனுக்கும் படகுக்கும் இடையில் இருந்த தூரம் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக்கொண்டு வந்தது. அது கடலில் வெகுதூரம் சென்று மறையும் வரையில் ஆனந்தன் படகையே நோக்கிக்கொண் டிருந்தான்.

அப்பொழுது சூரியன் மறையும் வேளையாக இருந்தது. ஆனந்தன் ராஜ்கோட்டை அடைந்தபோது வெளிச்சம் மங்கிக்கொண்டே வந்தது.

மோத்திராம் சேட்டின் ஆலையில் உள்ள தச்சர்கள் வீடு செல்லத் தயாராக இருந்தனர். அங்கிருந்த சிலர் ஆனந்தனை அடையாளம் கண்டுகொண்டனர்.

''என்ன ஆனந்தா, இங்கே என்ன காரியமாக வந்தாய்?'' என்று ஒருவன் கேட்டான்.

''சீக்கிரமே நான் இந்த ஆலையில் வேலைக்கு வரப் போகிறேன்'' என்றான் ஆனந்தன் மகிழ்ச்சியுடன்.

''என்று முதல்?''

''இன்று முதலேதான்.''

''இங்கு என்ன வேலை செய்யப் போகிறாய்? எந்த இலாகாவில் சேரப் போகிறாய்?''

''அது இனிமேல்தான் தெரிய வேண்டும்.''

''அது சரி, இப்போது இங்கு வேலை காலி இல்லையே! கொச்சியிலிருந்து வந்த பாய்மரக் கப்பல் ரிப்பேராகி இருக்கிறது. ஒருகால் அதில் ஏதாவது வேலை இருக்கும்.''

''எதற்கும் பார்ப்போம். உங்கள் மேஸ்திரி எங்கே இருக்கிறார்?''

''அதோ, பாய்மரக் கப்பலின் பக்கத்திலேயே அமர்ந்து பேசிக்கொண் டிருக்கிறார்.''

''சரி, உன்னை அப்புறம் வந்து பார்க்கிறேன்'' என்று கூறிவிட்டு, ஆனந்தன் மேஸ்திரியைக் காணச் சென்றான்.

ஆனந்தனைக் கண்டதும் மேஸ்திரி, ''ஆனந்தா, இங்கே எங்கப்பா வந்தாய்?'' என்று ஆவலுடன் கேட்டான்.

''இங்கேதான் எனக்கு மாற்றலாகி இருக்கிறது. உனக்கு ஓர் ஆட்சேபமும் இல்லையே?'' என்றான் சிரித்துக்கொண்டே.

''இல்லை இல்லை; நாளை முதல் நீ இந்தப் பாய்மரக் கப்பல் வேலையைக் கவனி.''

''சரி.''

''ஆனந்தா, நான்கூடத்தான் ஒரு நல்ல மேஸ்திரி வேண்டுமென்று தேடிக்கொண்டிருந்தேன். அதற்குள்...''

''இதோ பார் அண்ணே, நான் ஒரு தொழிலாளி. சும்மா என்னை 'மேஸ்திரி, சாஸ்திரி' என்றெல்லாம் கூப்பிடாதே. அது நமக்குப் பிடிக்காத விஷயம்.''

''அட புத்திசாலி! இப்பொழுது நீ பட்டணத்துக்கு வந்திருக்கிறாய். முதலில் ஊருக்குத் தகுந்தாற் போல நடந்துகொள்ளக் கற்றுக்கொள். தேவ்பாக்கில் நீ தொழிலாளியானால் இங்கு நீ மேஸ்திரி. என்ன, தெரிந்ததா?''

இருவரும் வயிறு புடைக்கச் சிரித்தார்கள். இதற்குள் ஒரு பன்றியும் நாலைந்து குட்டிகளும் தரையை மோந்து பார்த்துக்கொண்டே அங்கே வரவும் அவர்கள் அந்த இடத்தை விட்டு எழுந்தனர்.

பன்றிகளுக்குப் பின்னால் கிறிஸ்தவப் பெண் ஒருத்தி கையில் ஒரு கழியுடன் வந்தாள்.

ஆனந்தனும் மேஸ்திரியும் பேசிக்கொண்டே நடந்தனர்.

இதே சமயத்தில் தேவ்பாக்கில் ஆனந்தன் வீட்டு வாசலில் மோத்திராம் சேட் நின்றுகொண்டிருந்தார்.

# 12

## மங்கையர் திலகம்

"ஆனந்தா" என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டது.

ஆனந்தன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். கனவானைப்போல் உடை அணிந்த யாரோ ஒருவர் தன்னை நோக்கிக் கைகாட்டிச் சைகை செய்வதுபோல் தோன்றியது அவனுக்கு.

அவன் ஒரு கணநேரம் தயங்கினான். பிறகு அவர் கூப்பிடுவது தன்னை அல்ல என்று நினைத்து, மேலே நடந்தான். ஆனால் அந்த ஆசாமி மீண்டும் "ஆனந்தா, ஆனந்தா" என்று கூப்பிட்டார். ஆனந்தன் சிறிது நின்று கூர்ந்து கவனித்தபோது, அவர் தன்னைத்தான் கூப்பிடுகிறார் என்று நிச்சயமாகத் தெரிந்துகொண்டான். உடனே அவன் திரும்பி வந்தான். அருகில் வந்ததும் தன்னை அழைத்தவர் யார் என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. அதுவேறு யாரும் அல்ல; திவாகர்தான்.

"யார், திவாகரா? நீங்கள் எப்போது இங்கே வந்தீர்கள்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ஆனந்தன்.

"நீ எப்பொழுது மால்வனுக்கு வந்தாய் என்று சொல்" என்று திருப்பிக் கேட்டான் ,திவாகர்.

"நான் நேற்று மாலையில் வந்தேன்."

"நான் இன்று காலையில் வந்தேன். மத்தியான்னக் கப்பலில் பம்பாய்க்குச் செல்கிறேன்."

"பம்பாய்க்கா? என்ன அத்தனை அவசரம்?"

இதைக் கேட்ட திவாகரின் முகம் வெளுத்தது. கைக்குட்டையால் தன் முகத்தைத் துடைத்துக்

கொண்டே, ''மோத்திராம் சேட்டுக்காகக் கொஞ்சம் சாமான்கள் வாங்கவேண்டி இருக்கிறது. அவருக்கு வேறு யாரிடமும் நம்பிக்கை இல்லை. ஆகையால் அந்த வேலையை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார். அவருடைய விருப்பப்படியே பங்களாவுக்குச் சாமான்கள் வாங்க வேண்டுமென்றால், அதற்கு நானே போவது தான் நல்லது என்று நினைத்துக் கிளம்பிவிட்டேன்'' என்று பதில் அளித்தான்.

''அப்படியா?'' என்று கேட்கும் பாவனையில் ஆனந்தன் தலையை அசைத்தான்.

''எப்போது திரும்பி வரப்போகிறீர்கள்?''

''அதை இப்பொழுது எப்படிச் சொல்ல முடியும்? அது சரி, நீ எப்படித் திடீரென்று மால்வணுக்கு வந்து விட்டாய்?''

''என்ன திவாகர், ஒன்றும் தெரியாததுபோல் கேட்கிறீர்களே! உங்களுக்கு எதிரில்தானே என்னை மால்வணுக்குப் போக உத்தரவிட்டார் சேட்?''

''ஆமாம் ஆமாம். இப்பொழுது ஞாபகம் வந்தது. உன் மனப்படி இங்கு என்ன இருக்கிறதப்பா? அப்படி ஏதேனும் இருந்தால் நீ இங்கே இருக்கலாம்; இல்லா விட்டால் நீ என்னுடன் பம்பாய்க்கு வா. அங்கே உனக்கு நல்ல சம்பளத்தில் வேலை வாங்கித் தருகிறேன். உண்மையாகச் சொல்லப்போனால், உன்னைப்போன்ற குணசாலிகள் பம்பாய்க்குத்தான் வர வேண்டும். உன் சாமர்த்தியம் அங்கு நல்ல விலை போகும். அவ்வளவு தூரம் போவானேன்? என் கம்பெனியிலேயே உன்னைப் போன்ற திறமைசாலிகளின் தேவை இருக்கிறது. என்ன, விருப்பம் இருந்தால் இப்பொழுதே என்னுடன் வந்துவிடு.''

''இப்பொழுதேயா? இப்படி அவசரப்பட்டால் எப்படிக் கிளம்ப முடியும்?''

''ஏன்? அதில் என்ன கஷ்டம்?''

''கஷ்டமா? வீட்டில் சொல்லிவிட்டு, ஏற்பாடுகள் செய்துவிட்டு வர வேண்டாமா?''

''வீட்டிலா? யசோதையைப்பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. மோத்திராமைப் போன்ற எஜமான் இருக்கிறபோது நீ ஏன் கவலைப்பட வேண்டும்? பம்பாய்க்குப் போனதும் கடிதம் எழுதினால் அவள் அடுத்த கப்பலில் வந்துவிட்டுப் போகிறாள்.''

''சேசே! அது எப்படி முடியும்? யசோதையைக் கண்டு சொல்லிவிட்டு வந்தாலொழிய என்னால் புறப்பட முடியாது. கட்டாயம் நான் பம்பாய்க்கு வருகிறேன். உங்கள் விலாசத்தைக் கொடுங்கள். நான் நேரே அங்கு வந்து இறங்கிவிடுகிறேன்.''

''பம்பாய் என்றால் நீ என்னவென்று நினைக்கிறாய்? அது ஒரு பெரிய நகரம். அங்கு என்னையோ என் விலாசத்தையோ உன்போன்ற புது ஆசாமிகள் எளிதில் கண்டுபிடிக்க முயடிாது.''

''அப்படியானால் நீங்கள் சாமான் வாங்கிக்கொண்டு திரும்பி வருவீர்கள் அல்லவா? அப்பொழுது நான் உங் களுடனே வந்துவிடுகிறேன்.''

ஆனந்தன் தன் வலையில் சிக்கவில்லை என்று தெரிந் ததும் திவாகரின் நெற்றியில் சுருக்கங்கள் படிந்தன.

''ஆனந்தா, நீ சுத்தப் பைத்தியக்காரன். மனைவி மனைவி என்று நீ உயிர் விட்டுக்கொண் டிருக்கிறாய். ஆனால் அவள் எங்கே உன்னை லட்சியம் செய்கிறாள்?''

''என்ன?''

''என்னவா? வீட்டுக்குப் போ; உனக்கு எல்லாம் தெரியும். அவளுக்கு மோத்திராம் சேட்டிடம் மோகம்; சொல்ல முடியாத காதல். என்ன, தெரிந்ததா?''

இதைக் கேட்டதும் ஆனந்தனுக்கு உடலில் மின் சாரம் பாய்ந்ததுபோல் இருந்தது. சினம் தலைக்கு ஏறி யது. உடனே அவன் பற்களைக் கடித்துக்கொண்டு, திவா கரின் கையை இறுகப்பற்றி, ''திவாகர், பொய் சொல்லா

தீர்கள். இதை நிரூபிப்பீர்களா?'' என்று சூடான குரலில் கேட்டான்.

ஆனந்தனின் பிடியிலிருந்து திமிறிக்கொண்டே திவாகர், ''அடே, இதற்குள் வெறிகொண்டு விட்டாயே! இதில் நான் நிரூபிக்க என்ன இருக்கிறது? நீயே கண்களைத் திறந்து பார். பிறகு உனக்கே புலப்படும். அப்படியும் உன் மூளைக்கு எட்டவில்லை என்றால் நான் இருக்கவே இருக்கிறேன். பம்பாயிலிருந்து வந்ததும்...''

ஆனந்தனின் கைப்பிடி தானாகவே தளர்ந்தது. உடம்பில் உள்ள சக்தி குன்றிப்போவதுபோல் தோன்றியது. ஏற்கனவே வெயில் தகித்துக்கொண் டிருந்தது. போதாதென்று திவாகர் சொன்ன உள்ளத்தைப் பொசுக்கும் செய்தியைக் கேட்டதும் ஆனந்தனின் மனம் கொதித்தது. அவன் முகம் இறங்கிவிட்டது.

இதற்குள் கப்பலுக்கு அருகில் பிரயாணிகளைக் கொண்டு செல்லும் படகு புறப்படும் நேரமாகிவிட்டது.

பிரயாணிகளின் பரபரப்பும் மாலுமிகளின் பரபரப்பும் அதிகரித்தன. அப்பொழுது திவாகர் ஆனந்தனைச் சமாதானப்படுத்தும் பாவனையில், ''ஆனந்தா, இப்பொழுது நீ போ. வீணாக உன் மனத்தை அலட்டிக் கொள்ளாதே. இதோ படகு புறப்படப்போகிறது; நானும் போகிறேன். இப்பொழுது நான் சொன்ன விஷயத்தை ஒருவரிடமும் நான் சொன்னதாகச் சொல்லாதே'' என்று கூறிவிட்டு, திவாகர் படகில் ஏறிக் கொண்டான். சிறிது நேரத்தில் படகு கிளம்பியது. மெய்ம்மறந்து நின்றுகொண் டிருந்த ஆனந்தன், நீராவிப் படகின் ஊதுகுழலின் சத்தத்தைக் கேட்டுச் சுயஉணர்வு பெற்றான். உடனே உடைந்த உள்ளத்துடன் கடற்கரை மணலில் மெதுவாக நடந்து சென்றான்.

ஆனந்தன் அன்றைப் பொழுதை நிம்மதியின்றிக் கழித்தான். சமுத்திரக் கரையில் இருந்த ஒரு பாறையின்மேல் அவன் ஓயாத சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

'யசோதை உண்மையிலேயே நம்மிடம் நன்றி கெட்டவளாக நடந்துகொள்ளுவாளா? அவள் அழகாக இருக்கிருள்; புத்திசாலியாக இருக்கிருள்; படித்தவளாகவும் இருக்கிருள். அதே சமயம் அவள் விவேகம் கொண்டவள்கூட. ஆகையால் எப்படிப்பட்ட கெட்ட காரியத்தையும் அவள் செய்யமாட்டாள். வறுமை மிக்க என் நிலையிலும் அவள் நேர்மையாகவே இருக்கிருள். நன்ருக அலங்கரித்துக்கொள்ள வேண்டும், சுகங்களை அநுபவிக்க வேண்டும் என்கிற விருப்பம் என்னவோ அவளுக்கு உண்மையில் உண்டு. ஆனுல் அதற்காக அவள் ஒருநாளும் கேவலமாக நடந்துகொள்ள மாட்டாள். மோத்திராமின் செல்வச் சிறப்பைக் கண்டு அவள் மோகம் கொள்வது உண்மையாக இருக்கலாம். அதற்காக அவள் மானத்தை விலை கூறுவாளா?' ஆனுல் மோத்திராம் சேட் பெரிய தனவந்தர்; வாலிபர்; எஜமான். ஒருகால் அவருக்கு யசோதையின்மேல் நாட்டம் இருந்தால்? அவளைக் கெட்ட வழியில் கொண்டு செல்ல முயற்சிகள் செய்து வந்தால்? கரைப் பார் கரைத்தால் கல்லும் கரையும் என்பார்களே; அடிமேல் அடிவைத்தால் அம்மியும் நகரும் என்பார்களே; அப்படி ஏதாவது எக்கச்சக்கமாக நடந்துவிட்டால்?' - ஆனந்தனின் உள்ளம் அவனை வாட்டி எடுத்தது.

ஆனந்தனின் கண்களுக்கு யசோதையிடம் யாதொரு கெட்ட குணமும் இருப்பதாகத் தெரியவில்லை. யசோதை அவனுக்குப் பவித்திரமாகவும் மங்கையர் திலகமாகவும் காட்சி தந்துகொண் டிருந்தாள்.

அதே சமயம், மோத்திராம் போன்ற மனிதர்கள் சஞ்சல புத்தி உடையவர்களாக இருக்கக்கூடும் என்றும் அவனுக்குத் தோன்றியது.

அப்படிப்பட்ட மனிதரிடம் ஊழியம் செய்யாமல் இருப்பதே நல்லது என்று ஆனந்தனுக்குப் பட்டது.

உடனே தேவ்பாக்குக்குச் சென்று யசோதையை அழைத்துக்கொண்டு வருவது, பிறகு முடிந்தால் மால்வணிலேயே தங்கி, வேறு வேலையைப் பார்ப்பது, இல்லையேல் பம்பாய்க்குச் சென்று திவாகரைச் சந்திப்பது என்று அவன் மனத்துக்குள் நிச்சயம் செய்து கொண்டான்.

மோத்திராமின் விஷமப் பார்வையிலிருந்து தப்புவதற்கு அது ஒன்றுதான் வழி என்று அவன் எண்ணினான். அப்பொழுது அவனுக்குச் சுசீலாவின் நினைவு வந்தது. சுசீலா போன்ற பத்தினிக்கு மோத்திராம் சேட் துரோகம் செய்வாரா என்று அவன் தன்னையே கேட்டுக்கொண்டான். சுசீலாவின் உருவம் அவனுடைய மனக்கண்முன் தோன்றியபோது, அப்படி நடப்பது சாத்தியம் அல்ல என்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் மோத்திராமை நினைவு படுத்திக்கொண்டபோது, அப்படி ஏன் நடக்கக்கூடாது என்று அவனுடைய மனம் வினவியது.

## 13

## அலங்காரக் கொண்டை

மறுநாள் காலையில் யசோதை துயிலிலிருந்து கண் விழித்தபோது, முந்திய நாள் நடந்த சம்பவந்தான் அவளுடைய கண்முன் நின்றது. அந்த அசம்பாவிதச் சம்பவம் இன்னமும் நடந்துகொண் டிருப்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று.

தன்னை மோத்திராம் சேட் மானபங்கம் செய்ய முயன்றதைக் கண்டு அவள் வெகுண்டிருந்தாள். ஆனாலும் அவரை வெறுக்கும் அளவுக்கு அவள் வந்து விடவில்லை. மோத்திராம் சேட்டிடம் அவளுக்கு மரி யாதை ஏற்படவில்லையானாலும், ஒருவித நன்றி உணர்ச்சி ஏற்பட வேண்டுமே; அதுவும் உண்டாக வில்லை.

அதற்கு மாருக அவரிடம் அவளுக்குச் சிறிது இரக்கந்தான் பிறந்தது. "அப்படி ஏன் நேர வேண்டும்?" என்று அவள் வெகு நேரம் சிந்தித்துக்கொண் டிருந்தாள். அந்தச் சம்பவம் நடந்தபோதும், அதற்குப் பிறகும், நீண்ட நேரம் வரையில் அவளுடைய சினம் தலைக்கேறி இருந்தது. ஆனால் அது வெகு நேரம் நிலைக் காமல் கொஞ்சம் கொஞ்சமாக இறங்கி வந்தது. அதைக் கண்டபோதுதான் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

'பெண் இனத்துக்கே மன்னிக்கும் தன்மை உண்டு. ஆகையால்தான் மோத்திராம் சேட்டிடம் நான் வெறுப்புக்கொள்ள முடியவில்லை; தூஷிக்கவும் முடிய வில்லை' என்று அவளுடைய மனம் சமாதானம் சொல் லிற்று.

ஆகவே அந்தச் சம்பவத்தை - மோத்திராம்

சேட்டின் காமச்செயலை - மறந்துவிடுவது, அதைப் பற்றி யாரிடமும் சொல்லாமல் மனத்திலேயே புதைத்து விடுவது என்று அவள் தீர்மானித்துவிட்டாள்.

இதனால் அவள் மோத்திராமை மன்னித்துவிட்டாள். ஆனால் அதே சமயம், இந்த ஊரை விட்டு வேறு எங்கேனும் சென்றுவிடுவது என்றும் நிச்சயித்தாள்.

ஆயினும் அந்தச் சம்பவத்தை அவளால் எளிதில் மறக்க முடியவில்லை. அன்று முழுவதும் அந்தக் காட்சி அவளது மனத்திரையில் ஓடிக்கொண் டிருந்தது. மனம் ஒன்றிலும் லயிக்காமல், அன்றைய வேலைகளை அவள் ஒரு தினுசாகச் செய்து முடித்தாள்.

யசோதை அன்று மாதர் சங்கத்துக்குச் செல்லவில்லை. ஏன் வரவில்லை என்பதை அறிந்துபோகச் சுசீலா வருவாள் என்று அவள் எதிர்பார்த்தாள். ஆனால் அவளுக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. சுசீலா தானும் வரவில்லை; ஆளையும் அனுப்பவில்லை. இதைக் கவனித்தபோது யசோதைக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஆகையால் அவள் சுசீலாவைப்பற்றியும் சிந்திக்கத் தொடங்கினாள்.

அன்று மாலையில் வாசற்படியில் உட்கார்ந்து அவள் சுசீலாவையும் மோத்திராமையும்பற்றி எண்ணிக் கொண்டிருந்தாள். அப்பொழுது தன்னையும் சுசீலாவையும் மனத்தராசில் எடைபோட்டுப் பார்த்தாள். ஒரு சமயம் அந்தக் கற்பனை இன்பமாகவும் மறு சமயம் துன்பமாகவும் இருந்தது. ஆகவே அவள் அந்தச் சிந்தனைக்கும் கற்பனைக்கும் சீக்கிரமே முற்றுப் புள்ளி வைத்தாள்.

அப்பொழுது மாலை நேரம். சூரியன் அஸ்தமிப்பதற்குச் சில நிமிஷங்கள் இருந்தன. மரங்களின் நிழல்கள் நீண்டிருந்தன. யசோதையின் வீடு மேற்கு நோக்கி இருந்ததால் வாசற்படியில் மஞ்சள் வெயில் பட்டு,

முன் பாகத்தைப் பொன்னிற மாக்கிக்கொண் டிருந்தது. அருகில் இருந்த அரசமரம், இலைகளும் பூக்களும் நிறைந்து காணப்பட்டது. அப்பொழுது சித்திரை மாதமாகையால், நடுநடுவே பழுத்த மாங்கனியின் நறுமணம் வீசிக்கொண் டிருந்தது.

அரச மரத்தின்மேல் உட்கார்ந்து மைனு ஒன்று கூவிக்கொண் டிருந்தது, யசோதையின் செவிகளில் விழுந்தது. அப்பொழுது அவளுடைய கவனம் தற் செயலாக அருகில் இருந்த கோழியிடம் சென்றது.

ஒரு கோழிக்குப் பின்னுல் இரண்டு சேவல்கள் சென்றுகொண் டிருந்தன.

ஒரு சேவல் அந்தக் கோழியைச் சுற்றிச் சுற்றி வந்து நடனமாடிக்கொண் டிருந்தது. அதைக் கண்டு பொருமை கொண்ட இரண்டாவது சேவல் முதல் சேவலைத் தன் அலகால் கொத்திற்று.

தன் காதலுக்கு இடையூறு ஏற்பட்டதைக் கண்டு பொறுக்காமல் முதல் சேவல் வெகுண்டு, இரண்டாவது சேவலைக் கொத்திக் கொத்தித் துரத்திக்கொண்டே சென்றது. பிறகு திரும்பி வந்து, தன் காதலியுடன் நடனமாடத் தொடங்கியது.

ஓடிப்போன இரண்டாவது சேவல் தன் கொண் டையை ஒரு தடவை அசைத்து விட்டுக்கொண்டது. சாயங்காலச் சூரியனின் செந்நிறக் கிரணங்கள் பட்டு அந்தச் சிவப்புக் கொண்டை மின்னியது. சேவல் தன் கழுத்தை உயரத் தூக்கி, நிமிர்ந்த மார்புடன் முதல் சேவலிடம் வந்தது.

அதனுடைய அலங்காரக் கொண்டையைக் கோழி பரிதாபத்துடன் நோக்கிக்கொண் டிருந்தது.

சிறிது நேரத்தில் அந்த இரண்டு சேவல்களுக் கிடையில் மீண்டும் சண்டை தொடங்கிற்று. கோழி ஒரு பக்கமாக ஒதுங்கி நின்று, சண்டையைக் கவனித்துக் கொண்டே இருந்தது.

இரண்டாவது அலங்காரச் சேவல் முதல் சேவலைக் கொத்திக் கொத்தி ரத்த வெள்ளத்தில் ஆழ்த்தியது. அடிபட்ட முதல் சேவல் தோல்வியுற்று ஓட்டம் பிடித்தது. இரண்டாவது சேவல் அதைக் கொஞ்ச தூரம் துரத்திக்கொண்டே சென்றது. அது இனிமேல் தன் வழிக்கு வராது என்று நிச்சயமாகத் தெரிந்ததும், இரண்டாவது சேவல் கம்பீரமாகத் திரும்பி வந்தது.

வெற்றி பெற்ற சேவலை வரவேற்கக் கோழி முன்னால் ஓடி வந்தது. இரண்டாவது சேவல் மீண்டும் அதைச் சுற்றிச் சுற்றி நடனம் புரிந்தது. பிறகு இரண்டுமாகப் புறப்பட்டுச் சென்றன; அருகில் இருந்த வைக்கோல் போருக்குப் பின்னால் சென்று மறைந்தன.

இந்தக் காட்சியை யசோதை மிக்க ஊக்கத்துடனும் சிரத்தையுடனும் கவனித்துக்கொண் டிருந்தாள். இரண்டாவது சேவலுடன் கோழி ஒய்யாரமாகச் சென்றபோது அவள் நீண்ட பெருமூச்சு விட்டாள்.

இப்பொழுது அவளுடைய மனம் சலன முற்றது. அவள் திடீரென்று எழுந்து நின்றாள். உள்ளத்தில் பெரும் போராட்டம் நடந்துகொண் டிருந்தது. ஆகவே அவள் இங்கும் அங்குமாக நடை போடத் தலைப்பட்டாள்.

'மோத்திராம் சேட்டைக் கண்டபடி பேசி அவமானப்படுத்தி அனுப்பும்படியாக அவர் எனக்கு என்ன தீங்கு இழைத்துவிட்டார்? என்னைப்போன்ற ரூபவதியைக் கண்டு மயங்கினார் என்றால், அது அவருடைய குற்றமா? இத்தகைய அழகி வறுமையில் அல்லற்படாமல் செல்வத்தில் கொழிக்கவேண்டும் என்று அவர் நினைத்ததில் என்ன தவறு இருக்கிறது? அந்தப் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொள்ள முன் வந்தது அவருடைய பெருந்தன்மையை அல்லவா காட்டுகிறது? இத்தகைய பண்புடையவர், ரசிகர், சீமான், நேசமுள்ள வாலிபரைப் புறக்கணித்த நான் எத்தனை பெரிய முட்டாள்! அபாக்கியசாலியான என் வீட்டுக்குக் காமதேனு வந்தது; அதை நான் முட்டாள்தனமாக அடித்து விரட்டிவிட்டேன்.

கேவலம் பிராணிகளுக்குக்கூடத் தெரிந்திருக்கிறது, இன்ப வாழ்க்கை என்ன என்பது. ஆனால் எனக்கோ..?

'ஆனந்தன்: ஆமாம். அவர் என் பதிதான். ஆனால் பத்தினியின் இச்சைகளைப் பூர்த்தி செய்யும் - அதுவும் என்னைப்போன்ற அழகே உருவான பத்தினியின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் - திறமை அவருக்கு இருக்கிறதா? அவருடைய வறுமை என்னும் அக்கினியில் நான் ஏன் என் பருவத்தைப் பொசுக்கிக்கொள்ள வேண்டும்? இன்பத்தை அடையாமல் இன்னல்களை ஏன் அநுபவிக்க வேண்டும்? என் சுந்தர ரூபம், என் ஆவல்கள் இவற்றுக்கு மதிப்பே இல்லையா? இதையெல்லாம் யோசிக்காமலே நான் மோத்திராமிடம் மட்த்தனமாக நடந்து கொண்டு விட்டேன்.' - அவளுடைய மனம் பொங்கிக் கொதிக்க ஆரம்பித்தது.

யசோதையின் உடல் புல்லரித்தது. 'உண்மையில் நான் அவருக்குத் துராக்கிருதம் செய்துவிட்டேனா? எனக்கும் ஆனந்தனுக்கும் உள்ள உறவு காரணமாக அது துராக்கிருதம் ஆகாது. ஆனால், தெரிந்தோ தெரியாமலோ அநியாயம் நேர்ந்துவிட்டது. அந்தத் தப்புக்கு நான் எப்படிப் பிராயச்சித்தம் தேடுவேன்?' என்று ஓயாமல் தன் மனத்தை அலட்டிக்கொண்டாள்.

'மோத்திராமின் மனத்தை நம்மிடம் இழுக்கும் வகையில் இனி நடந்துகொள்ள வேண்டும். அவரிடம் மன்னிப்புக் கோர வேண்டும். பின்னால் எது நேர்ந்தாலும் நேரட்டும்; எனக்குக் கவலை இல்லை. என்னால் என் மனத்தைக் கொல்ல முடியாது. இன்றோ நாளைக்கோ எப்பொழுது மோத்திராம் வந்தாலும் அவருடைய விருப்பத்துக்கு இணங்க வேண்டியது' என்று அவள் தீர்மானித்துவிட்டாள்.

நேற்றைப்போல் இன்றைக்கும் மோத்திராம் சேட் அந்தி மங்கும் வேளையில் தன் வீட்டுக்கு வருவார் என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆகையால் அவரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். கொஞ்சங் கொஞ்சமாக

இருள் பரவிக்கொண்டே வந்தது. வெகு தூரத்தில் யாரோ வருவதுபோல் இருந்தது. அது மோத்திராம் சேட்டாகத்தான் இருக்கவேண்டுமென்று அவளுக்குத் தோன்றிற்று. 'அவர் வந்துவிட்டார்' என்ற ஆனந்தத்தில் அவள் புளகம் பூத்து நின்ருள். மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. உடனே அவள் உள்ளே ஓடிஞள். கண்ணுடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டு களுக்கென்று ஒரு தடவை சிரித்தாள். பிறகு தன் கேசத்தை வாரிவிட்டுக்கொண்டாள். கதுப்பேறிய கன்னங்களில் லேசாகப் பௌடரைப் பூசிக்கொண்டாள். இதற்குள் வாசற்படியில் செருப்புச் சத்தம் கேட்கவே அவரை வரவேற்பதற்காக ஓடோடி வந்தாள். ஓடோடி வந்தவள் சித்தம் கலங்கிச் சிலைபோல் நின்ருள். ஏனென்ருல் அங்கே மோத்திராம் சேட்டுக்குப் பதிலாக ஆனந்தன் நின்றுகொண் டிருந்தான்.

வழக்கம்போல் ஆனந்தன், ''யசோதா'' என்று கூப்பிடவில்லை.

யசோதை தன் மனநிலையைச் சமாளித்துக்கொண்டு அவனைப் பார்த்துச் சிரித்தாள். ஆனுல் ஆனந்தனின் முகம் அப்போதும் மலரவில்லை. ஆகையால் இருவருக்கும் மகிழ்ச்சி ஏற்படவில்லை. பூனை மாத்திரம் அவனை வளைய வளைய வந்தது. உடனே ஆனந்தன் அதைத் தூக்கித் தன் மார்போடு அணைத்துக்கொண்டான். அப்பொழுது யசோதை, தன்மீதுள்ள பிரேமையைத்தான் அவன் அப்படி வெளிப்படுத்துகிருன் என்று நினைத்துக்கொண்டாள்.

பிறகு ஆனந்தன் கைகால்களை அலம்பிக்கொண்டு வந்து பெஞ்சியின்மேல் உட்கார்ந்தான். அப்போதும் யசோதை சிரித்துப் பேசி, அவனை மகிழவைக்கப் பார்த்தாள். சிறிது நேரத்துக்குப் பின் ஆனந்தனும் அவளிடம் சகஜமாகப் பேசத் தொடங்கிஞன்.

யசோதை அவனிடம் எல்லா விவரங்களையும் விசாரித்தாள். அவனும் அவளுக்குப் பதில் அளித்துக்

கொண்டே வந்தான். அவர்களுடைய சம்பாஷணை வெகு சிநேக பாவத்துடன் நடந்துகொண் டிருந்தது. இப்பொழுது என்னவோ அவளுக்குப் பாசம் அடித்துக் கொண்டது. 'ஆனந்தனுடைய மனத்தைப் புண்படுத்தி விட்டு நான் சுகமாக இருக்க முடியாது. அவரை எப்பொழுதும் இன்பமாகத்தான் வைக்கவேண்டும்' என்று அவள் எண்ணிக்கொண்டாள்.

உடனே தன் சஞ்சலமடைந்த மனத்தை ஒரு நிலைக்குக் கொண்டுவந்தாள்.

ஆனந்தனுக்கும் நிம்மதி ஏற்பட்டது. 'யசோதை அப்படி நடந்துகொண் டிருந்தால், இப்படி இன்பமாக என்னுடன் பேசுவாளா? என் யசோதை எத்தனையோ நல்லவள்! என் விஷயத்தில் திவாகருக்கு ஏதாவது வயிற்றெரிச்சல் இருக்க வேண்டும்; அல்லது அவன் வேண்டுமென்றே அயோக்கியத்தனம் செய்திருக்க வேண்டும். யசோதையின் களங்கமற்ற முகத்தைப் பார்த்தாலே அவள் பவித்திரமானவள் என்று தெரிகிறதே.'

திவாகர் போக்கிரித்தனம் செய்திருக்க வேண்டும் என்ற எண்ணந்தான் ஆனந்தனுக்கு ஏற்பட்டது. 'நான் அவனுடைய பிழைப்பைக் கெடுத்துவிட்டதாக அவன் நினைத்துக்கொண் டிருக்கிறான். இந்த ஊரை விட்டு நான் போவதற்காக அவன் மேற்கொண்ட யுக்தி இது' என்று ஆனந்தன் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்.

யசோதையை வீணாகச் சந்தேகித்தோமே என்று எண்ணி நாணினான். உடனே தன் மனத்துக்குள்ளேயே யசோதையிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்.

அன்றிரவு ஆனந்தன் நிம்மதியாகவே உறங்கினான். ஆனால் யசோதை மட்டும் சஞ்சலப்பட்டுக்கொண் டிருந்தாள். மீண்டும் அவள் ஆனந்தனையும் மோத்திராமையும் மனத்தில் எடைபோட்டுப் பார்த்தாள். ஆனந்தன்

இருந்த தட்டு மேல் நோக்கிச் சென்றது. ஆகவே அவளுடைய மனம் மோத்திராமை நாடிச் சென்றது. அன்று கனவில் அவள் மோத்திராமின் பங்களாவில் வசித்து வந்தாள். அவருடைய மோட்டாரில் உலாவச் சென்ருள். அவருடைய ஆருயிர்க்காதலி ஆகி ஆனந்தமாகக் காலங் கழித்து வந்தாள். தூக்கத்தில் ஆனந்தனின் கை அவள்மேல் பட்டது. உடனே அவள் திடுக்கிட்டு எழுந்தாள். அவளுடைய ஆசைக் கனவும் முறிந்தது.

## 14

# சேவகம் வேண்டாம்

''திவாகர், அநாவசியமாக அக்கிரமம் செய்யாதீர்கள். மரியாதையாக உங்கள் வேலையைச் செய்துவிட்டு ஊர் போய்ச் சேருங்கள். என் பங்களா கட்டி முடியாவிட்டாலும் பாதகம் இல்லை. நான் அந்த வேலையை ஆனந்தன் மூலமாகச் செய்துகொள்கிறேன்'' என்று சுசீலா கடுமையாகச் சொன்னாள்.

''சுசீலா, என்னைவிட அந்த அற்பன் ஆனந்தனிடம் உனக்கு இத்தனை கவர்ச்சியா?'' என்று கேட்டான் திவாகர்.

''சீ, வாயை மூடு. ஏதாவது அநாவசியமாகப் பேசினாயோ உன் பற்களைத் தட்டிவிடுவேன்'' என்று சீறினாள் சுசீலா.

திவாகர் சிறிது அஞ்சினான். ஆகவே அவளைச் சமாதானப்படுத்துவது போல், ''அப்படி அல்ல, சுசீலா. நான் ஒன்றும் மாறாகப் பேசவில்லை. பேச்சுவாக்கில் வாய் தவறி வந்துவிட்டது. என்னை மன்னித்துவிடு'' என்றான்.

சுசீலா மௌனமாக இருந்தாள்.

''ஆனால் அந்த மோத்திராமிடம் என்னைவிட என்ன சிறப்பைக் கண்டுவிட்டாய்? என்னை மோசம் செய்துவிட்டு அவனை மணந்துகொண்டாய் அல்லவா? அது ஏன்? நாம் கல்லூரியில் படித்துக்கொண் டிருந்த காலத்தில் நீதானே என்னிடம் வலுவில் வந்துகொண் டிருந்தாய்? ஒரு நாள் நான் உன்னை முத்தமிட்டபோதுகூட நீ அதை ஆட்சேபிக்கவில்லையே. அதெல்லாம் உனக்கு இப்பொழுது மறந்து போய்விட்டதா?''

''கல்லூரியில் நடந்தவை கல்லூரியோடு போய் விட்டன. அதற்கு இங்கே என்ன சம்பந்தம்? அந்த

மாதிரியான சம்பவங்கள் இங்கே மீண்டும் நடப்பதற்கு நான் இடம் தருவேன் என்று நினைத்திராவில், நிச்சயம் ஏமாந்துபோவீர். உங்களை நான் மோசம் செய்யவில்லை. அதற்கு மாருக நீங்கள் என்னை மோசம் செய்ய இருந்ததை நான் சாமர்த்தியமாகத் தடுத்துவிட்டேன். என்ன, தெரிந்ததா?'' என்று சுசீலா அமைதியாகப் பதிலளித்தாள்.

''உன்னை நான் மோசம் செய்தேனு? அது எப்படி?''

''எப்படியா? மறந்து போனீர்களா என்ன? ஆரம்பத்தில் உங்கள் காதல் தூய்மையானது என்று நான் எண்ணியிருந்தேன். ஆனல் அநுபவம் மட்டும் வேறு விதமாக இருந்தது. உங்களுக்கு என்னைவிட என் வனப்பான உடல்தான் தேவையாக இருந்தது. அப்படி இல்லாமல் இருந்தால் நீங்கள் கண்ட கண்ட பெண்களை நாடிச் சென்றிருக்க மாட்டீர்கள். மிஸ் ஷிரீன் பாட்லிவாலாவின் தகராறில் மாட்டிக்கொண்டு கல்லூரியை விட்டு ஓட வேண்டி இருந்திருக்காது....''

''ஆமாம், கல்லூரிக்குத் தலைமுழுகினதனுல்தான் கராச்சிக்குச் சென்று எஞ்ஜினீயர் ஆக முடிந்தது'' என்ருன் திவாகர்.

''அன்று முதல் எனக்கு உங்கள்மேல் கோபம்.''

''அதனுல்தான் என் ஒரு கடிதத்துக்குக்கூட நீ பதிலே போடவில்லை; அல்லவா? மோத்திராமின் செல்வத்தைக் கண்டு நீ மயங்கிவிட்டாய் என்று நான் நினைக்கிறேன். ஆகையால்தான் அந்தக் கொங்கணத்துக் காளை உன் மனத்துக்குப் பிடித்தது....''

''திவாகர், நாவை அடக்கிப் பேசு. இல்லையேல் இங்கிருந்து வெளியேறு. அவருடைய காலில் உள்ள காதறுந்த செருப்புக்கு இருக்கும் யோக்கியதைகூட உனக்கு இல்லை.''

''பேஷ், பேஷ்! படிப்பற்ற படுமுட்டாளைப் பாவையைப்போல் ஆட்டிவைக்க முடிகிறது என்ரு, அல்லது விலையுயர்ந்த மோட்டாரில் சொகுசாகச் சவாரி

செய்யக் ' கிடைக்கிறது என்று, அல்லது புதுப் புதுப் பங்களாவைக் கட்ட முடிகிறது என்று, அல்லது பெண் டாட்டிக்குப் பயந்து பெட்டிப் பாம்பாகக் கிடக்கிறன் என்று, அந்தக் காளேயை நீ கட்டிக்கொண்டாய்? பணத் தைத் தவிர அவனிடம் என்ன கவர்ச்சியைக் கண்டாய் நீ?''

''சீ, மானங் கெட்ட ஜன்மமே! நான் உனக்கு எத்தனை தடவை சொல்வது, உன் அபத்த வாயை மூடு என்று? இங்கிருந்து மரியாதையாக நீ போக மாட் டாய்! மானம் இழந்துதான் போகப்போகிறய். நான் உன்னே அன்றைக்கே விரட்டி இருக்கவேண்டும். ஆனுல் 'போகட்டும்' என்று பொறுத்துக்கொண்டேன். வயிற்றைக் கழுவ வந்தவனுடைய வயிற்றில் அடிப்பது பாவம் என்று உனக்குக் கருணை காட்டினேன். அதற்குக் கைம்மாறு இது. நீதான் பங்களாக் கட்ட வரப் போகிறய் என்று எனக்கு ஏற்கனவே தெரிந்திருந்தால், உன்னே நான் வீட்டில் நுழையவே விட்டிருக்க மாட் டேன்.''

இதைக் கேட்ட திவாகர் வாயடைத்து நின்றன். சுசீலா இத்தனை தூரம் பேசுவாள், ஏசுவாள் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. தன் பயமுறுத்தலைக் கண்டு தனக்கு மசிந்துவிடுவாள் என்று அவன் நினைத் தான். தவிர, மோத்திராம் போன்ற பண்பற்ற பட்டிக் காட்டுக் கணவனை மணந்து அவள் வாழ்க்கையில் வெறுப்புற்றிருப்பாள்; ஆகவே தன்னைப்போன்ற நாக ரிக வாலிபனுடன் இன்பமாக இருக்க விரும்புவாள் என்று தான் நினைத்தது எவ்வளவு தவறு என்பதை அவன் இப்பொழுது உணர்ந்துகொண்டு விட்டான்.

* * *

பம்பாயிலுள்ள ஜேவியர் கல்லூரியில்தான் அந்த இருவரும் முதல் முதலில் சந்தித்தனர்.

திவாகர் கணிதத்தில் கெட்டிக்காரன். சுசீலாவுக்கு

ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் அவள் சகஜமாக அவனிடம் சென்று அவற்றைப் போக்கிக்கொள்வது வழக்கம்.

ஓர் இளமங்கை, அதுவும் அழகில் திளைத்த பருவமங்கை, தன் நோட்டுப் புத்தகத்தை வாங்க அடிக்கடி வருவது திவாகருக்குப் பெருமையாக இருந்தது. அதே சமயம், 'நாம் அவளுக்கு உதவி செய்கிறோம்; ஆகையால் அவள் நமக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டவள்' என்ற எண்ணம் அவனுடைய மனத்தில் வேரூன்றத் தொடங்கியது.

இந்த எண்ணம் காரணமாக, அவள் கேட்காமல் இருந்தபோதுகூட அவன் அவளுக்குப் பலவித உதவிகள் செய்யத் தலைப்பட்டான். அவனுடைய இந்த நடத்தையை அவள் சகஜமாகக் கருதினாள். 'திவாகர் எவ்வளவு நல்லவர்!' என்று அந்தப் பேதை பெருமிதம் கொண்டாள்.

நாலைந்து மாதங்கள் வரையில் அவர்களுடைய நட்பு வெகு சௌஜன்யமாக வளர்ந்து வந்தது. இடையில் சுசீலா, அந்த 'நல்லவனை'த் தன் மற்றத் தோழிகளுக்கும் அறிமுகம் செய்துவைத்தாள். அந்தத் தோழிகளில் மிஸ் ஷிரீன் பாட்லிவாலா என்னும் பார்ஸிப் பெண் இருந்தாள். செக்கச்செவேலென்று சிவந்த மேனியும், அழகிய வதனமும் பெற்றிருந்த அந்தப் பைங்கிளிக்குப் பருவமும் மெருகூட்டியது. அது போதாதென்று, அவள் அணிந்துவந்த உடலை ஒட்டிய மேலங்கியும், அவளது உருண்டுதிரண்ட அங்க அமைப்புக்களை எடுத்துக் காட்டிற்று. சுருங்கக் கூறினால் அவளைக் கண்டவர்கள் வைத்த கண்ணை வாங்கமாட்டார்கள். அவ்வளவு கவர்ச்சி கொண்டிருந்தாள் அவள்! அவளுடைய கவர்ச்சிக்குத் திவாகர் பலியானதில் என்ன ஆச்சரியம்? ஆகவே அவன் மிஸ் பாட்லிவாலாவுடன் நெருங்கிப் பழகி வந்தான். அவர்களுடைய ஆழ்ந்த நட்பைப்பற்றிச் சுசீலா வித்தியாசமாக நினைக்கவில்லை.

ஒரு நாள் திவாகர் சுசீலாவிடம் தன் காதலை

வெளியிட்டான். அதற்கு அவள் ஒன்றுமே பதில் அளிக்க வில்லை. அவன் கேட்டது அவளுக்குப் பிடிக்கவில்லை என்பது அல்ல; அவள் அதைப்பற்றி நினைக்கக்கூட இல்லை. ஆனால் திவாகர் அவளுடைய மௌனத்தை, 'சம்மதம்' என்பதற்கு அறிகுறியாகக் கொண்டான். அவள் நேரில் சொல்ல வெட்கப்படுகிறாள் என்று நினைத்து, சுசீலாவுக்குக் காதற் கடிதங்கள் எழுதத் தொடங்கினான்.

இந்தத் தொந்தரவைப் பொறுக்க முடியாமல் சுசீலா ஒரு நாள் அவனை நோக்கி, "திவாகர், கல்லூரிக்கு நாம் கற்பதற்காக வந்திருக்கிறோம்; காதற் கடிதங்களை எழுதுவதற்காக அல்ல. நமக்குக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று எப்பொழுது தோன்றுகிறதோ, அப்பொழுது அதைப்பற்றி நினைப்போம். அதுவரையில் படிப்பை மட்டும் கவனிப்போம்" என்று அமைதியாகக் கூறினாள்.

சுசீலாவின் உபதேசம் திவாகருக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

"என்ன சுசீலா, குழந்தையைப்போலப் பேசுகிறாயே! காதல் என்றால், குறிப்பிட்ட காலத்தில்தான் செய்யவேண்டும் என்று எந்தச் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது? காதலுக்குக் காலம், நேரம், சாதி, மதம் என்று ஒன்றுமே இல்லை. நான் நான்காவது பாரத்தில் படித்துக்கொண்டிருந்தபோதுகூட ஒரு பெண்ணைக் காதலித்தேன்" என்றான் அவன்.

சுசீலா பிரமித்து அவனையே நோக்கிக்கொண்டிருந்தாள்.

திவாகர் தொடர்ந்து சொன்னான்: "ஆனால் அந்தப் பெண்ணின் தந்தைக்கு வேறோர் ஊருக்கு மாற்றுதல் ஆகிவிட்டதால் எங்கள் காதலுக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டியதாயிற்று."

"அதுபோலவே இந்தக் காதலுக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிடுங்கள்" என்று சுசீலா கடுமையான குரலில் பதிலளித்தாள்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு திவாகர் இதே பித்துப் பிடித்து அலைந்தபோது, சுசீலாவுக்கு அவனிடம் இருந்த அன்பும் மரியாதையும் பறந்துபோயின.

இடையில் ஒரு நாள் ஷிரீன் பாட்லிவாலா திவாகரின் நடத்தையைப்பற்றிப் பிரின்சிபாலிடம் புகார் செய்தாள். அன்று முதல் சுசீலா திவாகரை முற்றும் வெறுக்கத் தொடங்கினாள்.

திவாகரின் காதல் லீலைகளுக்கு எந்தக் கல்லூரிதான் ஆதரவளிக்கும்? எந்தப் பிரின்சிபால்தாம் பொறுத்துக் கொள்வார்? ஆகவே இந்தப் பிரின்சிபாலும் அவனைக் கல்லூரியில் அநுமதிக்கவே மறுத்துவிட்டார். மறுநாளே அவன் கராச்சியில் இருந்த தன் சிற்றப்பனிடம் சென்றுவிட்டான். அங்கிருந்தும் சுசீலாவுக்குக் கடிதங்கள் எழுதினான். ஆனால் சுசீலா ஒன்றுக்கும் பதிலே போடவில்லை.

இந்த முழுச் சம்பவமும் அவளுடைய மனத்திரையிலே ஓடிக்கொண்டிருந்தது.

* * *

ராமபாணம் போன்ற சுசீலாவின் சுடுசொற்கள் திவாகருடைய உள்ளத்தை ஊடுருவிச் சென்றன. அவன் சட்டென்று நாற்காலியை விட்டு எழுந்தான். தன் துணிமணிகளை அவசர அவசரமாகப் பெட்டியில் திணித்தான். பிறகு பெட்டியை மூடிக் கையில் எடுத்துக் கொண்டு மின்னல் வேகத்தில் வீட்டைவிட்டு வெளியேறினான்.

வெளியில் ஒரே மையிருட்டு. இதுவரையில் மறைவாக நின்று அவர்களுடைய சம்பாஷணைகளைக் கேட்டுக் கொண்டே இருந்த மோத்திராமின் ரத்தம் கொதித்தது; சித்தம் கலங்கியது. அவனைப் பிடித்து நன்றாக உதைக்க வேண்டும் என்று உள்ளம் பதைபதைத்தது. ஆனால் மறுகணமே தம் மனத்தை அவர் கட்டுப்படுத்திக்கொண்டார்.

'அவனை ஒன்றும் செய்யாதே. நீயும் அவனுடைய வர்க்கத்தைச் சேர்ந்தவன்தான்; மணமான மாதைக் காதலிக்கத் துணிந்தவன். அவனைச் சீர்திருத்த உனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது?' என்று அவருடைய உள்ளம் சவுக்கடி கொடுத்தது.

திவாகர் சென்றதும் மோத்திராம் வீட்டில் நுழைந்தார். நேரே சுசீலாவின் அறையில் புகுந்தார். சுசீலா சோபாவில் அமர்ந்து ஜன்னல் வழியாக எங்கோ பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் மோத்திராமின் காலடிச் சத்தம் கேட்டதும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். மோத்திராம் அவளை அன்பு கனியப் பார்த்துவிட்டு உள்ளே சென்றார். அவருடைய பார்வையில் இருந்த அந்த ஆழ்ந்த அன்பை அவள் இதுவரையில் கண்டதில்லை. ஆகையால் அவளுக்குச் சிறிது பீதிகூட ஏற்பட்டது.

இதற்குள் மோத்திராம் திரும்பி வந்தார். அவளருகில் சோபாவில் உட்கார்ந்தார். ''சுசீலா'' என்று பிரியத்துடன் அழைத்தார்.

அந்த அழைப்பில் இருந்த அளவு கடந்த பிரேமை, சுசீலாவின் உள்ளத்தையே தொட்டுவிட்டது. மோத்திராம் அவளுடைய தோள்களைப்பற்றி, அவளைத் தம் மார்புடன் அணைத்துக்கொண்டார். பிறகு அவளுடைய முதுகை மிகுந்த பரிவுடன் தடவிக் கொடுத்தார்.

''சுசீலா, நீ எத்தனையோ உயர்ந்தவள். நான் புண்ணியம் செய்திருப்பதனுல்தான் நீ எனக்குக் கிடைத்திருக்கிருய்'' என்ருர் உணர்ச்சிப் பெருக்கால்.

சுசீலா பதிலே பேசவில்லை. அவளால் பேச முடியவில்லை. அவள் மோத்திராமின் மடியில் தலை வைத்துப் படுத்துக்கொண்டாள்.

அன்றிரவு மோத்திராமின் மனம் ஒரு நிலையில் இல்லை. சுசீலா தம்மீது கொண்டுள்ள எல்லையற்ற பிரேமையை, அவள் திவாகருடன் பேசிக்கொண்டிருந்த போது, மோத்திராம் நன்ருக அறிந்துவிட்டார். அந்த

அளவு கடந்த ஆனந்தத்தால்தான் அவருக்குத் தூக்கமே வரவில்லே. அந்தப் பேச்சிலிருந்து திவாகர் எப்படிப் பட்ட அதமன் என்பது அவருக்குத் தெரியவந்தது. கூடவே, சுசீலா எத்தகைய குணவதி, பதிவிரதை என்பதையும் அவர் உணர்ந்துகொண்டார். அதே சமயம் அவருக்கு யசோதையின் நினைவு வந்தது. அவளும் அயலானே நிராகரித்துத் தன் தூய்மையை வெளிப் படுத்திக் கொண்டதைக் காண, மோத்திராமின் உள்ளம் அரிக்கத் தொடங்கியது. 'அவளுக்கு எவ்வளவு அக் கிரமம் செய்துவிட்டோம்! அயலாளிடம் அப்படிக் கேவலமாக நடந்துகொள்ள நமக்கு என்ன உரிமை இருக் கிறது?' என்று அவர் மனம் நொந்துபோனுர்.

அவருடைய மனக்கண்முன் அந்த இரு பெண்மணி களின் உருவங்களும் காட்சி அளித்தன. ஒருத்தி பரம ஏழை; மற்ருெருத்தி பணத்தில் கொழிப்பவள். ஆனுல் இருவருடைய சுபாவத்திலும் எவ்வளவு ஒற்றுமை! இரு வரும் தங்கள் தூய மனத்தைக் காக்கப் பெரும் பாடு பட்டனர். 'மகளிரே இப்படித்தானு? மானத்தைக் காக்க மனத்தைக்கூட மாய்த்துவிடுவார்களா?' என்று அவருக்கு ஒரே ஆச்சரியம்.

யசோதையின்மேல் மோத்திராமுக்கு இருந்த சினம் எப்பொழுதோ பறந்து போயிருந்தது. அந்த இடத்தில் இப்பொழுது மரியாதையும் பச்சாத்தாபமும் குடிபுகுந் தன. அவருடைய உள்ளம் கருணையால் நிரம்பிக் கிடந்தது.

'யசோதையை நான் செல்வச் சீமாட்டியாக்க விரும்பினேன் அல்லவா? என் பணச் செல்வத்தைவிட அவளுடைய குணச் செல்வந்தான் எவ்வளவோ மேலா னது என்பதை அவள் காட்டிவிட்டாள். மிருகமாக நடந்துகொண்ட என்னே மனிதனுக்கி, மோகம் என்னும் பனித் திரையை விலக்கி, நேர்மை என்னும் நல்வழியைக் காட்டினுள் அந்த உத்தமி. சுசீலாவும் என் கண்களே மூடியிருந்த அஞ்ஞான மூடுபனியை மறையச் செய்தாள்.

இல்லையேல் நான் அவளுக்கு எவ்வளவு பெரிய துரோகம் செய்திருப்பேன்! ஆனால் யசோதைக்கு நான் இழைக்க விருந்த அநீதிதான் கடவுளுக்குக்கூடப் பொறுக்காது. ஏழையான ஒரு மாதரசியின் விலை மதிக்க முடியாத கற்பை விலை கேட்டேன்; பணக் கொழுப்பால் அந்தப் பாமரக் குடும்பத்தில் தீ வைக்கவும் துணிந்துவிட்டேன். நான் பாவி, பரம சண்டாளன்! கடவுள் என்னை மன்னிப்பாரா?' என்று மோத்திராமின் உள்ளம் அனலில் விழுந்த புழுவைப்போல் துடித்துக்கொண் டிருந்தது. அவருடைய மனம் பாகாக உருகிவிட்டது. குற்றம் புரிந்தவரின் வாழ்க்கையில் நிம்மதி ஏது?

'இனி ஒருகாலும் யசோதையின் வழிக்குப் போவதில்லை. அவளிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். அவளை இன்பமாக வைக்க நம்மால் இயன்றமட்டும் முயற்சி செய்ய வேண்டும். ஆனந்தன் ஏழை. அவனுக்கு நல்ல வேலையைக் கொடுத்து, சம்பளத்தை உயர்த்திவிட்டால், யசோதையின் வாழ்க்கைத் தரம் தானே உயர்ந்துவிடும். எப்படியும் ஆனந்தன் மால்வனுக்குச் சென்றிருக்கிறான். அங்கேயே அவனுக்கு உயர்ந்த பதவியை அளித்துவிடுவோம். இப்படிச் செய்துவிட்டால் யசோதையின் வறுமை, தானே பறந்து போகும்' என்று அவர் முடிவு கட்டிவிட்டார்.

இதற்குப் பிறகுதான் அவரால் நிம்மதியாக உறங்க முடிந்தது.

மறுநாள் காலையில் அவர் முதல் காரியமாக ஆனந்தனின் வீட்டுக்குப் புறப்பட்டார். ஆனந்தன் வருவதற்கு முன்னால் யசோதையிடம் மன்னிப்புக் கோரும் உத்தேசத்துடன்தான் அவர் நடந்து சென்றார். ஆனால் பாதி வழியிலேயே அவர் திரும்பிவிட்டார். காரணம், அவருடைய மனக்கண்முன் யசோதையின் உக்கிர வடிவம் இன்னமும் தாண்டவம் ஆடிக் கொண் டிருந்தது.

இரண்டொரு நாட்களுக்குப்பின் ஆனந்தன் சேட்டின் வீட்டுக்கு வந்தான். ஆனந்தனைப் பார்த்ததும்

முதலில் மோத்திராம் திடுக்கிட்டார். ஆனால் அவனுடைய முகத்தில் இருந்த அமைதியைக் கண்டதும், யசோதை அவனிடம் ஒன்றுமே சொல்லவில்லை என்பதை ஊகித்துக்கொண்டார். ஆகையால், யசோதை தம்மை மன்னித்து, மானத்தைக் காப்பாற்றினாள் என்று நினைத்து, நீண்ட பெருமூச்செறிந்தார்.

பிறகு அவர் ஆனந்தனை நோக்கி, "ஆனந்தா, எப்பொழுது வந்தாய்? போன காரியம் என்ன ஆயிற்று?" என்று சாவதானமாகக் கேட்டார்.

ஆனந்தன் அங்கே நடந்தவற்றை எல்லாம் ஒன்று விடாமல் அவரிடம் கூறினான்.

"அப்பொழுது நீ இப்படிச் செய், ஆனந்தா. நீ அங்கேயே சென்றுவிடு. சரக்குப் படகைப் பழுது பார்க்கும் வேலையைக் கவனித்து வா. அது முடிந்துவிட்டால், உன்னையே அந்த ஆலைக்கு மேஸ்திரி ஆக்கிவிடுகிறேன். சுசீலா கூறிக்கொண்டிருந்தாள், சரக்கேற்றிச் செல்லும் நவீனப் படகொன்றைத் தயாரிக்கும் யோசனை உனக்கு இருக்கிறதென்று. அடுத்தாற்போல் அதை வேண்டுமானால் எடுத்துக்கொள்" என்றார் மோத்திராம் ஸேட்.

ஆனந்தன் மௌனமாக இருந்தான்.

அதைக் கண்டு மோத்திராம், "ஏண்டா, பேசாமல் நிற்கிறாய்? என்ன ஏதாவது சந்தேகமா? அல்லது சம்பளத்தைப்பற்றி யோசிக்கிறாயா? அந்தக் கவலை உனக்கு வேண்டாம். நீ கேட்ட தொகையை நான் கொடுக்கிறேன். என்ன, சரிதானே?" என்றார்.

"அதற்காக இல்லை, ஸேட். நான் இனிமேல் ஒருவரிடமும் வேலை செய்வதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன்."

"வேலை செய்யப்போவதில்லையா? வேலை செய்யாவிட்டால் சொந்தத்தில் தொழில் நடத்தப் போகிறாயா? என்ன தொழில் செய்யப் போகிறாய்? உனக்கு யார் முதல் தரப் போகிறார்கள்? ஆனந்தா, இந்த யோசனைகளை எல்

லாம் விட்டுத் தள்ளு. நான் சொல்வதைக் கேள். எல்லாம் உன் நன்மைக்காகத்தான் சொல்கிறேன். பேசாமல் நீ மால்வணுக்குச் சென்று புதிய சரக்குப் படகைக் கட்ட ஆரம்பி. லாபத்தில் உனக்குப் பங்கு தருகிறேன். என்ன, சம்மதந்தானே?''

இதற்கும் ஆனந்தன் பதிலளிக்கவில்லை.

''சரி, இப்பொழுது சொல்லவேண்டாம். நன்றாக யோசனை செய்து பிறகு எனக்குத் தெரிவித்தால் போதும்'' என்று சொல்லிவிட்டு மோத்திராம் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றார்.

அவர் சென்றதும் ஆனந்தனும் புறப்பட்டான்.

அதே சமயம் சுசீலா வெளியே வந்தாள். ''ஆனந்த்'' என்று அவனைக் கூப்பிட்டாள்.

ஆனந்தன் அங்கேயே நின்று திரும்பிப் பார்த்தான்.

''ஆனந்தராவ், எப்பொழுது வந்தீர்கள்?'' என்று அவள் கேட்டாள்.

''நேற்று வந்தேன்'' என்று பதில் அளித்துவிட்டு, சிறிது தயங்கி, ''சரி, நாளைக்கு வந்து சந்திக்கிறேன்'' என்று கூறிப் புறப்பட்டான்.

''மால்வண் போவதைப்பற்றி என்ன முடிவுக்கு வந்தீர்கள்? நீங்கள் அங்கே வேலை செய்வீர்களா அல்லவா? புதிய படகைக் கட்டும் உங்கள் கனவும் பலிக்கும்.''

''உண்மைதான். ஆனால் இனி யாரிடமும் கைகட்டிச் சேவகம் செய்வதில்லை என்று முடிவு செய்திருக்கிறேன்.''

''இதெல்லாம் என்ன ஆனந்தராவ்? இங்கே நீங்கள் செய்வது சேவகமா? நீங்கள் வேறல்ல, நாங்கள் வேறல்ல என்று நான் அன்றைக்கே சொல்லவில்லையா? அது போகட்டும். பணம் இல்லாவிட்டால் உங்கள் திட்டமெல்லாம் மட்டமாகிவிடாதா? அதையாவது நினைத்துப் பாருங்கள்.''

''நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான், அம்மா. ஆனால்....''

''ஆனால் என்ன? சொல்லுங்கள். உங்களுக்கு ஏதாவது சங்கடம் இருந்தால் அதையும் சொல்லிவிடுங்கள்.''

''அப்படி எனக்குச் சங்கடம் ஒன்றும் இல்லை. ஆனால்....''

''பார்த்தீர்களா? மறுபடியும் புதிர் போடுகிறீர்களே! கொஞ்சம் வெளிப்படையாகச் சொல்லுங்கள்.''

''இன்றைக்கு வேண்டாம். பிறகு என்றைக்காவது சொல்கிறேன்'' என்று சொல்லி ஆனந்தன் கிளம்பினான்.

சுசீலாவும் அவனுடனேயே சென்றாள்.

வெளி வாசலண்டை வந்ததும், அவள் மீண்டும் ஆனந்தனை நோக்கி, ''ஆனந்த், சொல்ல வேண்டியதை இப்பொழுதே சொல்லிவிடுங்கள். உங்களுக்கு ஏதாவது சங்கடம் இருந்தால் அதைத் தீர்த்து வைப்பது என் பொறுப்பு. நீங்கள் தயங்க வேண்டாம்'' என்றாள்.

ஆனந்தன் கணநேரம் சிந்தித்தான். பிறகு சொல்லி விடுவதென்று தீர்மானித்தான்.

''சுசீலாபாய், என்னை மன்னியுங்கள். மோத்திராம் சேட்டின் நடத்தை ஒழுங்காக இல்லை'' என்று கூறிவிட்டு, திவாகர் சொன்னதை எல்லாம் தெரிவித்தான்.

''இப்படிப்பட்ட நிலைமையில் நான் இங்கிருந்து செல்வதுதான் நல்லது அல்லவா?'' என்று அவன் சுசீலாவைக் கேட்டான்.

''ஆனந்தராவ், என்னிடம் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதல்லவா? திவாகர் சொன்னதில் ஒரு வார்த்தையைக்கூட நம்பாதீர்கள். அவனுக்கு ஆதிமுதலே உங்களைக் கண்டால் பிடிக்காது. ஆகையால் அவன் கட்டிவிட்ட கதையாக்கும் இது.''

''எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. அவனுடைய பேச்சில் எனக்கும் நம்பிக்கை இல்லை. ஆனால் அதே சமயம், நாம் எதற்காக விஷப் பரீட்சை செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது. ஆகையால் இந்த ஊரைவிட்டுப் போவதுதான் உத்தமம்.''

''இங்கிருந்து வேண்டுமானாலும் போங்கள். ஆனால் வேலையை மட்டும் விடாதீர்கள். உங்களுக்காக இல்லாவிட்டாலும் யசோதைக்காகவாவது நான் சொல்வதைக் கேளுங்கள்.''

''சரி அம்மா. உங்கள் சொல்படியே நான் நடக்கிறேன். ஆனால் இங்கே மட்டும் நான் இருக்க மாட்டேன்.''

''சரி.''

''நாளைக்கே கிளம்பிவிடப் போகிறேன்.''

''அம்....''

ஆனந்தன் புறப்பட்டான். சுசீலா வருத்தத்துடன் திரும்பி வீட்டுக்குள் சென்றாள்.

அவன் தன் இல்லத்துக்கு வந்தபோது யசோதை, வாசலில் நின்று எதிரே நோக்கிக்கொண் டிருந்தாள்.

தன் வரவைத்தான் அவள் எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறாள் என்று ஆனந்தன் நினைத்தான். ஆனால் அருகில் சென்றபோதுங்கூட, தன் கணவன் வந்தது அவளுக்குத் தெரியவில்லை. அவள் மெய்ம்மறந்து, உடலில் சலனமின்றி எங்கோ பார்த்துக்கொண் டிருந்தாள். அவளுடைய கண்களைச் சிந்தனை என்னும் பனித்திரை மூடி இருந்தது.

# 15

## கூண்டில் சிறுத்தை

ஆனந்தன் சற்றும் தயங்கவில்லை: மறுநாளே அவன் யசோதையுடன் மால்வனுக்குப் புறப்பட்டான்: யசோதை சொல்லொணுத வருத்தத்துடன் அவன் கூடவே சென்றுள். முதல் நாள் ஆனந்தன் மால்வனுக் குப் போவதைப்பற்றிப் பேச்சு எடுத்தபோது, அவள் மன அமைதியை இழந்தாள். அவளுக்குக் கணவன்மேல் கோபங் கோபமாக வந்தது. ஆனுலும் வேறு வழியின்றி அவனுடன் செல்லத்தான் வேண்டியிருந்தது.

மால்வனுக்கு அருகிலுள்ள ராஜ்கோட்டில் அவர் கள் தங்கள் ஜாகையை அமைத்துக்கொண்டார்கள். யசோதைக்குத் தேவ் பாக்கைவிட ராஜ்கோட் மிகவும் பிடித்திருந்தது. அங்கிருக்கும் பழைய கோட்டையில் உள்ள திறந்த வெளி, நாற்புறமும் சுத்தமான இடம், அருகில் பாறைகளின் வரிசை, அவற்றின்மீது நுரைத்துக் கொண்டு ஓயாமல் மோதும் கடல் அலைகள், மேற்குத் திசையிலிருந்து நிற்காமல் வீசும் மெல்லிய தென்றல் காற்று - இவையெல்லாம் அவளுடைய மனத்தைக் கொள்ளை கொண்டன.

ஆனந்தன் தங்கியிருந்த இடம் சாதாரண மண் குடிசைதான். ஆயினும் அதை யசோதை நன்ருக அலங் கரித்து, பார்ப்பவரின் உள்ளத்தைக் கவரும்படியாகச் செய்துவிட்டாள். இதைக் கண்ட ஆனந்தன் பெருமிதம் கொண்டு, ''யசோதை, உன் கை பட்டாலே மண் குடிசையும் பொன்குடிசை ஆகிவிடுகிறதே!'' என்று ஆச்சரியத்தால் கூறினுன்.

ஆனுல் அவனுடைய அன்பையும் பாராட்டுதலையும் ஏற்றுக்கொள்ளும் நிலையில் அப்பொழுது அவளுடைய

மனம் இருக்கவில்லை. ஆயினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அவள் லேசாகச் சிரித்தாள். அந்த நகைப்பில் இன்பமோ உல்லாசமோ இல்லாததைக் கண்டு ஆனந்தன் வியப்புற்ருன்.

ராஜ்கோட்டை அடைந்த தினமே யசோதை அந்த ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பிவிட்டாள். ஒவ்வோர் இடமாகப் பார்த்துக்கொண்டே அவள் கடைசியாக உயரமான ஒரு பாறையின் மேல் ஏறி உட்கார்ந்தாள். அந்தப் பாறையின் இரு மருங்கிலும் கடல் அலைகள் வந்து தாக்கிக்கொண் டிருந்தன. அப்படித் தாக்கியபோது நீர்த் திவலைகள் வெகு உயரம் எழும்பி அவள்துமீ தெறித்தன. அப்பொழுது அவள் பூரிப்படைந்தாள். இது அவளுக்குச் சொல்ல முடியாத இன்பத்தை அளித்தது. அந்த இன்பத்திலேயே அவள் திளைத்து நின்ருள்.

அந்த ஆனந்தம் மனத்தில் நிரம்பி, வெளியிலும் வழியத் தொடங்கியது. அவள் லேசாக ஒரு பாட்டை முணுமுணுக்கத் தொடங்கிஞள். ஆனந்த பரவசத்தில் அமுதமாகப் பொழியும் அந்த அருமையான கானத்தை யாரோ ஒருவன் கேட்டுக்கொண் டிருக்கிருன் என்பதை அவள் கண்டாளா என்ன?

பாடிக்கொண்டே இருந்த யசோதை தற்செயலாகக் கீழே நோக்கிஞள். அருகில் இருந்த பாறையொன்றில் யாரோ ஒருவன் அமர்ந்து அந்த இனிய பாடலை ரசித்துக்கொண் டிருந்தது அவளுக்குத் தெரிந்தது.

உடனே அவள் பாடுவதை நிறுத்திஞள். அவனை மீண்டும் ஒரு முறை நோக்கிஞள்.

அவன் அவளையே பார்த்துக்கொண் டிருந்தான். அவனுடைய பார்வை யசோதைக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவள் தன் முகத்தை வேறு புறம் திரும்பிக் கொண்டாள்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு அவன் எழுந்து சென்

ருன். போகும்போது அவன் யசோதை இருந்த பக்கம் திரும்பி விஷமப் பார்வை ஒன்றைப் பாய்ச்சிவிட்டுப் போனுன். யசோதைக்கு அது வெறுப்பாக இருந்தது.

அவன் அப்பால் சென்றதும் யசோதை சிந்தனை உலகில் சஞ்சரிக்கத் தொடங்கினுள். 'ஆண்கள் எல்லாருமே என்னைக் கண்டு மயங்கும்படி நான் அவ்வளவு அழகாகவா இருக்கிறேன்? இல்லாவிட்டால் ஆண்கள் அனைவருக்குமே இந்த மாதிரி விஷமப் பார்வை உண்டா? பெண்கள் எந்த விதமான தவருன நோக்கமும் இல்லாமல் ஆண்களைப் பார்க்கிருர்களே, அப்படி ஆடவரால் பார்க்கவே முடியாதா?'

ஆடவரைப்பற்றி நினைத்ததும் அவளுடைய மனக்கண் முன் மோத்திராமின் உருவம் தோன்றிற்று. அன்று அவர் தன்னைக் காமக் கண்களால் பார்த்தாரே, அதே காட்சியை அவள் மீண்டும் கண்டாள். உடனே அவளுடைய மென்மையான உடல் நடுங்கியது.

ஆனுல் மறுகணம் மோத்திராமிடம் தான் கடுமையாக நடந்துகொண்ட விதம் நினைவுக்கு வந்தது. மனம் சலனமுற்றது. ஆகவே அங்கிருக்கப் பிடிக்காமல் அவள் பாறையை விட்டுக் கீழே இறங்கி நடக்கத் தொடங்கினுள். எல்லாருடைய உள்ளத்தையும் கிள்ளி விடும்படியாகத் தான் அவ்வளவு அழகு கொண்டிருப்பதில் அவள் பூரிப்படைந்தாள். ஆனுல் பூரிப்படைந்து என்ன பிரயோசனம்? ஆனந்தனின் குடிசையில் அந்த வனப்பு, சோபை அளிக்கவில்லையே! இதை நினைத்ததும் தன் வறுமையை வெறுத்துக்கொண்டாள். இம்மாதிரி வாழ்வதைவிட மடிவதே மேல் என்று அவளுக்குத் தோன்றிற்று. எரிகிற தீயில் எண்ணெயை ஊற்றுவதைப் போல மோத்திராமின் நினைவு ஓயாமல் வந்து அவளை வாட்டிற்று.

அவள் பாதி தூரம் வந்தபோது, முன்பு ஆனந்தனைச் சந்தித்தாளே, அதே கிறிஸ்தவ ஸ்திரீ எதிரே தென்

பட்டாள். வெயிலில் காய வைத்திருந்த கருவாடுகளைக் கூடையில் நிரப்பி எடுத்துச் சென்றுகொண் டிருந்தாள். அவளும் யசோதையைப் பார்த்தாள். உடனே கையில் இருந்த பீடியை வாயில் வைத்து இரண்டு மூன்று 'தம்' அடித்தாள். பிறகு அவள் யசோதையை நோக்கி, ''யார் வீட்டுப் பெண்ணடி நீ?'' என்று கேட்டாள்.

அதைக் கேட்ட யசோதை களுக்கென்று சிரித்தாள். என்ன பதில் அளிப்பதென்றே அவளுக்குப் புலப்பட வில்லை. ஆனால் அந்தப் பெண் மீண்டும் அதே கேள்வி யைக் கேட்டபோது, பதில் தர வேண்டிய அவசியம் யசோதைக்கு ஏற்பட்டது.

யசோதை சிரித்துக்கொண்டே, ''அம்மா, நாங்கள் இன்றுதான் இவ்வூருக்கு வந்திருக்கிறோம். அதோ தெரி கிறதே, அதுதான் எங்கள் குடிசை'' என்று கூறினாள்.

''அதுவா? ஆனந்தன் பெண்சாதியா நீ?''

யசோதை, ''ஆமாம்'' என்றாள்.

ஆனந்தனைத் தான் ஏற்கனவே சந்தித்திருப்ப தாகவும், அவனைப்பற்றித் தொழிலாளிகளுக்கு நல்ல அபிப்பிராயம் இருப்பதாகவும் அவள் யசோதையிடம் சொன்னாள். பிறகு, அருகில் இருந்த தன் குடிசையைச் சுட்டிக் காட்டி, ''அதுதான் என் குடிசை. நீ தினமும் வந்துகொண்டே இரு. பொழுது போக்க வசதியாக இருக்கும்'' என்றாள் அந்த ஸ்திரீ.

பின்பு சிறிது நேரம் அவள் யசோதையை உற்று நோக்கினாள். ''உன்னைப் பார்த்தால் என் மேரியின் நினைவுதான் வருகிறது. உன்னைப்போலத்தான் அவளும் அழகாக இருந்தாள். இன்று மட்டும் அவள் உயிரோடு இருந்திருந்தால் உன்னைப்போலவே தோற்றம் அளிப் பாள்'' என்று கூறியபோது அவளுடைய தொண்டை அடைத்துக்கொண்டது; கண்களில் நீர் முட்டியது. உடனே அவள் தன் புடைவைத் தலைப்பால் கண்ணைத் துடைத்துக்கொண்டாள்.

யசோதையின் மனம் இளகிவிட்டது.

"பின்னே கட்டாயம் வருகிருயா என் வீட்டுக்கு? உன்னைப் பார்த்தால் என் மனசுக்கு மிகவும் நிம்மதி ஏற்படுகிறது" என்ருள் அவள்.

"வருகிறேன், அம்மா. நிச்சயம் வருகிறேன்" என்று பதிலளித்தாள் யசோதை.

இருவரும் வெவ்வேறு வழிகளில் சென்றனர். அந்தப் பெண்மணியைக் கண்டதும் யசோதைக்குத் தன் அன்னையின் ஞாபகம் வந்தது. பெற்ற தாயின் நினைவு வரவே அவள் தாரை தாரையாகக் கண்ணீர் உகுத்தாள். முன் பின் கண்டறியாத அந்தக் கிறிஸ்தவ ஸ்திரீ எவ்வளவு அன்பு காட்டினுள். அதைவிடக் கோடி மடங்கு அன்பை அல்லவா யசோதையின் அன்னை சொரிந்துகொண் டிருந்தாள்? 'அம்மா, நீ மட்டும் இன்று உயிரோடிருந்தால் என்னை இந்தக் கதிக்கு ஆளாக்கி இருப்பாயா? என்னை வறுமை என்னும் பாழும் கிணற்றில் தள்ளி இருப்பாயா? என் ஆசைகள் அனைத்தையும் நீ நிறைவேற்றி இருப்பாய். என் வாழ்க்கையில் இன்பம் கொழிக்கச் செய்திருப்பாய். என் அருமை அம்மா, நீ இப்பொழுது எங்கே இருக்கிருய்? பேதைப் பெண்ணுன என்னைத் தவிக்கவிட்டு நீ எங்கே சென்றிருக்கிருய்?' என்று அவளது மனம் ஓலமிட்டது.

யசோதை விம்மி விம்மி அழுதாள். கண்களில் நீர் வழிய அவள் வீட்டுக்கு வந்தாள்.

அப்பொழுது ஆனந்தன் வாசற்படியில் உட்கார்ந்து ஏதோ ஒரு காகிதத்தைப் படித்துக்கொண் டிருந்தான்.

யசோதையின் காலடிச் சத்தம் செவிகளில் படவே அவன் தலையைத் தூக்கிப் பார்த்தான். யசோதையின் கண்கள் கலங்கி இருப்பதைக் கண்டு அவன் மனம் கலங்கினுன்.

ஆனுல், 'ஏன்? எதற்காக?' என்று அவளை ஒரு வார்த்தைகூடக் கேட்கவில்லை.

யசோதை நேரே வீட்டுக்குள் சென்றுள். அவள் தன்னைக் கடந்து சென்றதும், ஆனந்தன் காகிதத்தின் மேல் மீண்டும் ஒரு முறை தன் பார்வையைச் செலுத்தினுன். பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டே, காகிதத்தை மடித்துச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான்.

கண்கள் சினத்தால் சிவக்க, கூண்டில் அடைபட்ட சிறுத்தையைப்போல் இங்கும் அங்குமாக நடை போடலானுன் ஆனந்தன்.

## 16
## மூன்று கடிதங்கள்

கொந்தளித்த மனத்துடன் ஆனந்தன் நடைபோட்டுக்கொண் டிருந்ததற்குக் காரணம், அவன் கையில் இருந்த காகிதந்தான். அந்தக் காகிதம் திவாகர் எழுதியிருந்த கடிதம். அதில் அவன் எழுதியிருந்தது இதுதான்:

'ஆனந்தா,

அழகான மனைவி கிடைத்துவிட்டாள் என்று பூரித்துப் போகாதே. எழில் வாய்ந்த மனைவி எதிரி என்பதை மறந்துவிடாதே. சற்று உன் கண்களைத் திறந்து பார். அப்பொழுது உனக்கு எல்லாம் புலப்படும். இரண்டு நாட்களுக்கு முன்பு நீ என்னைச் சந்தித்தபோது உனக்கு நான் எச்சரிக்கை செய்திருக்கிறேன். ஆனால் அது மட்டுமே உன் கண்களைத் திறந்துவிடாது என்று நினைத்துத்தான் உனக்கு இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறேன். ஜாக்கிரதை. ஒரு நாள் மோத்திராம் ஸேட் உன் மனைவி யசோதையைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளப் போகிறான் என்பது திண்ணம். பசுமாடு களவு போனபிறகு படலைச் சார்த்திப் பிரயோசனம் இல்லை. ஆகையால் முன்கூட்டியே ஜாக்கிரதையாக இரு. அந்த அற்பனின் வேலையை விட்டொழித்துவிட்டு உன் ஊருக்குச் சென்று விடு.

'யசோதையின் அழகைக் கண்டு மோத்திராம் பித்தனாகி இருக்கிறான். அவன் எங்கே, எப்பொழுது, எப்படி உன் மனைவியைத் தட்டிக்கொண்டு போவான் என்பதை யாருமே கூற முடியாது. சுசீலாவின் பேச்சைக் கேட்டு மயங்காதே. அவள் மிகவும் கேவலமானவள். கணவனை மதிக்காதவள். ஏனென்றால் அவள் படித்த

வள். அதுபோலவேதான் உன் மனைவியும் படித்தவள். ஆகையால்தான் ஆயிரம் தடவை, 'நம்பாதே, நம்பாதே' என்று முட்டிக்கொள்கிறேன். யானை, புலி, கரடி எதையும் நம்பலாம். ஆனல் படித்த கல்லூரிப் பெண் களை - அதுவும் அழகான பெண்களை-ஒருபோதும் நம்ப லாகாது. இது என் சொந்த அநுபவம். ஆகையால் ஓடிவிடு; ஊரை விட்டே ஓடிவிடு. அங்குள்ள மோச மான சூழ்நிலையைக் கண்டு மனம் வெதும்பித்தான் நானும் ஓடி வந்துவிட்டேன்.

இப்படிக்கு,

உன் நன்மையை நாடுவோன்.'

கடிதத்தில் திவாகர் கையொப்பம் இட வில்லை. ஆயினும் அது அவன் எழுதியதுதான் என்பதை ஆனந்தன் அறிந்துகொண்டான். அந்தக் கடிதத்தின் மூலம் ஆனந்தனுடைய தூய்மையான உள்ளத்தில் ஒரு துளி விஷம் கலந்து விட்டது. அதுவும் தன் வேலை யைத் தொடங்கிவிட்டது. ஆனந்தனின் மனசு இப் பொழுது அவன் வசமில்லை. அவனுக்கு யசோதையின் மேல் கட்டுக்கு அடங்காத கோபம் வந்தது. கைகால் கள் வெடவெடவென்று நடுங்கின. ஆகையால்தான் அவன் வீட்டு வாசலில் ஒன்றும் புரியாமல் நடை போட் டுக்கொண் டிருந்தான்.

மறுநாள் சுசீலாவுக்கும் இம்மாதிரியே ஒரு கடிதம் கிடைத்தது. அதில் திவாகர் எழுதியிருந்ததன் சாராம்சம்:

'சுசீலா,

பட்டிக்காட்டுக் கணவனுக்குப் பரிந்துகொண்டு பத்திரகாளிபோல் என்னிடம் சண்டைக்கு வந்துவிட் டாய். ஆனல் அந்தப் பொலிகாளை உன்னை எங்கே லட்சியம் செய்கிறது? அதை உன்னல் கட்டிப் பிடிக்க முடியாது. அது யசோதையின் மோகனுஸ்திரத்தில்

மயங்கிக் கட்டுண்டு கிடக்கிறது. அவளைச் சுற்றிச் சுற்றி வந்து மோந்து பார்க்கிறது. ஆகையால் கண்களைத் திறந்து பார். எல்லாம் உனக்குத் தெரியவரும். என்னைப் பழித்தாய் அல்லவா? உனக்கு இந்தத் தண்டனை நன்ருக வேண்டும். சேசே, இது தண்டனை அல்ல. உனக்கு அந்தக் காளையின் சொத்துத்தான் வேண்டியிருந்தது. இல்லாவிட்டால், பட்டணத்துப் பெண் ஒருத்தி பட்டிக்காட்டுப் புருஷனை மணந்துகொள்வாளா?

'உனக்கு அவன் வேண்டாம்; அவனுடைய பணம் வேண்டும். அதே சமயம் உன் மனம் ஆனந்தனை நாடுகிறது; அல்லவா? என்னைவிட அந்தப் பட்டிக் காட்டான்தான் உனக்கு அதிகமாகப் பிடித்திருக்கிருனு?....'

அந்தக் கடிதத்தைச் சுசீலாவால் மேற்கொண்டு படிக்க முடியவில்லை. அதைக் கிழித்துத் தூர எறிந்தாள். உடலெல்லாம் வேர்த்துக் கொட்டியிருந்தது. திவாகரின் கையெழுத்து அதில் இல்லாமல் இருந்தாலும் அது அவன் வேலைதான் என்பதை அவள் ஊகித்துக் கொண்டாள். திவாகரைச் சுட்டுப் பொசுக்கிவிட வேண்டும் என்று அவளுக்கு ஆத்திரம் வந்தது. அவன் இவ்வளவு கயவனுக இருப்பான் என்று அவள் கருதவே இல்லை.

மோத்திராமையும் யசோதையையும் இணைத்து அவன் எழுதியிருந்ததைக் கண்டு அவள் வெகுண்டாள். ஆனுல் அதிக கோபம் கொண்டது, தன்னையும் ஆனந்தனையும் பற்றி அபாண்டமாக எழுதியிருந்ததைப் படித்தபோதுதான். ஆனந்தனிடம் அவளுக்கு அளவில்லாத அன்பு இருக்கத்தான் இருந்தது; ஆனுல் அந்த அன்பு, சகோதரிக்கும் சகோதரனுக்கும் இடையிலுள்ள களங்கமற்ற அன்பாகும்.

தன் கணவன் விஷயத்தில் அவளுக்குக் கொஞ்சங் கூடச் சந்தேகம் ஏற்படவில்லை. ஏனென்ருல் திவாகர்

எழுதியதெல்லாம் பச்சைப் புளுகு என்று அவள் நினைத்தாள். திவாகரின் துர்நடத்தைச் சரித்திரத்தில் இது ஓர் அத்தியாயம் என்று அவள் முடிவு கட்டினுள்.

ஆனுல் மனசு கேட்கவில்லை. 'ஆனந்தன் எதைப் பற்றிச் சொன்னுன்? அவனும் இப்படித்தானே கூறினுன்? ஆனுல் அதைத்தான் எப்படி நம்ப முடியும்? அதுவும் திவாகரின் கைச்சரக்குத்தானே? அந்தச் சண்டாளன் தான் ஆனந்தனின் மனத்தையும் மாற்றி இருக்கிருன். அதில் சந்தேகமே இல்லை. அது மட்டுமா? இங்கிருந்து அந்தப் பீடை தொலைந்துபோன பிறகு மோத்திராம் நம்மிடம் எவ்வளவு பிரேமையுடன் நடந்து கொள்கிருர்?'

அதை நினைத்துப் பார்த்தபோது சுசீலா புளகாங்கிதமானுள். மோத்திராம் கள்ளமற்ற உள்ளம் படைத்தவர் என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும் என்று அவள் நினைத்துக்கொண்டாள்.

மனக்கடலில் எழுந்த மலைபோன்ற அலைகள் ஓய்ந்து அமைதி ஏற்பட்டதும், அவள் மாதர் சங்கத்துக்குப் புறப்பட்டாள்.

அவள் வாசற்பக்கம் வந்தபோது, மோத்திராம் சேட் ஒரு சோபாவில் அமர்ந்து கடிதம் ஒன்றைத் துண்டம் துண்டமாகக் கிழித்துக்கொண் டிருந்ததைக் கண்டாள். பிறகு அவர் கடிதத் துண்டுகளைப் பொறுக்கி, ஜன்னல் வழியாக வெளியே எறிந்தார்.

சோபாவில் காலை நீட்டிப் படுத்தவண்ணம் அவர் யோசனையில் ஆழ்ந்தார். 'கயவன்! இத்தகைய கடிதங்களைக் கண்டு ஏமாறுகிறவனு நான்? அன்றைத் தினம் அவர்கள் பேசியதை நான் காதால் கேட்டது நல்லதாய்ப் போயிற்று. இல்லையேல், இந்தக் கடிதம் குடும்பத்தில் கலகத்தை அல்லவா விளைவித்திருக்கும்? சுசீலா போன்ற மாதர்குல மாணிக்கத்தை மாசு கொண்டவள் என்று வீணிலே சந்தேகித்திருப்பேன். சுசீலா - என்

அருமைச் சுசீலா-உண்மையிலேயே பரிசுத்த மனத்தினள். அந்த அதமனின் பேச்சால்தானே யசோதையிடம் நான் மிருகத்தனமாக நடந்துகொண்டேன்? சீ, அந்தச் சனியன் ஒழிந்தது மிகவும் நல்லதாகப் போயிற்று.'

திவாகர், மோத்திராமுக்கும் ஒரு மொட்டைக் கடிதம் எழுதியிருந்தான். அதைத்தான் அவர் கிழித்துக்கொண்டிருந்தார். அதில் இருந்த விஷயம் இதுதான்:

'மோத்திராம்,

நீ ஒரு பணக்காரப் பொலிகாளை. உன் அழகுக்குப் படித்த மனைவி வேண்டியிருந்ததா? அதன் பலனை இப்பொழுது நன்ருக அநுபவி. உன் மனைவி சுசீலா அந்தப் பட்டறைத் தொழிலாளி ஆனந்தனைக் கண்டு சொக்கிவிட்டாள் என்பது உனக்குத் தெரியுமா? தெரியாதா? தெரியாவிட்டால், இப்பொழுதே உன் டயரியில் குறித்துக்கொள். பங்களாவின் பிளான் ஆனந்தனுக்குப் பிடிக்கவில்லை; ஆகையால் அதை அவள் உடனே ரத்துச் செய்தாள். ஆனந்தனை நீ வேலையை விட்டு நீக்கப் பார்த்தாய்; ஆனுல் அவள் உன்னை நாய்போல மதித்து, ஆனந்தனை வேலையைவிட்டு எடுக்காமல் பார்த்துக்கொண்டாள். இதெல்லாம் எதற்காகச் செய்தாள்? எடுத்ததற்கெல்லாம் அவள் ஆனந்தனைப் புகழ்ந்து பேசுகிருளே, அது எதற்காக என்று நீ ஒரு தரமாவது எண்ணிப் பார்ப்பது உண்டா? அவர்கள் இருவரும் நீ மால்வணுக்குச் சென்றிருந்த சமயத்தில் புரிந்த லீலைகளை நான் கண்ணுரக் கண்டிருக்கிறேன். ஆனுல் அவற்றை எல்லாம் பேனுவால் எழுத என் கை கூசுகிறது. அது சரி, யசோதை விஷயமாக என்ன செய்தாய்? அவள் உன் பிடியில் சிக்கிக்கொண்டாளா, இல்லையா? அவள் கிடைக்காவிட்டால் போகட்டும்; உன் மனைவியையாவது அடக்கக் கற்றுக்கொள்.''

இதிலும் திவாகரின் கையெழுத்து இல்லை.

மோத்திராம் சோபாவை விட்டு எழுந்தார். அவருடைய மனம் வேதனைக்கு உள்ளாகி இருந்தது.

அவருடைய மனக்கண்முன் யசோதை காட்சி தந்தாள். எவ்வளவு குரூரமாக இருக்கிறது அவள் பார்வை?

அப்பொழுதே அவளிடம் மன்னிப்புக் கேட்டிருக்க வேண்டும் என்று அவருடைய மனம் குற்றம் சாட்டிற்று. அந்த நாள் சீக்கிரமே வருமா?

ஆனந்தனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. திவாகரின் கடிதத்தால் மனம் புண்பட்டிருந்தது. அந்தப் பொல்லாத கடிதம் அவன் நெஞ்சில் நஞ்சைக் கலந்துவிட்டது. அவன் யசோதையிடம் பேசுவதைக்கூட நிறுத்திவிட்டான். ''என்னை நம்புங்கள்'' என்று சுசீலா கூறியதை நினைவு படுத்திக்கொண்டபோது, அவனுடைய மனசு இரு கூறுகளாகப் பிரிந்துகொண்டது. ஒன்று சொல்லிற்று: 'திவாகர் சொன்னதெல்லாம் அண்டப் புளுகு. காதால் கேட்பதெல்லாம் பொய், கண்ணாரக் காண்பது தான் மெய்.' ஆனால் மற்றொன்று சொல்லிற்று: 'ஏன் இருக்காது? நீ எதைக் கண்டாய்? மாதரை நம்பாதே.'

இருதலைக் கொள்ளி எறும்புபோல் அவதியுற்ற அவனுடைய மனம் இறுதியில், ''சுசீலாவையே கேட்டு விடுவோம்'' என்று நிச்சயித்தது. அவளுக்கு இந்தக் கடிதத்தைக் காட்டுவது; பிறகு அவள் சொல்லும் விதமே நடப்பது, அதுவரையில் இதெல்லாம் பொய் என்றே நினைப்பது என்று முடிவு கட்டிவிட்டான் அவன்.

இப்பொழுதெல்லாம் ஆனந்தன் தன்னுடன் பேசுவதில்லை. அப்படிப் பேசினாலும் இரண்டொரு வார்த்தைகளுடன் நிறுத்திக்கொள்கிறான் என்பதை யசோதை அறியாமல் இல்லை. ஆனால் அதற்காக அவள் வருத்தப் படவில்லை. ஏனெனில், அவளுடைய உள்ளத்திலிருந்து ஆனந்தன் கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துகொண்டிருந்தான். அதே சமயம் மோத்திராம் சேட் அவளுடைய உள்ளத்தில் மெல்ல மெல்லக் குடிபுகுந்து கொண்டிருந்தார்.

# 17
# ரத்த வெறி

நாட்கள் பல ஆகியும் மோத்திராம் அந்தப் பக்கமே தலைகாட்டவில்லை. யசோதை மட்டும் தினந்தோறும் அவரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். தன் அழகைக் கண்டு அவருக்கு ஏற்பட்டிருக்கும் மயக்கம் இன்னும் தெளிந்திருக்காது, ஆகையால் இங்கே ஒரு தடவையாகிலும் அவரால் வராமல் இருக்க முடியாது என்று அவள் எண்ணினாள்; அல்ல, அவள் நிச்சயமாக நம்பினாள். ஆனால் அவளுக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. மோத்திராம் அங்குள்ள ஆலையைப் பார்வையிடும் பொருட்டு இரண்டு நாட்களுக்கு ஒரு முறை வருவது வழக்கம். ஆனால் ஒரு வாரம் ஆகியும் அதற்காகக்கூட அவர் வரவில்லை.

ராஜ்கோட் மேட்டுப்பாங்கான இடத்தில் அமைந்திருந்தது. ஆகவே அதற்குக் கீழ்ப் பக்கமாயுள்ள சாலையில் செல்லும் மோட்டாரின் ஊது குழலைக் கேட்டதும், யசோதை ஜன்னல் அருகில் ஓடிப் பார்ப்பாள், மோத்திராம் வந்துவிட்டாரோ என்று. ஆனால் அந்த மோட்டார் வேறு யாருடையதாகவோ இருக்கக் கண்டு, ஏமாற்றமடைந்து நிராசையுடன் திரும்பி வருவாள்.

இவ்வாறு அல்லும் பகலும் மோத்திராமுக்காகக் காத்திருந்து அவள் மனமுடைந்து போனாள். அவரைக் காணாமல் கண்கள் பூத்துப் போயின.

உண்ணும்போதும் உடுக்கும்போதும் உறங்கும்போதும் அவளுக்கு மோத்திராமைப் பற்றியே சிந்தனை. ஒரு தரமாவது அவரைத் தரிசிக்கும் பேறு கிடைக்குமா என்று அவளுடைய நயனங்கள் ஏங்கித் தவித்தன. இந்தத் தவிப்பையும் ஏக்கத்தையும் அவளால் எத்தனை நாட்களுக்குத்தான் பொறுத்துக்கொள்ள முடியும்? இறுதி

யில் அவள் தன் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டாள். 'எது வந்தாலும் வரட்டும், அவர் இருக்கும் இடத்துக்கே சென்றுவிடுவோம்' என்று அவள் தீர்மானித்துவிட்டாள்.

அந்தக் கணமே ஆவேசத்தில் அவள் வீட்டை விட்டு வெளியேறினாள்.

அப்பொழுது நடுப்பகல். வெயில் தகித்துக்கொண்டிருந்தது. அவளுடைய உள்ளமும் உள்ளூறப் புகைந்து கொண்டிருந்தது. ஆனந்தன் ஆலைக்குப் போயிருந்தான். ஆகையால் அவளைக் கேட்பார் யாருமே இருக்கவில்லை.

யசோதை கனவிலே நடப்பவளைப்போல் அந்தக் கடும் வெயிலில் விரைவாக நடந்துகொண்டிருந்தாள். எங்கே போகிறோம் என்ற எண்ணமே இல்லாமல் அவளுடைய கால்கள் அவளை இழுத்துச் சென்றன.

பிற்பகலெல்லாம் நடந்து நடந்து களைத்துப் போய் அவள் மாலையில் தேவ்பாக்குக்கு அருகில் வந்து சேர்ந்தாள். கால்கள் கடுக்க ஆரம்பித்தன. ஆகவே, சிறிது களைப்பாறலாம் என்று நினைத்து, கடற்கரையில் இருந்த ஒரு படகில் ஏறி உட்கார்ந்துகொண்டாள்.

உடலுக்கு ஓய்வு அளித்ததும் உள்ளமும் ஓய்வு பெற்றது. தன் தற்போதைய நிலையைப்பற்றி அவள் அமைதியுடன் நினைக்கத் தொடங்கினாள்.

'உண்மையிலேயே நான் வீட்டை விட்டு வெளியேறி விட்டேனா? ஏன் வெளியேறினேன்? ஆனந்தனைப் பிடிக்கவில்லை என்றா, அல்லது மோத்திராமை விரும்புகிறேன் என்றா? சரி, மோத்திராம் எனக்குக் கிடைப்பாரா? கிடைப்பார்; நிச்சயமாகக் கிடைப்பார். ஏன் கிடைக்க மாட்டார்? அவராகத்தானே என்மேல் காதல் கொண்டு என்னைத் தேடி ஓடி வந்தார்?..ஆனால், இப்பொழுது என்னை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால்? இது என்ன பைத்தியக்காரத்தனம்? அவர் ஏன் என்னை ஏற்றுக் கொள்ள மாட்டார்?....ஒரு வேளை அவர் என்னை வேண்டாம் என்றால், அப்பொழுது என்ன செய்வது? யாரிடம்

போவது? ஆனந்தனிடமே திரும்பிப் போவதா? எப்படிப் போவது? அப்படிப் போக எனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? அது சரி, ஆனந்தனுவது என்னை அழைத்துக் கொள்வானு? மாட்டான்; ஒருகாலும் மாட்டான். என்னை விரட்டி அடிப்பான்; எட்டி உதைப்பான்; வெட்டி வீழ்த்துவான். அப்பொழுது என் கதி? என்னை யாருமே சீந்த மாட்டார்கள். கொண்ட கணவனைக் கைவிட்டு, கயவனிடம் சென்ற காதகி என்று என்னை எல்லாரும் ஏசுவார்கள். ஐயையோ! அந்த ஏச்சும் பேச்சும் வேண்டாம். அப்பொழுது நான் ஆனந்தனிடமே திரும்பிச் செல்லட்டுமா? ஆனுல், இத்தனை நேரம் நீ எங்கே சென்றிருந்தாய் என்று அவன் என்னை அதட்டிக் கேட்டால், அவனுக்கு என்ன பதிலைச் சொல்ல?'

யசோதையின் மனம் ஒரு நிலையில் நில்லாமல் புயலில் சிக்கிய படகு போலத் தத்தளித்துக்கொண்டிருந்தது.

மறு விநாடி அவளுடைய மனம் சொல்லிற்று: 'மோத்திராம் ஷோக்கான வாலிபர்; பணக்காரர். உன் அழகைக் கண்டு மயங்கி அனைத்தையும் அர்ப்பணிக்கத் துணிந்தவர். அவர் உன்னை ஒரு நாளும் கைவிட மாட்டார். இப்பொழுது நீ எப்படியும் வீட்டை விட்டு வந்து விட்டாய். ஆகையால் அவரிடமே ஓடு; வேகமாக ஓடு; கால்களில் பலம் கொண்ட மட்டும் ஓடு. சற்றும் பின் தங்காதே. அப்படி அவர் உன்னை உதறித் தள்ளினுல், ஆழ்ந்த கடல் இருக்கவே இருக்கிறது. அது என்றைக்குமே உனக்கு அடைக்கலம் அளிக்கும்.'

இந்த எண்ணம் உதித்ததும் அவளுடைய உடம்பில் தெம்பு உண்டாயிற்று. அங்கே ஒரு விநாடிகூட உட்கார முடியவில்லை. ஆகையால் அவள் எழுந்து கடற்கரையில் கடுவேகமாக நடக்கலானுள்.

அவள் தேவ்பாக் ஊரில் அடிஎடுத்து வைத்ததும் கால்கள் முன்னேக்கிச் செல்ல மறுத்தன; ஏனென்றுல்,

மூளை மீண்டும் வேலை செய்யத் தொடங்கியது. 'இப்பொழுது எங்கே போவது? மோத்திராமின் வீட்டுக்கு இந்த நேரத்தில் போகமுடியாது. ஏனெனில் அங்கே சுசீலா இருப்பாள்; அவள் விசாரிப்பாள். அவளுக்கு என்ன பதில் அளிப்பது? சரி, அங்கே போகக்கூடாதென்ருல், வேறு இடம்?....'

ஒரு பெரிய பிரச்னை அவளுடைய மூளையைக் குடைய ஆரம்பித்தது. அதன் பயனுக மறு விநாடியே அவளுக்குப் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றிற்று. அதாவது அந்தச் சமயம் மாதர் சங்கத்து அக்காவின் நினைவு அவளுக்கு வந்தது. உடனே யசோதையின் முகம் மலர்ந்தது. காரணம், அக்காவுக்கு அவள் மிகவும் பிடித்திருந்தாள். தன் வேலையை ஏற்றுக்கொண்டு தனக்கு ஓய்வு கொடுத்ததால் அக்காவுக்கு யசோதையினிடம் பிரியம் இருந்தது.

ஆகையால் அக்கா தன்னை அன்புடன் வரவேற்பாள் என்று யசோதை கருதினுள். தவிர, அக்கா எந்த விஷயத்தையும் குடைந்து குடைந்து கேட்க மாட்டாள். ஒருகால் அப்படிக் கேட்டாலும் அவளைப் பார்த்துப் போகத்தான் வந்தேன் என்று சொல்லிவிடலாம்.

இந்த யுக்தி தோன்றியதும் யசோதை பயமின்றி நடக்கத் தொடங்கினுள்.

அக்காவின் வீட்டுக்கு அவள் வந்தபோது அங்கே கங்கு உட்கார்ந்து மாலை தொடுத்துக்கொண் டிருந்தாள். அவள் யசோதையைக் கண்டதும், ஆனந்தம் பொங்கக் கூச்சலிட்டாள். ''அக்கா, அக்கா, யசோதையம்மாள் வந்திருக்கிருர்கள்.''

இதைக் கேட்டு அக்கா பரபரப்புடன் வெளியே வந்தாள். ''வா அம்மா, யசோதா. உள்ளே வா. அடி கங்கு, யசோதைக்கு ஒரு மணை கொண்டுவந்து போடு'' என்ருள் அக்கா.

''வேண்டாம் அக்கா'' என்று சொல்லியவாறு யசோதை தரையிலேயே உட்கார்ந்தாள்.

''என்ன யசோதா, மால்வண் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டாள் அக்கா.

''நன்ருகத்தான் இருக்கிறது; ஆனல் நீங்கள் அங்கு இல்லாத குறை மட்டும் இருக்கிறது'' என்று பதிலளித்தாள் யசோதை.

''அதற்காகத்தான் இங்கு வந்து விட்டாயாக்கும்!'' என்ருள் அக்கா.

மூவரும் கொல்லென்று சிரித்தனர்.

பின்னர், யசோதை தேவ்பாக்கை விட்டுச் சென்றது முதல் என்ன என்ன அக்கப்போர்கள் நடந்தனவோ அவை அனைத்தையும் அக்கா விவரமாகக் கூறினுள். சுசீலாவைப் பற்றிய பேச்சும் எழுந்தது.

அப்போது யசோதை குறுக்கிட்டு, ''சுசீலாபாய்க்கு என் நினைவு இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''இருக்கிறதாவா? நாள்தோறும் உன் நினைவேதான் சுசீலாபாய்க்கு. நீ சென்றது முதல் சங்கத்துக்கு ஒருவரும் ஒழுங்காக வருவதில்லை. படிப்பிலும் அக்கறை கொள்வதில்லை. இந்தக் கங்குவோ தினமும் என்னை நச்சரித்துக்கொண் டிருக்கிருள், 'வா அக்கா, யசோதை அம்மாளைப் பார்த்துவிட்டு வருவோம்' என்று. ஆகையால் நாங்களே ராஜ்கோட்டுக்கு வரலாம் என்று இருந்தோம். அதற்குள் நீயே வந்துவிட்டாய். மிக நல்லதாகப் போயிற்று. நம் வீட்டில் நீ நாலைந்து நாட்களாவது இருந்துவிட்டுத்தான் போக வேண்டும். சரி, ஆனந்தன் சௌக்கியந்தானே?''

யசோதை, 'ஆம்' என்னும் பாவனையில் தன் தலையை அசைத்தாள். உடனே எழுந்து கைகால்களை அலம்பிக்கொள்ள முற்றத்துக்குச் சென்ருள்.

அன்றிரவு படுக்கும்போது யசோதை அக்காவை நோக்கி, ''நாளைக் காலையில் நான் சுசீலாபாயைப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று சொன்னுள்; அதற்குக் காரணம் இருந்தது.

'காலை வேளையில் மோத்திராமைச் சந்திப்பது எளிது. ஏனென்றால் அந்த நேரத்தில் சுசீலா உள்கட்டில் வீட்டுவேலைகளில் ஈடுபட்டிருப்பாள். வெளிப்பக்கம் வரவே அவளுக்கு அவகாசம் இராது. அப்போது மோத்திராம் வெளிக்கட்டில் உள்ள தம் காரியாலய அறையில் தனியாகத்தான் இருப்பார். ஆகவே அவரைத் தனியே சந்திக்கலாம். அப்படிச் சந்திக்க முடியவில்லை என்றால், சுசீலாவை மட்டும் பார்த்து வருவது; பிறகு வேறு காரணம் எதையாவது கற்பித்துக்கொண்டு மோத்திராமைக் காண்பது' என்று முடிவு கட்டினாள்.

இங்கே ஆனந்தன் ஆலையிலிருந்து வீடு திரும்பியதும், யசோதையைக் காணாமல் திடுக்கிட்டான். பிறகு தனக்குத் தானே சமாதானம் கூறிக்கொண்டான். 'சரி, எங்காவது ஊர் சுற்றப் போய் இருப்பாள், அல்லது கிறிஸ்தவ அம்மாளின் வீட்டில் வம்பளந்து கொண்டு உட்கார்ந்திருப்பாள்' என்று நினைத்து அவன் வாளா இருந்துவிட்டான். அவளைப்பற்றி அப்போது அவன் அதிகமாகக் கவலை கொள்ளவில்லை. ஏனென்றால், திவாகர் எழுதியிருந்த கடிதம் அவனுடைய உள்ளத்தில் பெரும் புயலைக் கிளப்பி யிருந்தது. ஆயினும், சென்ற இரண்டு மூன்று நாட்களில் அந்தப் புயல் அடங்கி அமைதி ஏற்பட்டிருந்தது. 'யசோதை ஒரு பாவமும் அறியாதவள். கனவில்கூட அவள் இத்தகைய தீச்செயல்களைச் செய்ய மாட்டாள்' என்றுதான் அவனுடைய மனம் கூறிக்கொண் டிருந்தது.

ஆனால் இரவு மணி ஒன்பதாகியும் யசோதை வீடு வந்து சேராததைக் கண்டதும், அவனுக்கு ஒரு புறம் கவலையும் மறுபுறம் திகிலும் உண்டாயின.

உடனே அவன் கிறிஸ்தவ அம்மாளின் வீட்டுக்குச் சென்றான். வெளியில் இருந்தவாறே, ''அம்மா!'' என்று அவன் கூப்பிட்டான்.

''யார்? ஆனந்தனா? வா அப்பா, உட்கார். எங்கே இந்தப் பக்கமே வரமாட்டேன் என்கிறாய்?'' என்று உபசரித்தாள் அவள்.

''வராமல் என்ன? வேலை சரியாக இருக்கிறது. நீங்கள் சௌக்கியந்தானே?''

''ஏசுநாதரின் அருளால் எனக்கு ஒரு குறையும் இல்லை. நாட்களை எளிதாக ஓட்டிக்கொண் டிருக்கிறேன்.''

இம்மாதிரியே ஆனந்தன் வெகு நேரம் வரையில் பேசிக்கொண் டிருந்தபோதிலும், அந்த அம்மாள் யசோதையைப்பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. அதிலிருந்து யசோதை அங்கே வரவில்லை என்பதை ஆனந்தன் ஊகித்துக்கொண்டான். யசோதைக்கு வேறு எவர் இல்லத்துக்கும் செல்லும் வழக்கம் இல்லை யாதலால், அவள் எங்கே சென்றிருப்பாள் என்ற கவலை அதிகரித்தது.

சிறிது நேரத்தில் அந்த அம்மாளிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து அவன் புறப்பட்டான். வரும் வழியில் அவன் மனத்தில் பளிச்சென்று ஒரு சந்தேகம் எழுந்தது: 'யசோதை எங்காவது ஓடிப்போயிருக்க மாட்டாளே?'

இதை நினைத்ததும் அவனுடைய உடலில் உஷ்ணம் ஏறியது. அந்தக் கற்பனையை அவனால் சகிக்கக்கூட முடியவில்லை. 'யசோதை ஓடிப்போய்விட்டாள் என்றால், எங்கே ஓடியிருப்பாள்? தேவ்பாக்குக்கா? யாரைச் சந்திக்க? சுசீலாபாயையா அல்லது மோத்திராமையா?'

'மோத்திராமைத்தான் சந்திக்கச் சென்றிருக்கிறாள்' என்னும் எண்ணம் இப்பொழுது அவனுடைய மனத்தில் நன்றாக வேர் விட்டது. திவாகரின் கடிதத்தால் ஏற்கனவே சந்தேகத்தில் குழம்பியிருந்த அவன் மனம் இந்தத் தீர்மானத்துக்கு வந்ததில் என்ன ஆச்சரியம்?

அமைதியடைந்த புயற்காற்றுத் தற்செயலாக

மீண்டும் சீறி அடிக்கும்போது நடுக்கடலில் உள்ள மரக்கலங்கள் எப்படித் தள்ளாடித் தள்ளாடித் தத்தளிக்குமோ, அப்படியே அவன் மனமும் நிலை பெயர்ந்து போராடியது.

அதனால் அவன் தலை கனக்க ஆரம்பித்தது. உடலின் ரத்தமெல்லாம் மூளையை நோக்கி அதிவேகமாகப் பாய்வதுபோன்ற ஓர் உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. கண்கள் கணப்பொழுதில் சிவந்து விட்டன. காதிலிருந்து வெப்ப ஆவி வெளிவந்தது. தொண்டையும் நாவும் வறண்டுபோயின. மனம், சொல்ல முடியாத மரண வேதனையை அநுபவித்துக்கொண் டிருந்தது.

அந்தக் கோலத்தில் அவன் மெல்ல மெல்ல நடந்து தன் குடிசையை அடைந்தான். வாசற் கதவு திறந்து கிடந்தது. உள்ளே ஒரே கும்மிருட்டு. அவன் சிறிது நேரம் தயங்கினான். பிறகு தன் சட்டைப் பையிலிருந்து தீப்பெட்டியை எடுத்து, ஒரு குச்சியைக் கிழித்தான். அந்த மங்கிய வெளிச்சத்தில் உள்ளே நோக்கினான். ஆனால்....

அங்கே யசோதை இருக்கவில்லை. உடனே வெறி பிடித்தவன்போல் அவன் சட்டென்று வெளியே வந்தான். அந்த இருட்டில், தனிமையான அந்த ராஜ்கோட் பிரதேசத்தில், யசோதையைத் தேடிப் பிசாசைப்போலத் திரிய ஆரம்பித்தான்.

அவளை எங்குமே காணமல் அவன் ஓர் இடத்தில் உட்காருவான்; பிறகு எழுந்து நடப்பான். மீண்டும் மற்றோர் இடத்தில் உட்காருவான்; அங்கிருந்தும் நடந்து செல்வான். இப்படியே செய்துகொண் டிருந்தான். அவன் உட்கார்ந்த ஒவ்வோர் இடத்திலும் முட்கள் குத்துவதைப் போன்ற உணர்ச்சியே ஏற்பட்டது; உடலை மட்டும் அல்ல, உள்ளத்தைக் கூடத்தான். சாதாரண சமயமாக இருந்திருந்தால் அந்தக் காரிருளில் சுற்றித் திரிவதற்கு அவனுக்குத் துணிவே ஏற்பட்டிருக்காது.

ஆனால் இன்று அவன் மனிதனா? பேயாக அல்லவோ சஞ்சரித்துக்கொண்டிருந்தான்?

அன்றிரவு முழுவதும் அவன் மூலை முடுக்கு ஒன்று விடாமல் யசோதையைத் தேடி, பைத்தியக்காரனைப் போல் அலைந்து திரிந்தான். ஆனால் யசோதை அங்கே இருந்திருந்தால்தானே, அவனுக்குக் கிடைத்திருப்பாள்?

இறுதியில் உடல் சோர்ந்து உள்ளம் நொந்து, ஆனந்தன் அதிகாலையில் தன் குடிசைக்குத் திரும்பி வந்தான். யசோதை இல்லாமல் அவன் அப்படித் திரும்பியே வந்திருக்க மாட்டான்; ஆனால் அவன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்திருப்பதாகத் தெரியவந்தது.

குடிசையில் நுழைந்ததும் அவன் விளக்கை ஏற்றினான். ஒரு மூலையில் இருந்த, ஆயுதங்களை வைக்கும் பெரிய மரப்பெட்டியைத் திறந்தான். அதில் கிடந்த ஆயுதங்களை யெல்லாம் அவசர அவசரமாக வெளியில் எடுத்துப் போட்டான். பிறகு அவற்றையே உற்று நோக்கிக்கொண்டிருந்தான். கடைசியில் அந்தக் குவியலி லிருந்து ஓர் ஆயுதத்தை எடுத்தான். அதைப் பார்த்துக் கோரமாகச் சிரித்தான். அந்த மங்கிய விளக்கொளி யிலும் அவன் எடுத்த ஆயுதம் பளபளவென்று மின்னி யது. அது ஒரு கூரான கோடரி.

அந்தக் கோடரியைத் தோளின்மேல் போட்டுக் கொண்டு, அதிகாலையில் மந்தமான வெளிச்சத்தில் பனித் திரையை விலக்கியபடியே, வெறி பிடித்து வேகமாக நடக்கத் தலைப்பட்டான் ஆனந்தன்.

எங்கே புறப்பட்டுவிட்டான்? எதற்காகச் செல் கிறான்? எங்கே செல்கிறான்? கூரான கோடரி எதற்காக?

கடற்கரை ஓரமாக அவன் வந்தபோது ஊர் நாய் கள் ஓயாமல் குரைத்து அவனை வரவேற்றன. அப் பொழுது ஆனந்தனுக்கு இருந்த ரத்த வெறியில் நாட்டு நாய்கள் என்ன, காட்டுப் புலிகளே வந்திருந்தாலும் கண்டதுண்டமாக வெட்டி எறிந்திருப்பான்.

# 18

# திரை விலகியது

யசோதையை நேரில் கண்டதும் மோத்திராம் திடுக்கிட்டார். அப்பொழுது பாதி இருட்டும் பாதி வெளிச்சமுமாக இருந்தது. வெளியில் எங்குமே பனித் திரை மூடியிருந்தது. அது விலகுவதற்கு இன்னும் கொஞ்ச நேரம் இருந்தது. அதிகாலையில் எழுந்திருக்கும் வழக்கம் மோத்திராமுக்கு என்றுமே உண்டு. ஏனென்முல், அந்த வேளையில்தான் அவர் முந்திய நாளின் கணக்கு வழக்குகளை ஆற அமர இருந்து கவனிப்பது வழக்கம்.

அத்தகைய வேளையில் சற்றும் எதிர்பாராத சமயம் அவருக்கு முன்னுல் யசோதை வந்து நின்றதும், மோத்தி ராம் திகைப்படைந்தார். அதோடு அவருக்கு ஆச்சரிய மாகவும் இருந்தது.

யசோதை அறையில் நுழைந்ததும் அவருக்கு எதி ரில் வந்து நின்றுள். மோத்திராம் அவளுடைய கண் களை நோக்கினுர். அதில் ஒருவித ஏக்கம் இருந்ததைக் கண்டு அவருடைய உள்ளம் புண்ணுகியது. அவளுடைய முகத்தில் எப்பொழுதும் தோன்றும் ஒளி இருக்கவில்லை. அது மங்கியிருப்பதைப்போல் தோன்றிற்று. அந்த நிலைமையிலும் அவளுடைய வடிவழகு கொஞ்சங்கூடக் குறையவில்லை. அதற்கு மாருக, அது பன்மடங்கு பெருகி, அவளுக்குத் தனிச் சோபையை அளித்து வந்தது.

என்றுமில்லாத அந்த எழிலை மோத்திராம் ஸேட், மெய்ம்மறந்து நயனங்களால் அள்ளி அள்ளிப் பருகிக் கொண்டிருந்தார். அவளிடம் ஏதாவது பேசவேண்டுமே; அதுகூட அவருக்குத் தோன்றவில்லை.

சில விநாடிகளுக்குப் பின் அவர் சுய உணர்வு

பெற்று, யசோதையை நோக்கி, ''யசோதா, இவ்வளவு அதிகாலையில் நீ இங்கே எங்கு வந்தாய்?'' என்று கேட்டார்.

யசோதை கணநேரம் மௌனமாக இருந்தாள். அவளுக்கு என்ன பேசவேண்டும் என்றே புலப்படவில்லை. கடைசியில் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, ''உங்களைச் சந்திக்கத்தான் வந்தேன்'' என்றாள்.

''என்னைச் சந்திக்கவா? இந்த நேரத்திலா?'' என்று வியப்புடன் கேட்டுவிட்டு, ''ஏன்?'' என்று வினவினார்.

''ஏனா? உங்களுக்கு ஒன்றுமே தெரியாததுபோலப் பேசுகிறீர்களே?''

இதற்கு மோத்திராம் பதில் அளிக்கவில்லை. ஏனென்றால், அன்று யசோதையின் குடிசையில் நடந்த பயங்கரச் சம்பவம் அவருடைய மனத் திரையில் ஓடி, அவரைத் திகிலடையச் செய்தது.

''எதற்காக இந்த மௌனம்? நான் ஏன் வந்தேன் என்பதைச் சொல்லத்தான் வேண்டுமா? அன்று என் வீட்டில் நடந்த சம்பவத்தை நீங்கள் இன்னமும் மறந்திருக்க மாட்டீர்கள். அன்று உங்கள் கோரிக்கையைப் பூர்த்தி செய்ய மறுத்தேன்; உங்களைக் கண்டபடி ஏசினேன்; உங்களை அவமானப்படுத்தினேன். நீங்கள் மனமுடைந்து சென்றபிறகு அதைப்பற்றி அமைதியாகச் சிந்தித்தபோது எனக்குப் பச்சாத்தாபம் ஏற்பட்டிருக்கிறது.''

''என்ன? பச்சாத்தாபமா? என்மேலா?'' என்று திகைப்பும் வியப்பும் கலந்த குரலில் கேட்டார் மோத்திராம்.

''ஆமாம், பச்சாத்தாபந்தான். உங்கள் மேல் தான். அதற்காக நான் உங்களிடம் மன்னிப்புக் கோர வந்திருக்கிறேன்.''

இவ்வாறு கூறிவிட்டு, யசோதை சட்டென்று தன் இரு கரங்களாலும் வாயைப் பொத்திக்கொண்டாள். அவளா பொத்திக்கொண்டாள்? அநாதி காலம் தொட்டுப் பெண் இனத்தின் ஒவ்வொரு துளி ரத்தத்திலும் ஊறிக் கிடக்கும் நாணம் அல்லவா அவ்வாறு வாயைப் பொத்திற்று?

இதைக் கண்ணுற்ற மோத்திராமின் கண்களில் ஆச்சரியம் தெறித்தது. அவளை நோக்கி அவர் முணுமுணுத்தவாறே, ''மன்னிப்புக் கேட்கவா வந்தாய்?, ஆனால் மன்னிப்பை யார் கேட்க வேண்டும்? நீயா, அல்லது நானா? குற்றவாளி நான்தான். ஆகையால் நான்தான் உன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்'' என்றார் வெகு அமைதியாக. அவருடைய உள்ளத்தில் உணர்ச்சி பெருக்கெடுத்தது.

''அல்லவே அல்ல. நான்தான் குற்றம் புரிந்தவள். நான்தான் தண்டனைக்கு உரியவள். ஆகையால் நான் உங்கள் காலடியில் வந்திருக்கிறேன். என் உடல் பொருள் ஆவி எல்லாம் உங்களுக்குத்தான் சொந்தம்'' என்று யசோதை நாத் தழுதழுக்கக் கூறினாள்.

யசோதையின் கடைசி வாக்கியம் அப்பொழுது தான் அருகில் இருந்த அறைக்கு வந்த சுசீலாவின் செவியில் விழுந்தது. ஒவ்வொரு வார்த்தையும் அவளுக்குத் தெளிவாகக் கேட்டது: ''என் உடல் பொருள் ஆவி எல்லாம் உங்களுக்குத்தான் சொந்தம்.''

சுசீலா துணுக்குற்று வெளி அறையில் மெதுவாக எட்டிப் பார்த்தாள்.

அங்கே யசோதை தலைவிரி கோலமாக மோத்திராமின் முன்னால் நின்றுகொண்டிருந்தாள்.

அந்தக் காட்சியைக் கண்டதும் சுசீலாவுக்கு ஒரு பெரிய கருந்தேள் நூறு தடவை கொட்டியதுபோல் இருந்தது. தலை சுற்றியது. அந்தக் காட்சியை அவளால் பார்க்கவே முடியவில்லை.

உடனே அவள் மெதுவாக ஓசைப்படாமல் திரும்பி வந்து தன் தலையைச் சுவரில் சாய்த்துக்கொண்டாள்.

'திவாகர் சொன்னது உண்மை!'

இந்த விபரீதக் காட்சியைக் கண்ணுற்றதும், தன் இளகிய மனந்தான் இதற்கெல்லாம் காரணம், யாரையும் குற்றம் சொல்லிப் பயன் இல்லை என்று அவளுக்குத் தோன்றிற்று. எடுத்ததற்கெல்லாம், 'நம் கணவன், நம் யசோதை' என்று அளவு கடந்த உறவு கொண்டாடியதன் விளைவு இது என்றும் நினைக்கலானாள்.

இதற்குள் வெளி வராந்தாவில் செருப்புச் சத்தம் கேட்டது. உடனே அவள் தன் அறையில் இருந்த கதவைத் திறந்து பார்த்தாள்.

தோளின்மேல் கோடரியைச் சார்த்திக்கொண்டு வீராவேசத்துடன் ஆனந்தன் விரைவாக வருவதைக் கண்டாள் அவள். ஒருகால் கொங்கணத்தின் அதிபதியான பரசுராமர்தாம் அந்த அதிகாலை வேளையில் சஞ்சாரம் செய்கிறாரோ என்ற பிரமை அவளுக்கு ஏற்பட்டது. உடனே தன் கண்களை நன்றாகக் கசக்கிக் கொண்டு மீண்டும் ஒரு முறை நோக்கினாள். ஆம், சந்தேகம் இல்லை; ஆனந்தன்தான் வருகிறான்.

அமைதியும் அடக்கமும் கொண்ட ஆனந்தன் ஏன் இப்படிப் பரபரப்போடு வருகிறான்? அதுவும் இந்த அகாலத்தில்? அவளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

அருகில் வந்ததும், ஆனந்தனின் தூசி படிந்த திடமான தேகம், செக்கச் செவேலென்று ரத்தம் கக்கும் கண்கள், குரூரமான தோற்றம் இவற்றைக் கண்டு சுசீலாவின் உடல் நடுங்கியது; உள்ளம் பதறியது.

'சரி, இப்பொழுது பயங்கரமான பேராபத்து நிகழப் போகிறது!' என்று அவள் நொடியில் தீர்மானித்தாள். உடனே அவள் சற்றும் தாமதிக்காமல் தன் அறையை விட்டு வெளியே வந்து ஆனந்தனை எதிர்நோக்கிச் சென்றாள்.

ஆனந்தன் எட்டி எட்டி நடை போட்டுக் கொண்டே ராட்சசனைப்போல் வந்துகொண் டிருந்தான்.

வந்தவன் அதி விரைவாகப் படிகளில் ஏறினன். ஆனல் கடைசிப் படி ஏறும்போது சுசீலா அவனுக்கு முன்னல் வந்து நின்றுகொண்டாள்.

தன் வழியில் குறுக்கே வந்து நின்ற சுசீலாவை அவன் ஒரு முறை வெறிக்கப் பார்த்துவிட்டு, அவளைக் கடந்து செல்ல முயன்றன். ஆனல் சுசீலா அவனைத் தடுத்து, ''நில்லுங்கள் ஆனந்தராவ், நில்லுங்கள்'' என்று கூறினள்.

ஆனந்தன் அசைவற்று அங்கேயே நின்றன்.

''ஆனந்தராவ், காலையில் எங்கே போகிறீர்கள்? அதுவும் இந்தக் கோலத்தில்? உங்கள் உடம்புக்கு என்ன?'' என்று பொறுமையுடன் கேட்டாள்.

ஆனந்தன் பதில் அளிக்கவில்லை.

''இந்தக் கோடரி எதற்காக?'' என்று அவள் கேட்டாள். அந்தக் கேள்வியில் சந்தேகம் தொனித்தது.

ஆனந்தன் குரோதம் பொங்க, தன் உதடுகளைக் கடித்துக்கொண்டான்.

''என் வைரியை வெட்டி வீழ்த்துவதற்காக!'' என்று வெறியுடன் பதில் அளித்துவிட்டு, ''என் வாழ்வுக்குக் கண்ணி வைத்த அந்தக் கயவனைக் கண்ட துண்டமாக வெட்டினல்தான் என் ஆத்திரம் அடங்கும். விலகி நில்லுங்கள். இப்பொழுது என்னைத் தடுக்காதீர்கள். முதலில் என் வேலையை முடித்துவிட்டு வருகிறேன்'' என்று ஆவேசத்துடன் முழங்கிவிட்டு, உள்ளே போகக் கிளம்பினன் ஆனந்தன்.

சுசீலா இடிந்துபோனள். ஆனந்தன் தன் பதியைக் கொலை செய்யத்தான் வந்திருக்கிறன் என்பது அவளுக்கு நன்றகத் தெரிந்துவிட்டது. அதோடு, கணவனின் உயிர் இப்பொழுது தன் கையில்தான் இருக்கிறது என்பதும் அவளுக்கு விளங்கிவிட்டது. கணவனுடைய உயிரைத்

திரும்பிப் பெறுவதற்காக அன்று சதி சாவித்திரி எம னுடன் போராடினாள். இன்று சுசீலா தன் கணவரின் உயிரை எப்படியும் காப்பது என்று தளராத மன உறுதி கொண்டு விட்டாள். ஆகவே அவள் மலைபோல வழியில் நின்றாள். இப்பொழுது அவளுக்கு அசுர பலம் வந்து விட்டது. ''உங்களை விடமாட்டேன்'' என்றாள் சுசீலா ஆனந்தனை நோக்கி.

''ஏன்? என்னை எதற்காகத் தடுக்கிறீர்கள்?'' என்று கோபத்துடன் கேட்டான் ஆனந்தன்.

''ஆனந்தராவ், அறிந்தோ அறியாமலோ அக்கிரமம் செய்யாதீர்கள். முதலில் நன்றாக விசாரித்து, உண்மை யைத் தெரிந்துகொள்ளுங்கள். ஆத்திரப்பட்டு அநீதியை இழைத்துவிடாதீர்கள். இதோ என்னைப் பாருங்கள்.''

''நான் ஒருவரையும் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. எனக்கு எல்லாம் தெரியும். கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா?'' என்று உறுமினான் அவன்.

அப்பொழுதும் அவள் விடவில்லை.

''ஆனந்த், உங்களுக்கு இந்தப் பிடிவாதம் வேண் டாம். வீணாகக் கொடுமை செய்யாதீர்கள்.''

ஆனந்தன் கோரச் சிரிப்புச் சிரித்தான். ''நானா கொடுமை செய்கிறேன்? பேஷ், பேஷ்! நன்றாக இருக் கிறது உங்கள் நியாயம்! இந்தக் கலியுகத்தில் கொடு மைப்பட்டவர்களுக்குக் கெட்ட பெயரா?''

''அப்படி அல்ல, ஆனந்தராவ். 'உண்மையிலேயே கொடுமை நடந்துவிட்டதா? அதைச் செய்தவர் யார்? என்பதை எல்லாம் சரியாக அறிந்துகொள்ளாமல் பழி வாங்கக் கிளம்புவது முறை அல்ல என்றுதான் சொல்ல வந்தேன். நான் சொல்வதைக் கேளுங்கள். அமைதியுடன் கேளுங்கள்.''

''கேட்பதற்கு எனக்கு இப்பொழுது நேரம் இல்லை; எனக்கு எல்லாம் தெரியும். என் ரத்தம் கொதிக்கிறது; என்னைப் போக விடுங்கள்.''

"முடியாது. நான் கூறுவதை நீங்கள் கேட்டுத்தான் ஆகவேண்டும். உங்கள் ஏழைத் தங்கையின் வார்த்தைகளை நீங்கள் கேட்க மாட்டீர்களா? உங்களுக்கு என் மீது இரக்கம் இல்லையா? நம்பிக்கைதான் இல்லையா? நான் உங்களிடம் பிச்சை கேட்கிறேன். உங்கள் காலில் விழுந்து கெஞ்சுகிறேன். உங்கள் விருப்பப்படியே விட்டு விடுகிறேன். ஆனால் ஒரே ஒரு முறை மட்டும் நீங்கள் என் பேச்சுக்கு மதிப்புக் கொடுங்கள். நான் உங்கள் தங்கை அல்லவா?"

இதைக் கேட்ட ஆனந்தன் கல்லாகச் சமைந்து போனான். சுசீலாவின் கனிந்த மொழியையும் கண்ணீரையும் கண்ட அவன் உள்ளம் பாகாய் உருகிவிட்டது.

உடனே அவனுடைய கைகள் தாமாகவே கோடரியைக் கீழே வைத்தன. நெற்றியில் ஆறாய்ப் பெருகி ஓடிக்கொண்டிருந்த வேர்வை வெள்ளத்தைத் துடைத்துக்கொண்டான் அவன்.

பிறகு சுசீலாவை நோக்கி, "யசோதை எங்கே?" என்று அவன் சிம்மத்தைப்போல் கர்ஜித்தான்.

"உள்ளே இருக்கிறாள். இப்பொழுதுதான் வந்திருக்கிறாள்."

ஒரு நிமிடம் மௌனம் நிலவியது. அப்பொழுது காரியாலய அறையில் யசோதையும் மோத்திராமும் பேசுவது இருவர் காதிலும் தெளிவாக ஒலித்தது.

"யசோதா, முதலில் நீ வீட்டுக்குப் போ. என்னை வீணாக மயக்கப் பார்க்காதே. என் நேர்மையைச் சோதிக்காதே. நான் தவறான பாதையில் போகாவண்ணம் நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். அன்றைக்கும் நீதான் என்னைக் காப்பாற்றினாய்."

'நன்றாகக் காது கொடுத்துக் கேளுங்கள்' என்னும் பாவனையில் சுசீலா ஆனந்தனை நோக்கினாள். ஆனந்தனும் அவர்கள் பேசுவதை உன்னிப்பாகக் கவனித்தான்.

மெல்ல மெல்ல ஆனந்தனும் சுசீலாவும் காரியாலய

அறைப்பக்கமாக வந்தார்கள். உள்ளே யசோதையும் மோத்திராமும் பேசிக்கொண் டிருந்தது இப்பொழுது நன்றாக அவர்கள் காதில் விழுந்தது.

''எதற்காகத் தயங்குகிறாய்? போ அம்மா உன் வீட்டுக்கு. போய் ஆனந்தனிடம் மன்னிப்புக் கேள். அவன் பரந்த உள்ளம் படைத்தவன். ஆகையால் உன்னைக் கட்டாயம் மன்னித்துவிடுவான். நானும் உன்னுடன் வருகிறேன். நானும் அவனிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். என் செல்வத்தைக் கண்டு உன் கண்கள் கவரப்பட்டாலும், உன் செல்வந்தான் விலை மதிக்க முடியாதது; அதுதான் அழிவு இல்லாதது. போ; கவலைப் படாதே. ஆனந்தனைப் போன்ற நல்ல கணவனை அடையும் பேறு எல்லாருக்குமே கிடைத்து விடாது, அம்மா; கிடைத்துவிடாது.''

யசோதை விம்மி விம்மி அழுதுகொண் டிருந்தாள்.

''ஆனால், இப்பொழுது நான் அவருடைய முகத்தில் எப்படி விழிப்பேன்?'' என்று கேட்டு அவள் விக்கி விக்கி அழுதாள்.

''வேண்டுமானால் என் சுசீலாவையும் துணைக்கு அழைத்துப் போ. அவள் உன்னை என்றுமே கைவிட மாட்டாள். அவள் மகா உத்தமி. அவள் பேச்சை ஆனந்தன் என்றுமே தட்ட மாட்டான்.''

அப்பொழுது சுசீலா வெகு பெருமையுடன் ஆனந்தனை நோக்கிவிட்டு, விர்ரென்று காரியாலய அறையில் பிரவேசித்தாள்.

மோத்திராமின் உள்ளத்தை அறிந்ததும் அவளுக்கு அளவு கடந்த ஆனந்தம் ஏற்பட்டது. அது பொங்கி வழிந்து போகவே அவள் பெருமிதத்தால் பூரித்துப் போனாள்.

களிப்பு மிகுதியால் அவள் மோத்திராமின் அருகில் ஓடினாள். தன் மிருதுவான கரங்களைப் பரப்பி, மோத்தி

ராமை அன்பொழுகத் தழுவிக்கொண்டாள். மோத்தி ராமும் சுசீலாவை அன்புடன் அணைத்துக்கொண்டார்.

இருவர் கண்களிலும் நீர் பெருக்கெடுத்து ஓடிற்று: இருவரின் கண்ணீரும் ஒன்றாகக் கலந்தது.

உள்ளத்தில் இருந்த உவகைப் பெருக்குச் சிறிது அடங்கியதும், சுசீலாவுக்கு அவருடன் ஏதாவது பேச வேண்டும் என்று தோன்றியது. ''நீங்கள் எவ்வளவு நல்லவர்!'' என்றாள் அவள், தன் கணவரை நோக்கி.

மோத்திராம் அவளுடைய முதுகைத் தடவிக் கொடுத்தவண்ணம், ''அக்கிரமக் குழியில் விழாமல் என் நல்ல குணத்தைக் காப்பாற்றிய தேவி அதோ நிற்கிறாள்'' என்று கூறி, யசோதையைச் சுட்டிக் காட்டினார்.

உடனே சுசீலா யசோதையை நோக்கினாள். பிறகு மீண்டும் ஒரு முறை தன் கணவரைத் தழுவிக்கொண்டு அவருடைய மார்பில் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டாள். இந்த இன்பக் காட்சியைக் காண யசோதையின் மனம் இடந்தரவில்லை.

இதற்குள் ஆனந்தன் அவர்கள் இருந்த இடத்துக்கு வந்தான். எல்லாரும் அவனை ஒரே சமயத்தில் நோக்கினார்கள்.

யசோதை ஓடோடிச் சென்று ஆனந்தன் பாதங்களில் வீழ்ந்து, அவற்றைத் தன் கண்ணீரால் கழுவினாள். அவன் அவளைத் தூக்கி எடுத்து, மனம் மாறிப் போயிருந்த அவளை அருகில் இருந்த சோபாவில் கிடத்தினான். துக்க மேலீட்டால் அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை. ஆகையால் அவன் அவளுடைய அருகில் அமர்ந்து, அவளைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டதும், அவளுக்கு இன்பம் பெருகி உடம்பு புல்லரித்தது.

அப்பொழுது, பக்கத்தில் நின்றுகொண்டிருந்த சுசீலா, ''ஆனந்த், உங்கள் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்தனவா?'' என்று அவனைக் கேட்டாள்.

ஆனந்தன், வெட்கம் பிடுங்கித் தின்ன, இரு கைகளையும் கூப்பிக் கும்பிட்டான். "சுசீலாபாய், அன்பின் உருவான நீங்கள்தாம் இன்று என்னைக் காப்பாற்றினீர்கள். இல்லையேல் என்னுடைய இந்தக் கரங்கள் கோரமான கொலை ஒன்றை அநியாயமாகப் புரிந்திருக்கும்" என்று கண்களில் நீர் முட்டக் கூறினான் அவன்.

"கேட்டீர்களா? ஆனந்தன் கோடரியுடன் வந்திருக்கிறான்" என்றாள் சுசீலா, மோத்திராமைப் பார்த்து.

"எதற்காக?" என்று வியப்புடன் கேட்டார் அவர்.

"தன் பகைவனைப் பழி வாங்க!"

"அப்படியா? பின் நீ ஏன் அவனைத் தடுத்து நிறுத்தினாய்? தண்டனையை ஏற்றுக்கொள்ள நான் தயாராக இருக்கிறேன். நீங்கள் பேசிக்கொண்டிருந்தது என் காதில் விழத்தான் விழுந்தது. நீயும் என்னைக் காப்பாற்றிய தேவி."

"யசோதை?" என்று கேட்டாள் சுசீலா.

"அவளுந்தான் தேவி. அடேடே, அந்தக் கதையைச் சொல்ல மறந்துவிட்டேனே; கேளுங்கள்."

இவ்வாறு கூறிவிட்டு மோத்திராம், திவாகரின் தூண்டுதலின் மேல் தாம் ஆனந்தனின் குடிசைக்குச் சென்றதையும், அங்கே யசோதையிடம் காதல் நாடகம் நடத்தத் துணிந்ததையும், ஆனால் யசோதை அவருக்குச் சரியானபடி 'அர்ச்சனை' செய்து புத்தி கற்பித்து அனுப்பியதையும் விவரமாகக் கூறினார்.

அதைக் கேட்டதும் ஆனந்தன் சொன்னான்: "என் சந்தேகம் என்னும் பனித் திரை விலகிவிட்டது. இதுவரையில் நான் உங்கள் விஷயமாக என்ன என்னவோ தவறாக நினைத்துக்கொண்டிருந்தேன். அவையெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல மறைந்து விட்டன. மோத்திராம் ஸேட், என்னை மன்னித்துவிடுங்கள்."

"இந்த அனர்த்தங்களுக்கு எல்லாம் மூல காரணம் அந்தப் பாவி திவாகர். அவன் எழுதியிருந்த கடிதத்

தைப் படித்தால் யாருக்கும் சந்தேகமும் ஆத்திரமுந் தானே வரும்?'' என்று கேட்டுவிட்டு ஆனந்தன் திவாகரின் கடிதத்தை நீட்டினுன்.

''என் மனத்திலும் சந்தேகம் என்னும் விஷ வித்தை ஊன்றுவதற்கு முயற்சி செய்தான் அந்தச் சண்டாளன், கடிதத்தின் மூலம்'' என்ருள் சுசீலா.

''எனக்கு வந்த கடிதத்தை நான் கிழித்து எறிந்து விட்டேன். இல்லாவிட்டால் அதை உங்களுக்குக் காண்பித்திருப்பேன்'' என்ருர் மோத்திராம்.

''சிலர் கபட உள்ளம் படைத்தவர்களாக இருக்கிருர்கள். அவர்களில் முதல் ஆசாமி திவாகர்'' என்ருள் சுசீலா.

''இந்தக் குழப்பங்களுக்கெல்லாம் திவாகர்தான் அடிப்படையாக இருந்தாலும், மற்ெருரு காரணமும் இருக்கிறது'' என்று கூறினுர் மோத்திராம்.

அவர் என்ன சொல்கிருர் என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் சுசீலாவும் ஆனந்தனும் வியப்புடன் நோக்கினுர்கள்.

''ஆனந்தா, கோபப்படாதே. இந்தத் தப்பு எண்ணங்களுக்கும் தவருன காரியங்களுக்கும் யசோதையின் இச்சைகள் அடிப்படையானவை. அவளுக்கு வசதியுடன் வாழ வேண்டும் என்று மிகுந்த ஆசை இருக்கிறது. நன்ருக உடுக்க வேண்டும், அலங்காரம் செய்து கொள்ள வேண்டும், இன்பமாகக் காலங் கழிக்க வேண்டும் என்றெல்லாம் அவள் விரும்புகிருள். அப்படிப்பட்டவள் என் செல்வச் சிறப்புகளைக் கண்டு மோகம் கொண்டதில் வியப்பு என்ன இருக்கிறது? மாந்தரின் மனம் அதிருப்தி அடைந்தால், அது எப்பொழுது கெட்ட செயலில் பிரவேசிக்கும் என்று சொல்ல முடியாது. இயற்கையின் இந்த விதிக்கு யசோதை எப்படி விலக்காக முடியும்?'' என்று எடுத்துரைத்தார் மோத்திராம்.

சுசீலா அவரைக் குறுக்கிட்டு, ''பொருட் செல்வம்

பல தீச் செயல்களுக்கு மூல காரணம் என்கிறார்களே, அது ஒன்றும் பொய் அல்ல'' என்றாள்.

''இதையெல்லாம்பற்றிச் சிந்திக்கும்போது, எனக்குச் செல்வத்தைக் கண்டாலே அருவருப்பாக இருக்கிறது. நாளெல்லாம் பாடுபட்டு நன்றாக உழைத்துச் சாப்பிடுகிறானே தொழிலாளி, அவனைப்போல் ஆக மாட்டோமா என்று எனக்குத் தோன்றுகிறது. பணம் இருந்தால் பாவச் செயல்களைச் செய்யத்தான் ஊக்கம் பிறக்கிறது'' என்று அங்கலாய்த்துக் கொண்டார் மோத்திராம்.

''எனக்கு என் பிடிவாத குணத்தைக் கண்டு வெட்கமாக இருக்கிறது. புதிய பங்களாவைக் கட்ட வேண்டுமென்று நான் அடம் பிடிக்காமல் இருந்திருந்தால் இவ்வளவு பிணக்கு ஏற்பட்டிராது. ஆனந்தனும் இங்கே வந்திருக்கமாட்டார். கோப தாபங்களும் மன வேறுபாடுகளும் ஒருநாளும் ஏற்பட்டிருக்கப் போவதில்லை. போதும், பங்களாக் கட்டினது! அதை நிறுத்திவிடவேண்டும், அல்லது மாதர் சங்கத்துக்கு அளித்துவிட வேண்டும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. உங்களுக்கு என்ன தோன்றுகிறது?'' என்று சுசீலா மோத்திராமைக் கேட்டாள்.

''சரி, சரி, பேஷான யோசனை. அப்படியே செய்வோம்'' என்று கூறி மோத்திராம் தம் மனைவி சொன்னதை ஆமோதித்தார். பிறகு கொஞ்சம் தயங்கி, எல்லாரையும் நோக்கி, ''மாதர் சங்கத்து நடவடிக்கைகள் பெரிய அளவில் நடைபெறுவதற்காக வருஷத்துக்கு ஆயிரம் ரூபாய் நன்கொடை அளித்து விடுகிறேன். நீ, யசோதை, ஆனந்தன் மூவரும் கூடி ஏதாவது முடிவு செய்யுங்கள்'' என்றார் அவர்.

ஆனால் ஆனந்தன் அதை விரும்பாமல், ''என்னை மட்டும் அந்தப் பணிகளில் எல்லாம் ஈடுபடுத்தாதீர்கள். நான் பேசாமல் வந்த வழியே ஊர் போய்ச் சேருகிறேன்'' என்றான்.

இப்பொழுது யசோதையின் மனத்துக்குச் சிறிது நிம்மதி ஏற்பட்டது. ஆகவே, அவள் எழுந்து உட்கார்ந்தாள்.

யசோதையும் சுசீலாவும் ஒருவரை ஒருவர் நோக்கிக் கொண்டனர். இருவரும் ஏதோ முணுமுணுத்தார்கள். உடனே சுசீலா யசோதையின் அருகில் சென்ருள். இருவரும் அன்புடன் தழுவிக்கொண்டனர். இருவருடைய கண்களிலும் நீர் மல்கியது. அவர்கள் வாய் திறந்து பேசாமலே மனத்தில் உள்ளதைக் கண்ணீர் மூலம் வெளிப்படுத்தினர்.

சுசீலா யசோதையைக் கூர்ந்து கவனித்தாள். 'இந்தப் பேரழகியைக் கண்டு யார்தாம் சொக்கிப் போகாமல் இருப்பார்கள்? இவளைப் பார்த்து மோத்திராம் பித்துப் பிடித்துப் போனுர் என்ருல், அதில் வியப்பே இல்லை. அவரைத்தான் நாம் எப்படிக் குற்றம் கூற முடியும்? பெண்ணுன எனக்கே இவளுடைய எழிலைக் கண்டு அசூயை ஏற்படும்போது மற்றவர்களைப்பற்றிக் கேட்பானேன்? அவ்வளவு எதற்கு? நான் என்ன, அழகு ராணியா? என்னைக் கண்டு திவாகர் எத்தனை ஆட்டம் போட்டான்? மனித உள்ளமே இப்படித்தான். அது குரங்குக்குச் சமானம். அது எப்பொழுது, எந்தப் பக்கம் தாவிப் பாயும் என்று அதைப் படைத்த பிரம்மாவால்கூடச் சொல்ல முடியாது. அப்படி இருக்கையில், நாம் யாரைத்தான் குற்றம் சொல்ல முடியும்? தங்கள் செய்கைகளைக் கண்டு இப்பொழுது எல்லாருக்குமே மன வருத்தம் உண்டாகி இருக்கிறது. சுக வாழ்வை விரும்பி வந்த யசோதையைச் சொல்வதிலும் அர்த்தம் இல்லை. ஏனென்ருல் பணம் என்ருல் யாருக்குத்தான் கசக்கும்? நானே திவாகரை நிராகரித்துச் சீமானுன மோத்திராமை மணந்துகொள்ள வில்லையா? ஆனுல் ஒரே ஒரு வேறுபாடு. நான் அவருடைய தர்ம பத்தினி; எல்லாவற்றுக்கும் உரிமை கொண்டவள். ஆகையால் என்

நோக்கம் எதுவானாலும் அது உலகத்தின் கண்முன் கெட்டதாகத் தோன்றுது. ஆனால் இதே நோக்கத்தோடு யசோதை வந்தாலும், இவள் பிறன் மனைவியாதலால், இவளை உலகம் தூற்றத்தான் தூற்றும். இதுதான் உலக இயல்பு. ஆனால் நான் மட்டும் அப்படி நினைக்க மாட்டேன். இவளைக் குறைசொல்ல மாட்டேன்' என்று சுசீலாவின் மனம் எண்ணத் தொடங்கிற்று. ஏனென்றால், யசோதையைத் தன் தங்கைக்குச் சமானமாக அவள் கருதத் தொடங்கினாள்.

ஆகையால் அவள் யசோதையை இரக்கத்துடன் நோக்கினாள். ''யசோதா, நீ இங்கே தங்கப் போகிறாய் அல்லவா?'' என்று அவளைக் கேட்டாள்.

யசோதை ஆனந்தனைப் பார்த்தாள்.

''எதற்காக இந்த உபசாரம், சுசீலாபாய்? எங்குமே செல்வதில்லை என்று நான் இப்பொழுது தீர்மானித்துவிட்டேன். இன்றைக்கே நான் ஊருக்குக் கிளம்பப் போகிறேன்'' என்று ஆனந்தன் பதிலளித்தான்.

''சேசே, அது எப்படி முடியும் ஆனந்தராவ்? நீங்கள் ஊருக்குப் போனால் உங்கள் திட்டமெல்லாம் குட்டிச் சுவர்தான். பேசாமல் மால்வனுக்குப் போங்கள். அந்த ஆலை உங்களுடையது. அதற்கு நீங்கள்தாம் தலைவர். நீங்கள் புதிய கப்பல் ஒன்றைக் கட்டத் திட்டமிட்டிருக்கிறீர்கள் அல்லவா? அதை நிறைவேற்ற வேண்டாமா? கிராமத்துக்குச் சென்றால் அதை முடிக்க முடியுமா? நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். ஆகையால் மால்வனுக்குச் செல்லுங்கள். யசோதைதான் இப்பொழுது மாதர் சங்கத்து நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று சுசீலா உரிமையுடன் அதிகாரம் செய்தாள்.

''நான் இங்கே எப்படி இருக்க முடியும்?'' என்று கேட்டாள் யசோதை பயத்துடன்.

''நீ இங்கே இருக்க வேண்டும் என்பதில்லை. தினந்தோறும் உன்னை அழைத்துப்போக மால்வனுக்கு

மோட்டார் வரும். தவிர, மாதர் சங்கத்து நிர்வாகிக்காக, பங்களா, மோட்டார் எல்லாமே இப்பொழுது இருக்கும்'' என்று பதில் அளித்தாள் சுசீலா.

இதற்குள் மோத்திராமும் விடவில்லை.

''ஆனந்தா, பணத்தால் நீ ஏழையானாலும், புத்தியில் செல்வச் சீமான். பொருட் செல்வத்தை அறிவுச் செல்வத்தால் என்றுமே அடைந்துவிடலாம். ஆனால் அறிவுச் செல்வத்தை அப்படி அடைய முடியாது. அதை நோக்கும்போது, என்னைவிட நீதான் உயர்ந்தவன்'' என்று ஆனந்தனை நோக்கிக் கூறினார்.

பிறகு அவர் யசோதையின் பக்கம் திரும்பி, ''யசோதா, உன் கணவனை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவரும் விஷயத்தில் நீ அதிகக் கவனம் செலுத்த வேண்டும்; அதற்கு உன்னால் இயன்ற மட்டும் உதவி செய்ய வேண்டும். நேர்த்தியான உடை உடுப்பது, அலங்காரம் செய்துகொள்வது, கவலையின்றித் திரிவது இவைகளே வாழ்க்கையின் லட்சியங்கள் அல்ல. ஆனந்தனின் ஆராய்ச்சி மிகவும் விலையுயர்ந்தது. அது மட்டும் வெற்றி அடைந்தால், அவன் ஒரே நாளில் நவகோடி நாராயணன் ஆகிவிடுவான். ஆகையால் நீ அவனிடம் அதிகக் கவனம் செலுத்து. புத்திசாலியான கணவனுக்குப் பகுத்தறிவுள்ள மனைவி, கிடைத்துவிட்டால், அது சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்வதற்கு ஒப்பாகும். அந்தப் புத்தியைக் கொண்டு வீட்டில் தங்கக் கட்டிகளாக அடுக்கிவிடலாம். அப்படி மனைவி, கணவனுக்குத் தோதாக இல்லாவிட்டால், அதே புத்தி, தங்கக் கட்டிகளுக்குப் பதிலாகத் தெருப்புழுதிக்குச் சமானமாகிவிடும். இதை நன்றாக நினைவில் வைத்துக்கொள். ஆனந்தனிடம் விசேஷ கவனம் இருக்கட்டும். ஆனந்தா, இன்றுமுதல் நீயும் நானும் மால்வணிலுள்ள ஆலையின் பங்குதார்கள். ஆகவே அது உனக்கும் சொந்தமாகிவிட்டது. அதை வளர்ப்பதோ வீண் அடிப்பதோ இனி

உன் கையில்தான் இருக்கிறது. என்ன, சரிதானே?'' என்று கேட்டார் மோத்திராம்.

கண்களில் நன்றி உணர்ச்சி பெருக்கெடுத்து ஓட, ஆனந்தன் அவரை வணங்கினான்.

''சரி, போய் வருகிறேன்'' என்றான் அவன்.

''சரி, போய் வா'' என்றார் அவர்.

யசோதை மனம் நிறைந்தவளாகச் சுசீலாவைப் பார்த்தாள்.

பிறகு ஆனந்தனும் யசோதையும் வெளியே வந்தனர்.

ஆனந்தன் கோடரியைத் தோளில் சார்த்திக் கொண்டு படி இறங்கிச் சென்றான். யசோதையும் அவனைத் தொடர்ந்து சென்றாள்.

அப்பொழுது கதிரவன் மெல்லிய கிரணங்களை வீசிக்கொண் டிருந்தான். பனித் திரை விலகி, ஒளி வீசிக்கொண் டிருந்தது. எல்லோர் மனத்திலும் இருந்த கலக்கம், ஐயம், சங்கடம், கொதிப்பு என்னும் பனித் திரை அகன்று பளிச்சென்று இருந்தது. நாற்புறமும் ஒரே வெளிச்சம். பனி மறைந்த அந்தப் பகல் நேரம் ஆனந்தனை மிகவும் கவர்ந்தது. அவனுடைய உள்ளமும் பிரகாசமடைந்தது. அதனால்தானோ என்னவோ அவன் தலை நிமிர்ந்து கம்பீரமாக நடக்கலானான்.

யசோதை அவனுக்குப் பின்னால் தலை குனிந்தவாறே சென்றுகொண் டிருந்தாள். அவளுடைய மனம் சோர்ந் திருந்தது. ஆகவே அவள் ஆமை வேகத்தில் அடி எடுத்து வைத்துக்கொண் டிருந்தாள்.

சிறிது தூரம் சென்றதும் யசோதை தலை நிமிர்ந்து உயரப் பார்த்தாள். மாமரங்களில் மாம்பழங்கள் கொத்துக் கொத்தாகக் குலுங்கிக்கொண் டிருந்தன. அவற்றிலிருந்து வந்த இனிய நறுமணம் அந்தப் பிரதேசம் எங்குமே பரவி இருந்தது. மரங்களின் மேலிருந்து பறவை இனங்கள் அந்த மாங்கனிகளைச்

சுவைத்துப் பார்த்துக்கொண் டிருந்தன. அப்பொழுது தற்செயலாக இணையாக இருந்த பறவைகளின்மேல் யசோதையின் கவனம் சென்றது.

ஒரே மரக் கிளையில் ஒன்றை ஒன்று ஒட்டினாற் போல் அந்த இணை உட்கார்ந்திருந்தது. ஆண்பறவை, தன் அலகால் மாம்பழத்தைக் கொத்தி, அந்த இனிய கனிரசத்தைப் பேடைக்கு ஊட்டிக்கொண் டிருந்தது.

'கணவன் மனைவி என்றால் இப்படி அல்லவா இன்பமாக இருக்க வேண்டும்?' என்று யசோதை நினைக்கத் தொடங்கினாள்.

அந்தக் காதற் காட்சியை இமை கொட்டாமல் அங்கேயே நின்று பார்க்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. அந்த நினைவு வரவே அவள் அன்புடன் ஆனந்தனைப் பார்த்தாள். அவன் வெகு தூரம் சென்றிருந்தான்.

அதே சமயம் ஆனந்தனும் திரும்பிப் பார்த்தான். யசோதை சோர்ந்துபோய் மெல்ல நடந்து வருவதைக் கண்டு அவனுக்கு இரக்கம் உண்டாயிற்று. ஆகவே, அவள் வருமட்டும் அவன் அங்கேயே நின்றான். அருகில் வந்ததும் யசோதை ஆனந்தனின் பாதங்களைத் தொட்டுத் தன் கண்களில் ஒத்திக்கொண்டாள்.

ஆனந்தன் அவளுடைய தோள்களைப்பற்றித் தூக்கி, அவளைத் தன் மார்புடன் அணைத்துக்கொண் டான். அவளுக்கு அது இதமாகவே இருந்தது. இரு உள்ளங்களும் ஒன்றாகக் கலந்தன. ''இனி நீங்கள்தாம் என் தெய்வம்'' என்று பெண் உள்ளம் ஆண் உள்ளத்தி னிடம் கூறுவதுபோல் இருந்தது.

அந்தச் சமயம் அரசமரத்தின் மேல் இருந்த ஓர் ஆண்பறவை கூவிற்று: ''குஹூ குஹூ!''

அதற்கு மாமரத்தின்மேல் இருந்த பேடை விடை அளித்தது: ''குஹூ குஹூ!''

முற்றும்



## பனித்திரை

**ப**டிப்பில்லாத பட்டறைத் தொழிலாளி ஆனந்தனின் மனைவி யசோதை படித்த பெண். சொகுசு வாழ்க்கை வாழவேண்டும் என்ற எண்ணமுள்ளவள். செல்வரான மோத்திராம் சேட் ஆனந்தனைப் பங்களாக் கட்டும் வேலையில் அமர்த்துகிறார். அங்கே ஆனந்தன் சேட்டின் மனைவி சுசீலாவின் அபிமானத்தைப் பெறுகிறான். கல்லூரிக் காதல் வாழ்வை நினைந்து முறை தவறிச் சுசீலாவுடன் பழகி அவமானப் படுகிறான் என்ஜினீயர் திவாகர். இதனால் வெகுண்ட திவாகர், ஆனந்தன் · யசோதை இவர்களிடையே வேற்றுமையை ஏற்படுத்த முயல்கிறான். இதே சமயம் சேட்டிடம் யசோதைக்கும் சபலம் ஏற்படுகிறது. சந்தேகம் என்னும் பனித்திரை எப்படி விலகி எல்லோரும் ஒன்று படுகிறார்கள் என்பதை ரசமாக எடுத்துக் கூறுகிறது இந்த நாவல்.